இந்த நூல் அச்சிட்டு
வெளியிடுவதற்கு நிதிஉதவி நல்கிய
திருமலை திருப்பதி தேவஸ்தானத்திற்கு
நன்றி!

கதையமைப்பில்

# வான்மீகியும் கம்பனும்

**இ. மார்ட்டின் ஆரோக்கியராஜ்**
விரிவுரையாளர்
தமிழாய்வுத்துறை
பிஷப் ஹீபர் கல்லூரி (தன்னாட்சி A+)
திருச்சிராப்பள்ளி - 17

**காருண்யா பதிப்பகம்**
அன்னை இல்லம்
சிவபுராணி, திருலோகி-அஞ்
தஞ்சாவூர் - 609 804

நூலின் பெயர் : கதையமைப்பில் வான்மீகியும் கம்பனும்

முதற் பதிப்பு : 2007

படிகள் : 1000

உரிமை : ஆசிரியருக்கு

வெளியீடு : காருண்யா பதிப்பகம்
அன்னை இல்லம்
சிவபுராணி, திருலோகி - அஞ்சல்
தஞ்சாவூர் மாவட்டம் - 609 804

பக்கங்கள் : 148

விலை : ரூ. 75/-



---

அச்சாக்கம் : ஸ்ரீநிதி ஆப்செட் பிரிண்டர்ஸ்,
40, அல்லிமால் தெரு,
திருச்சிராப்பள்ளி - 8.
செல் : 94431 - 83394

முனைவர் **பெ. சுபாசு சந்திரபோசு**
தலைவர், தமிழாய்வுததுறை
பிஷப் ஹீபர் கல்லூரி (தன்னாட்சி A+)
திருச்சிராப்பள்ளி - 17.

# மதிப்புரை

தமிழ் இலக்கிய மரபில் கம்பராமாயணம் காவியப் படைப்பின் உச்சம இது இந்திய அளவில் எல்லா மொழிகளிலும் எழுதப்பட்ட ஒரு கதை.

பிஷப் ஹீபர் கல்லூரியில் தமிழாய்வுத்துறையில் பணியாற்றும திரு.இ.மார்ட்டின் ஆரோக்கியராஜ் *கதையமைப்பில் வான்மீகியும் கம்பனும* என்னும் இந்நூலை எழுதியுள்ளார். இந்நூல் இராமாயணத்தை வான்மீகி-கம்பர்ஆகிய இருவரின் படைப்பு நோக்கில் ஒப்பாய்வு செய்துள்ள நூல்.

இந்தியாவில் பல இராமாயணம் இருந்தாலும், வான்மீகி தான் எழுதிய இராமாயணம் என்பதை அடையாளப்படுத்த *வான்மீகி இராமாயணம்* என்று பெயர்க் காரணத்தைக் குறிப்பிட்டுள்ளார். அதுபோல் கம்பர் எழுதிய இராமாய ணத்துக்கு இராமாவதாரம், இராமகாதை என்றாலும் கம்பராமாயணம் என்பதே நிலைபெற்றுள்ளதை நூலாசிரியர் விளக்கியுள்ளார்.

வான்மீகி காலம் கடைச்சங்கம் என்றும், கம்பரின் காலம் கி.பி.பன்னிரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதி என்றும் கால ஆராய்ச்சியும இந்நூலில் இடம் பெற்றுள்ளது. இத்துடன் கம்பராமாயணம, தொல்காப்பியம. சங்க இலக்கியம், காப்பியங்கள், பக்தி இலக்கியங்கள், நாடகங்கள் வரை இடம பெற்ற கதைப்போக்கும், இராவண காவியம் கூறும் எதிர்நிலைக் கருத்தும எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

*வான்மீகி - கம்பர் கதைக் கட்டமைப்பு* என்னும் தலைப்பில் அயோத்தியா காண்டம் அடிப்படையில் ஒப்பிடப்பட்டுள்ளது. வான்மீகியும் கம்பரும் பரதன நாடாள விரும்பாமல் அண்ணன் இராமனைத் தேடிச் செல்லும மனப்பாங்கையும், இராமனின் கூற்றுப்படி நாடாள ஏற்று வருவதும் இராமனின் திருவடிகளை வணங்கி ஆட்சி செய்வதும் ஒற்றுமையுடைய கதையமைப்பாகும

அரசியல நெறியில் பரதன் காட்டும் அறநெறி ஓர் உலக நீதியாக வான்மீகியும், கமபரும உணாததியுள்ளனா.

*அயோததியா காணடத்தில் கம்பரின் நீக்கம்* என்ற தலைப்பில் வானமீகியிலிருநது கம்பா செய்துள்ள மாற்றங்கள் விவரிக்கப்பட்டுள்ளன. இராமன கானகம செலவதைக் கேள்வியுறுவதாகக் கம்பர் மூலம் இலக்குவன் அறிந்ததாகக கமபா காடடியுளளாா. வான்மீகியில் இராமன் தயரதன் கோசலை ஆகிய இருவரையும காணச சென்றபோது இலக்குவன் உடன் செல்வான். ஆனால கமபரில் இலக்குவனை இச்சந்திப்புகளில் நீக்கம் செய்துள்ளமை எடுத்துககாட்டபபட்டுள்ளது. இது காவிய மாந்தர் படைப்பில் கம்பர் செய்துள்ள புதுமையாகும்

வான்மீகியில் இராமனின் பண்பு நலன்களை அரசவையில் மக்கள் புகழ்நது பேசுகின்றனர். ஆனால் கம்பர் குலகுருவான வசிட்ட முனிவர் மூலம் இராமனின் குணநலன்கள் பேசபபட்டுள்ளது. இது வான்மீகிக்கும் கம்பருக்கும் படைப்பில் காணும் மாற்றமாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

*அயோத்தியா காண்டத்தில் கம்பரின் படைப்பு* என்னும் பகுதியில் நூலாசிரியர் கம்பரின் தனித்துவத்தை எடுத்துரைத்துள்ளார். வான்மீகி இராமனை மனிதருள் மாமனிதராகப் படைத்துள்ளார். ஆனால் கம்பர் இராமனைத் திருமாலின் அவதாரமாகப் படைத்துள்ளார். இது வான்மீகி - கம்பர் இடையே காணும் கருத்தியல் அணுகுமுறை எடுத்துக்காட்டும் பகுதியாகும்.

இந்நூலில் கம்பர் தமிழ் மரபையும், பண்பாட்டையும் மையப்படுத்தி இராமாயணத்தைப் படைத்துள்ள தன்மைகள் விரிவாக ஆராயப்பட்டுளளன.

இந்நூலாசிரியர் இ.மார்ட்டின் ஆரோக்கியராஜ் வான்மீகி - கம்பர் காவியஙகளை மறுவாசிபபு செய்து ஒப்பாய்வு செய்துள்ளாா இந்நூல் ஆராயசசியாளாகளுககும, ஆசிரியாகளுககும் ஒபபாய்வுககுப் பயன்படும் நோககில் எழுதப்பட்டுள்ளது

நூலாசிரியா இ.மாாடடின ஆரோக்கியராஜ ஒபபாயவுத துறையில் மேலும சிறகக உலகக காப்பியஙகளையும் ஒப்பிட்டு ஆராய வாழத்துகிறேன்.

**- முனைவர் பெ. சுபாசு சந்திரபோசு**

மேஜா முனைவா **ச. சோமசுந்தரம்**
இணைபபேராசிரியா & ஆயவு நெறியாளா
பிஷப ஹீபா கலலூரி (தனனாடசி A+)
திருசசிராபபளளி - 17

# அணிந்துரை

*யாமறிநத புலவரிலே கமபனைபபோல*

*வளளுவாபோல இளஙகோவைப போல*

*பூமிதனில யாஙகணுமே பிறநததிலலை*

*உணமை வெறும புகழசசி யிலலை*

எனறாா பாரதியா

அவரறிநத புலவாகள எனறு சொலல வருமபோது கம [illegible] முதலில முனனால வநது நினறது காபபியச சுவை ததுமபப [illegible] காதையைத தநத கவிசசககரவாததி தனது படைபபாறறலால [illegible] வனமையால இனறளவும இலககியப பரபபில தனியிடம புகழ் [illegible] பெறறுளளாா இலககிய நிலையிலும அரசியல நிலையிலும [illegible] நிலையிலும வாதப பிரதிவாதஙகளுககு உடபடடு வாழநதும வளாநதும வருசிற மேனமையைக கமபன காவியம பெறறுளளது எததனை யெததனையோ விமாசன ஆயவு நூலகளுககுக களமாகி வரும கருதது வளததையும அழகு நலததையும கலை நயததையும கொணடு கமபன காவியம பொலிவு பெறறுளளது

கமபன தன இராம காதையையும, கமபருககுக கதை கொடுததா ரெனும வானமீகியின படைபபையும ஒபபிடடு உரசி கமபன காவியததின தனித தனமைகளை வெளிபபடுததும முயறசியாக திரு இ மாாடின ஆரோககியராஜ அவாகளின இநத நூல விளஙகுகிறது வானமீகியையும கமபனையும ஆழநது பயினறு, அககாபபிய ஆசிரியாதம நூலகள குறிதது வெளிவநதுளள திறனாயவுகளையும கருததூனறி பயினறு, தனது ஆயவுச சிநதனையையும எணண நுடபஙகளையும இயைய வைதது எழுதபபடட தாக இநநூலை

உணர்கிறேன். 'உள்ளதன் நுணுக்கம்' தேடுதல் ஆய்வு என்றால், பகுத்தும் வகுத்தும் நுணுகிப் பார்த்துத் தொகுத்தும தருவதாக நூற் கருத்துக்கள் அமைநதுள்ளன. வான்மீகியையும் கம்பரையும் அவர்தம் காலத்தையும் கருத்தில் கொண்டு, அரசியல் வரலாற்றுச் சமுதாயச் சூழல்களை உள்ளடக்கிக் காப்பியப் பொருளை அவர்கள் அணுகியுள்ள திறத்தினை சான்றுகளோடு நூலாசிரியர் எடுத்துரைத்துள்ளார். மேலும் முன்னூலாகிய வான்மீகத்தில் கூறப்படாத பல புதிய கருத்துக்களை, காட்சி களை சிந்தனைகளை கம்பர் தம் காவியத்தில் படைத்துள்ள விதத்தையும விளக்கியுள்ளார். இராமனை மனிதரில் சிறந்த மாணிக்கமாக வான்மீகி படைக்க, திருமாலின் அவதாரமாகக் கம்பன் படைத்துள்ள பான்மையும் அதற்கேற்ப நிகழ்ச்சிகளையும் கூற்றுக்களையும் வடிவமைத்துள்ள திறமும் நூலாசிரியரால் திறம்பட வெளிப்படுத்தப் பட்டுள்ளமை பாராட்டிற்குரியது. நூலை வாசிப்போருக்கு நுண்மையான பல தகவல்களை நூல் வழங்குகிறது.

கம்பன் காவியத்தின் மிகப்பெரும் சிறப்பு, காவியத்தன்மைகளைத் தமிழ் மரபுக்கும் தமிழ்ப் பண்பாட்டுக்கும் ஏற்ப அமைத்து தந்தமையாகும். தமிழ் இலக்கிய மரபுக்கும், தமிழர்தம் வாழ்வியல் போக்குக்கும் ஏற்ப இராம காதை கதைப்படுத்தப்பட்டுள்ள நேர்த்தியை நூலாசிரியர் இ.மார்ட்டின் ஆரோக்கியராஜ் இனங்கண்டு காட்டியுள்ளார். காப்பியக் கட்டமைப்பில் வான்மீகியும் கம்பரும் கையாண்டுள்ள படைப்பாக்கத் திறன்களையும், உத்திகளையும், மாறுபட்ட காட்சியமைப்புகளையும் இந்த நூல் எடுத்துரைத் துள்ளது. வான்மீகியும் கம்பரும் மாறுபாடு காட்டும் இடங்களைக் காரண காரியங்ளோடு, சூழலைச் சுட்டி ஆசிரியர் விளக்கியுரைத்துள்ளமை பொருத்தப்பாடு பெற்றுச் சிறக்கிறது.

தமிழ் இலக்கியப் பரப்பில் காப்பிய இலக்கிய வகைக்கு வளம் சேர்க்கும் இந்த நூலை எழுதியுள்ள இ.மார்ட்டின் ஆரோக்கியராஜ் அவர்களை மனதாரப் பாராட்டுகின்றேன். மேலும் பல நல்ல நூல்களைப் படைத்துச் சிறந்திட வாழததுகிறேன்

*- மேஜர். முனைவர் ச.சோமசுந்தரம்*

# நன்றியுரை

நூல் வடிவம் பெறுகின்ற காலத்து எனக்குத் துணைநின்ற அன்பு நெஞ்சங்களை நன்றியுடன் நினைத்துப் பார்க்கின்றேன்.

இந்நூலினை வெளியிடுவதற்கு நிதிஉதவி வழங்கியருளிய திருமலை, திருப்பதி தேவஸ்தானத் திற்கு என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

தலைசிறந்த கல்லூரியாகத் தனித்தன்மை யுடன் திகழும் திருச்சி, பிஷப் ஹீபர் கல்லூரியில் என் பணி சிறக்கவும், படைப்புருவாக்கத்திறகு ஊக்கமும் ஆக்கமும் அளித்துவரும் கல்லூரி நிர்வாகத்தின ருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

நூல்கள் வெளியிட ஊக்கப்படுத்தி வரும் எம் கல்லூரி முதல்வர் முனைவர் ம.மார்க்கஸ் தீபன் பூமிநாதன் அவர்களுக்கும், எப்பொழுதும் ஆலோ சனை நல்கி அதனை செயல்வழிப்படுத்திட தூண்டு கோளாகவும், இந்நூலுக்கு வாழ்த்துரை வழங்கிய எம்முடைய துறைத் தலைவர் முனைவர் பெ.சுபாசு சந்திரபோசு அவர்களுக்கும்,

தாயினும் சாலப்பரிந்து என் கல்விப்பணிக்கு எப்பொழுதும் மகிழ்வோடு ஊக்கமும் ஆக்கமும் அளித்து, இந்நூலுக்கு அணிந்துரை வழங்கிய என் பேராசிரியர் மேஜர் முனைவர் ச.சோமசுந்தரம் அவர்களுக்கும்,

நூல் வெளியீட்டுக்குத் தூண்டுகோலாக இருந்த பேராசிரியர் முனைவர் இரா.தாமோதரன், என் சகோதரி விரிவுரையாளர் இ.ரீட்டாமேரி அவர்களுக்கும்,

தம் பணிகள் பல இருப்பினும் அதனைப் பொருட்படுத்தாது நூல் சிறப்புற அமைய, வேண்டிய உதவியாற்றிய நண்பர்கள் விரிவுரையாளர்கள் முனைவர் இரா.மகிழேந்தி, முனைவர்.ப. கிருஷ்ணன் அவர்களுக்கும்,

அவையத்து முந்தி இருப்பச் செய்து என்னை உருவாக்கிய தாய் தந்தையருக்கும், என் அறிவுக் கண்ணை முதல் கீறல் இட்டு ஒளியேற்றிய ஞான ஆசிரியர் திரு.ஞானசேகரன் அவர்களுக்கும்,

சிறப்பாக இந்த நூலினை அச்சாக்கம் செய்து வடிவமைத்துள்ள ஸ்ரீநிதி ஆப்செட் பிரிண்டர்ஸ் உரிமையாளர் திரு.பொன்.செந்தாமரைக் கண்ணன் அவர்களுக்கும்,

மேலும் பல்வேறு நிலைகளில் துணைநின்ற அன்பு உள்ளங் களுக்கும் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

*- இ. மார்ட்டின் ஆரோக்கியராஜ்*

# சுருக்க விளக்கக் குறிப்புகள்

| | | |
|---|---|---|
| அகம் | - | அகநானூறு |
| அ.ப.ப. | - | அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பதிப்பு |
| ஆர.காண். | - | ஆரணிய காண்டம் |
| உ.வே.சா. | - | உ.வே.சாமிநாத ஐயர் |
| க.இராமா. | - | கம்ப இராமாயணம் |
| கலி. | - | கலித்தொகை |
| கா. | - | காதை |
| காண். | - | காண்டம் |
| கிட்.காண். | - | கிட்கிந்தா காண்டம் |
| ச. | - | சருக்கம் |
| சரு. | - | சருக்கங்கள் |
| சிலம். | - | சிலப்பதிகாரம் |
| சீவக. | - | சீவக சிந்தாமணி |
| சுந்.காண். | - | சுந்தர காண்டம் |
| சூ | - | சூத்திரம் |
| தொல்.பொருள். | - | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| நூ. | - | நூற்பா |
| ப | - | பக்கம் |
| பக் | - | பக்கங்கள் |
| பா | - | பாடல் |
| பாசு | - | பாசுரம் |
| பாட. | - | பாடல்கள் |
| புறம். | - | புறநானூறு |
| மணி. | - | மணிமேகலை |
| வ | - | வரி |
| வரி | - | வரிகள் |
| வா.இராமா. | - | வான்மீகி இராமாயணம் |



# பொருளடக்கம்

# முன்னுரை

'உயர் கம்பன் பிறந்த தமிழ்நாடு' என பாரதியார் போற்றுவர். 'கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும்' என்பது பழமொழி. தமிழர்களாகிய நாம் இலக்கிய உலகில் பெருமிதத்தோடு நிமிர்ந்து நிற்பதற்கு உலக மகா கவிஞனாகப் போற்றப்படும் கம்பனே காரணம் ஆவான். தமிழ் காப்பியங்களில் 10,500 பாடல்களைப் பெற்று நீண்ட நெடிய, புகழ் பெற்றதாக விளங்குவது கம்பராமாயணம்.

சொல்லாற்றல், பொருளமைதி, அறநெறி, சகோதரத்துவம், பொதுமை உணர்வு, பரம்பொருள், ஞான உணர்வு என எல்லா நிலைகளிலும் உயர்வு பெற்றுத் திகழ்கிறது இக்காப்பியம். இத்தகைய சிறப்புப் பெற்ற காப்பியத்தைப் படைத்த கம்பருக்குக் கதை கொடுத்தவர் வான்மீகி.

கதைத் தலைவனால் புகழ்பெற்றவர் வான்மீகி. கவிதைத் தன்மையால் புகழ் பெற்றவன் கம்பன். வான்மீகி இராமனை மனிதப் பண்பில் உயர்ந்தவனாகக் காண, கம்பன் அவனை மனித வடிவில் வந்த தெய்வமாக உயர்த்திக் காட்டுகின்றார். மனிதகுலம் பின்பற்ற வேண்டிய பண்பாட்டு ஒழுக்க நெறியையும், தெய்வ நெறியையும் காப்பியம் முழுதும் இழையோடச் செய்கின்றான் கவிச்சக்கரவர்த்தி கம்பன்.

யமுனை நதியைக் கடக்கும்போது சீதை யமுனையை வழிபட்டதாக வான்மீகம் கூறும். 'தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள்' என்ற வள்ளுவரின் வழி, இராமனையன்றி வேறு யாரையும் வணங்காதவளாகக் கம்பன் மாற்றம் செய்கின்றார்.

இராமனும் இலக்குவனும் காட்டில் மான்களை வேட்டையாடி வந்ததை வான்மீகம் கூறும். கம்பர் இராமனை உலக உயிர்கள் அனைத்தையும் ஒன்றெனக் கொண்டு ஒழுகும் உள்ளத்தானாக,

*கொல்லன் புலாலை மறுத்தானைக் கைகூப்பி*

*எல்லா உயிரும் தொழும்*

என வள்ளுவரின் குறளுக்கு ஏற்பப் படைக்கின்றார். வாய்மையைக் காக்கும் பொருட்டு, தயரதன் தன்னையே ஈன்ற செயலை வெளிப்படுத்துமுகமாக, சிபி என்ற சோழ மன்னன் மரபின் வந்தவனாகக் கம்பர் படைக்கின்றார். இராமன் காடேக வேண்டிய சூழலில், உயிரும் உடலுமாக ஒன்றிய வாழ்க்கை வாழ்ந்தவர்களின் காதல்வழி அன்பினை, பிரிவுத்துயர நிகழ்ச்சியை, 'நின் பிரிவினும் சுடுமோ பெருங்காடு' என தமிழ் இலக்கிய மரபினை ஒட்டிப் படைத்துள்ளார்.

எனவே, இவ்விருவரது படைப்புக்களையும் ஒப்பு நோக்குவதன்வழி, படைப்பாக்கத் தன்மைகளைச் சிறப்புற அறிந்து கொள்ளவியலும். இருப்பினும் முழுமையாக இவவிருவர் படைப்புக்களையும் ஒப்புநோக்கின் நூல் பெரிதும் விரியும் என்பதால் 'அயோத்தியா காண்டம்' பகுதி மட்டும் இங்கு நூலாக உருப்பெற்றுள்ளது.

# இராமாயணம்
# ஒரு வரலாற்றுப்பார்வை

## தோற்றுவாய்

இந்நூல் வெவ்வேறு காலத்தில் வாழ்ந்திருந்த இருபெருங் கவிஞர்கள் ஒரே கதைப் பகுதியை எவ்வாறு சித்திரித்துள்ளனர் என்பதை மதிப்பிடும் நோக்கில் அமைவது. இந்நூல் இவ்விரு நூல் ஆசிரியர் - காலம் - வாழ்ந்த நிலப்பகுதி முதலியன பற்றிய துல்லியமான மதிப்பீட்டின் மேல் மட்டுமே நிகழ்த்த வல்லது. காலத்தாலும் - இடத்தாலும் - மண்ணின் மரபுகளினாலும் கதை மாற்றங்கள் நிகழ்வது தவிர்க்க இயலாதது. இவ்வகையில் இந்நூலுக்கு வான்மீகி, கம்பர் வாழ்வியல் பற்றிய ஒரு வரலாற்றுப் பார்வை இன்றியமையாததாகிறது.

## இராமாயணம்

பாரத மக்களால் இருபெரும் இதிகாசங்கள் என வழங்கப் பெறும் சிறப்புக்குரியன இராமயணமும், மகாபாரதமும். இவற்றுள் இராமாயணம் வடமொழிக் காப்பியங்களுக்கெல்லாம் ஆதிகாவியமாக விளங்குகிறது. இத்தகு சிறப்பு வாய்ந்த இராமாயணத்தை வான்மீகி வடமொழியில் இயற்றியுள்ளார்.

## இராமாயணம் - பெயர்க்காரணம்

இராமாயணம், வான்மீகி இராமாயணம் என்ற பெயராலேயே இன்று வழங்கப்பெறுகிறது. இராமாயணம் என்ற சொல்லுக்குப் பொருள் கூறும் ஸ்ரீமத் இராமாயண பீடிகை இராமனுடைய சரித்திரத்தைச் சொல்லும் நூல் என்று பொருள் கூறுகிறது.[1] அ.ப. பதிப்பு இராமனுடைய வடிவழகினையும், குண நலன்களையும், சிறந்த செயல்களையும் அறிவிப்பது என்பதே இராமாயணம் என்பதின் பொருள் என்கிறது.[2] இராமன் இந்நூலின் தலைவனாதலால் அவன் சரித்திரத்தைக் கூறும் இக்காவியம் இராமாயணம் என்று பெயர் பெறல் பொருந்தும் என கு.திருமேனி குறிப்பிடுகின்றார்.[3]

எனவே இராமனுடைய வரலாற்றைக் கூறுவதால் இராமா யணம் என்றும், மற்ற இராமாயணங்களிலிருந்து வேறுபடுத்திக் காட்டுவதற்கு ஆசிரியர் பெயரை முன்கொண்டு வான்மீகி இராமா யணம் எனவும் வழங்கப்பெற்று வருகிறது என்பது தெளிவாகிறது. இந்நூல் சீதையின் சரிதம், பௌலஸ்தியவதம் என்ற பெயர் களாலும் குறிக்கப் பெறுகின்றது. சீதையின் நலத்தையும், வரலாற் றையும் கூறுவதனாலும் இப்பெயர் வழங்கப்பெறுகிறது என்பர்.[4] ஸீதாயாசரிதம் மஹத் என்று வான்மீகியும்,[5] இராமாயணத்தால் சிறையிருந்தவள் ஏற்றம் சொல்லுகிறது என்று தொல்லாசிரி யரும்.[6] கூறுவதனால் இப்பெயர் பொருத்தமுடையதாகவே உள்ளது. பௌலஸ்தியவதம் என்பது புலஸ்தியன் மரபில் வந்த இராவணனின்வதம் கூறுவதினால் பெற்ற பெயராகும்.

**வான்மீகி - வரலாறு**

வான்மீகி வரலாறு பற்றி ஆய்வாளர்களிடையே பல்வேறு கருத்துகள் நிலவுகின்றன. இக்கருத்து வேறுபாடுகளுக்குக் காரண மாக விளங்குபவை வான்மீகி இராமாயணத்திலும், மற்றைய வடமொழி இராமாயணங்களிலும் கூறப்படும் வான்மீகி பற்றிய வரலாறுகளும், பிறநூல்களில் கூறப்படும் வரலாற்றுக் கூறுகளுமே ஆகும்.

**காவியம் கூறும் வரலாறு**

வான்மீகி இராமாயணம் இரண்டாவது சருக்கத்தில் இராமா யணம் வந்த வரலாறு கூறப்பெற்றுள்ளது. வேத ஒழுக்கங்கள் நிறைந்த வான்மீகியை நாரதர் சென்று கண்டபோது, இந்த உலகத்தில் இப்பொழுது குற்றமற்ற எல்லா குணங்களும் நிறைந்த ஒருவன் உண்டா? என்று வான்மீகி கேட்கின்றார். அதற்கு நாரதர் இட்சுவாகு வமிசத்தில் பிறந்த இராமன் குற்றமற்ற எல்லாக் குணங் களும் நிறைந்தவன் என்று கூறி அவன் வரலாற்றினைச் சுருக்கமாகக் கூறுகின்றார்.

பின்னர் வான்மீகி தம்முடைய சீடர் பரத்துவாச முனிவ ரோடு நீராடச் சென்றபோது, வேடன் ஒருவன், சேவலும் பெடையுமாய்க் களித்திருந்த கிரௌஞ்சப் பறவைகளுள், ஆண்

பறவையினைக் கொன்று வீழ்த்தியதைக் கண்டார் முனிவர் சினந்து, வேடா, கிரௌஞ்சப் பறவைகளுள் காம மயக்கமுற்ற ஆண்பறவையினைக் கொன்றதனால் நீ நீண்ட ஆண்டுகள் வாழ மாட்டாய் என்ற பொருள்படும் வடமொழிச் சொற்றொடரால் சபித்தார். இந்தப் பறவையின் காரணமாக வேடனை ஒறுக்க எழுந்த அச்சொற்றொடரை மீண்டும் நினைவு கூர்ந்தார். அப்பொழுது அதே சொற்றொடர் அவருக்குச் சிலேடை முறையில், திருமகள் கணவனே, ஆணும் பெண்ணுமாகிய அரக்கர் கூட்டத்துள் காமமயக்கமுடைய ஆண்மகனைக் கொன்ற அச்செயலால் நீ நெடுங்காலம் புகழடைந்து வாழ்வாய் என்ற மங்கலப் பொருளோடு பாடலாக அமைந்திருப்பதைக் கண்டு வியந்தார். பின்னர் நீராடிக் கடன் முடித்துத் தம் ஆசிரமம் புகுந்து வழிபாட்டில் இருந்தபோது, பிரம்மன் அவர் முன் தோன்றினான். தோன்றிய பிரம்மனை இருக்கையில் அமர்த்திப் பெண் பறவையை நினைந்த வண்ணம் தாம் இயற்றிய பாடலை மனத்திற்குள் உச்சரித்தார்.

அப்பொழுது பிரம்மன் தன்னுடைய விருப்பத்தினால்தான் வான்மீகி முனிவருக்கு அப்பாடல் தோன்றியது என்று கூறி, இராமனுடைய வரலாறு முழுமையும் நாரதரிடமிருந்து கேட்கப்பட்ட வண்ணம் விரித்துக்கூறுமாறு ஆணையிட்டான். இராமனுடைய அக, புறவாழ்வு எல்லாம் மனக்கண்ணில் புலப்படுத்தற்குரிய வரத்தினை அளித்துச் சென்றான். பின்னர் வான்மீகி இராமாயணம் பாடி முடித்தார் என வான்மீகி இராமாயணம் கூறுகின்றது.[7]

மேற்கூறிய வரலாற்றையே ஆனந்தராமாயணமும், அற்புதராமாயணமும் கூறுகின்றன.[8] மச்சபுராணமும் பிரம்மதேவனின் விருப்பப்படி நாரதர் வான்மீகிக்கு இராமாயணத்தை உணர்த்த, வான்மீகி இராமாயணம் பாடினார் என்று கூறுகின்றது.[9] தனிப் பாடலொன்றும் இக்கருத்தை உணர்த்துகின்றது.

**நாரணன் விளையாட் டெல்லாம் நாரத முனிவன்கூற**
**ஆரணக் கவிதை செய்தான் அறிந்தவான் மீகிஎன்பான்**

என்பதே அப்பாடல் வரிகள்.

**அத்யாத்ம இராமாயணம் கூறும் வரலாறு**

வான்மீகி இராமாயணம் கூறிய வரலாற்றிற்கு முற்றிலும் மாறாக வடமொழி இராமாயணமாகிய அத்யாத்ம இராமா யணத்தில் வான்மீகி வரலாறு பின்வருமாறு கூறப்படுகின்றது.

வான்மீகி அந்தணர் குலத்தில் பிறந்தவர். இளமைப் பருவத்திலேயே பெற்றோரால் கைவிடப்படவே அவர் வேட னாகக் காட்டில் கொலை, களவுகள் புரிந்து வாழ்க்கை நடத்தி வந்தார். ஒரு நாள் அக்காட்டின் வழியாகச் சென்ற சப்தரிஷிகளை அவர் வழிமறித்துக் கொள்ளையிட எண்ணினார். அவர்கள் வான்மீகியின் உள்ளத்தில் எழுந்த ஞானக்கனலைக் கண்டு நீ இவ்வாழ்க்கை வாழ்வதேன்? என்றனர். என் குடும்பத்தினரைக் காப்பாற்றவே இங்ஙனம் செய்கிறேன் என்றான். உன் பாவச் சுமையை உன் மனைவி மக்களும் ஏற்க வேண்டி வருமே அதை அவர்கள் ஏற்பரோ? நீ கொண்டு வரும் செல்வத்தை மட்டுந் தானே அவர்கள் ஏற்பர் என வினவ, அவர் தன் மனைவி மக்களைக் கேட்டு வருவதாகச் சொல்லிச்சென்றார். அவர்களோ, நீ எங்களை எப்படிக் காப்பாற்றுவாயோ, அது உன் கடமை, உன் பாவத்தில் நாங்கள் பங்கு ஏற்றுக்கொள்ளப் போவதில்லை எனத் திட்ட மாகக் கூறிவிட்டனர். வான்மீகியின் மனக்கண் அப்போதே திறந்தது. சப்தரிஷிகளின் பாதங்களில் விழுந்து, தமக்கு நல்வழி காட்ட மன்றாடினார். அவர்கள் அவர் செவியில் ராமநாமம் ஓதி அருளினர். வான்மீகி, மரா,மரா என்று சொல்லித் தியானத்தில் ஆழ்ந்தார். அவரைச் சுற்றிப் புற்று மூடிக்கொண்டது. பல்லாண்டு கள் சென்றன. பிரம்மதேஜஸ் அவர் முகத்தில் வீசியது. அவர் பரிபூரணம் அடைந்ததை உணர்ந்த நாரதர், அவரை அழைக்க, புற்றிலிருந்து வெளிக்கிளம்பினார். புற்றிலிருந்து வெளிப்பட்ட தால் இனி உனக்கு வான்மீகி என்று பெயர் வழங்கப்படும் என்று ஆசிர்வதித்துச் சென்றார்கள் என்பதே அத்யாத்ம இராமா யணத்தில் கூறப்படும் வான்மீகி வரலாறாகும்.[10] இவ்வரலாறு பாமரக் கதையாகவும் வழங்கப்படுகிறது.

மகாபாரதத்தில், வான்மீகி ஒரு சமயம் அக்கினி தேவ னுடனும், மற்றும் சில ரிஷிகளுடனும் வாதஞ்செய்தார் என்றும்,

அவரது வேத மந்திர உச்சரிப்பில் பிழை காணப்பட்டதால் சுருதியைக் கொலை செய்தவர் எனக் குற்றம் சாட்டப்பட்டார் என்றும், ருத்திரனை வேண்டிய அவர் தம் புகழ் உலகெங்கும் பரவுமென்று ஆசிபெற்றார் என்றும் நூல் எழுந்த வரலாறு கூறப்பெறுகின்றது.[11]

இவ்வரலாறுகள் ஒன்றுடன் ஒன்று வேறுபாடாகவே இருக்கின்றன. இவற்றிலிருந்து உண்மை வரலாற்றைக் காண்பது அரிதாகின்றனவே. வான்மீகி இராமாயணத்தில் கூறப்படும் வரலாற்றையே வான்மீகி வரலாறாகக் கொள்ளலாம்.

### வான்மீகியின் காலம்

வான்மீகி இராமன் காலத்தவரே என்றும் இராமன் காலத்திற்குப் பிற்பட்டவர் என்றும் அறிஞர்களிடையே இருவேறு கருத்துகள் நிலவுகின்றன. இக்கருத்து வேறுபாடுகளுக்குக் காரணமாக அமைபவை வான்மீகி இராமாயணத்தில் கூறப்படும் வான்மீகியின் வரலாற்றிலுள்ள முரண்பாடுகளேயாகும்.

### இராமன் காலத்தவர் வான்மீகி

வான்மீகியே இராமனது குமாரர்களாகிய லவன், குசன் என்பவர்களுக்கு இராமாயணத்தைப் பாடலாகக் கற்பித்து, இராமன் அவையில் பாடச்செய்தார் என உத்தரகாண்டத்தில் கூறப்பட்டுள்ளதால் இராமன் காலத்தவரே வான்மீகி என்பர் அறிஞர்கள்.[12]

மேற்கூறிய கருத்தை கு.திருமேனி பின்வருமாறு மறுத்துக் கூறுகின்றார். பாலகாண்டத்தில் கூறப்படும் வான்மீகி வரலாற்றில் வான்மீகி, நாரதர் கூறக் கேட்டு பிரம்மனின் வரவலிமையால் இராமாயணம் பாடினார் எனக் கூறப்பட்டுள்ளது. இவ்வரலாறு உண்மையானால் வான்மீகி இராமன் காலத்தில் வாழ்ந்தவர் என்பது பொருந்தாது என்கிறார்.[13]

மேலும், இவ்வரலாற்று முரண்பாடுகளை ஆதாரமாகக் கொண்டு உத்தரகாண்டமும், பாலகாண்டமும் வான்மீகியால் பாடப்பட்டதன்று என்றும், இராமன் வரலாற்றினைச் செவி வழிக்கேட்ட வான்மீகி, காவியம் பாடினார் என்றும், தொடர்ந்து

வந்த பலர் தாம் அறிந்த இராமாயணத்தைப் பற்றிய பலவற்றையும் சேர்த்துக் காவியத்தைப் பெரிதாக்கியுள்ளனர் என்றும் இக் காரணம் பற்றியே காவியத்தில் முரண்பாடு ஏற்படுகிறது என்கிறார் கு.திருமேனி.[14]

**வான்மீகி இராமன் காலத்திற்குப் பிற்பட்டவர்**

மேற்கூறியவற்றால் வான்மீகி, இராமன் காலத்திற்குப் பிற்பட்டவர் என்பது தெளிவாகிறது. இதனை அடியொற்றியே வான்மீகி, இராமாயணம் செய்த காலத்தை அறிஞர்கள் வரையறுத் துள்ளனர்.

வான்மீகி இராமாயணம் கிறித்துவுக்கு முன் முதல் நூற்றாண்டில் உருவாகியிருத்தல் வேண்டும். அதில் கூறப்படும் ரிஷிகளைப்பற்றிய குறிப்புகளும், இராசிச் சக்கரமும் அந்தக் காலந் தொட்டே வழங்கி வருகின்றன. அதற்கு முன் ஆரியர் சந்திர னையும், நட்சத்திரங்களையும் கொண்டே வேள்விகள் முதலிய கருமங்களுக்குரிய காலங்களைக் கணக்கிட்டு வந்தனர். எனவே, வான்மீகி இராமாயணத்தின் காலம் கி.மு.முதலாம் நூற்றாண்டு என்பர்.[15]

உத்தர காண்டத்தில் குறிக்கப்படும் பதஞ்சலியின் மகா பாஷியம் கி.மு. நூற்றைம்பதில் இயற்றப்பட்டதாக வரையறுக்கப் பட்டிருப்பதால், அதற்கு பிறகே இராமாயணம் தொகுக்கப் பட்டிருக்க வேண்டும். இத்தொகுப்பு பாரதம் உருவான பிறகே சேர்க்கப்பட்டது. பாரதத்தில் வரும் இராமோ பாக்கியானம் இராமாயணத்திற்கு முற்பட்டது என்கிறது கலைக்களஞ்சியம்.[16]

இராமாயணப் பாத்திரங்கள் பாரதத்திலே குறிக்கப்பட் டுள்ளனவே அன்றி பாரதக்கதை இராமாயணத்தில் குறிக்கப் படவில்லை. எனவே மகாபாரதத்திற்கு முற்பட்டது இராமா யணம் என்பர்.[17]

அரங்க. சீனிவாசன் கி.மு.நான்காம் நூற்றாண்டில், நாட்டில் வழங்கி வந்த நாடோடி இலக்கியத்தையும், செவிவழிச் செய்தி களையும் அடியொற்றி இராமாயணம் படைத்தார் வான்மீகி

என்கிறார்.[18] இராமாயணக் காலத்தை ஆராய்ந்த விண்டர் னிட்ஸ்ம் கி.மு.முந்நூறுக்கும் பின்னாகாதென்று கூறுகின்றார்.[19]

கு.திருமேனி வான்மீகியின் காலத்தைப் பின்வருமாறு வரையறுத்துள்ளார். வான்மீகி பாண்டிய நாட்டைப் பற்றிக் குறிப்பிடும் போது, பொன் நிறைந்ததாயும், அழகுடையதாயும், முத்தாலும் மணியாலும் அலங்கரிக்கப்பட்டதாயும் பாண்டியர்க்கு உரியதாயுமுள்ள கபாடபுரத்தை பார்க்கக் கடவீர் என்று தென்திசை நோக்கிச் சீதையைத் தேடிச்சென்ற வானர வீரர்களுக்குச் சுக்கிரீவன் கூறுவதாகக் கூறுகின்றார். எனவே இராமாயணம் நிகழ்ந்த காலம் கபாடபுரத்தில் இடைச்சங்கத்து அகத்தியனார் முதலானோர் தமிழாய்ந்த காலம் என்கிறார்.[20] இச்செய்தியை ஆதாரமாகக் கொண்டே ஆய்வாளர்கள் இராமாயணம் நிதழ்ந்தகாலம் கபாடபுரத்தில் இடைச்சங்கம் இருந்தகாலம் என வரையறுத்துள்ளனர்.[21]

மேலும். நாரணன் விளையாட்டினை நாரதர் கூறக்கேட்டு இராமாயணம் செய்தார் வான்மீகி என்றால், அவர் இராமாயணக் காலத்தவராதல் அமையாது. இராமாயணக் காலத்தவர் அல்லர் என்றால் இடைச்சங்கத்தினை அடுத்தவராதல் வேண்டும் என வான்மீகியின் காலத்தை வரையறுத்துக் கூறுகின்றார் கு.திருமேனி.[22]

மேற்கூறிய ஆய்வாளர்களின் கருத்துகளால் வான்மீகி, இராமன் காலத்தில் வாழ்ந்தவர் அல்லர் என்பதும், இராமனுக்குப் பிற்பட்டவரே என்பதும் தெளிவாகிறது. மற்றும் இடைச் சங்கத்தில் முதல்வராய் வீற்றிருந்து தமிழாராய்ந்தவர் அகத்தியர். அவருடன் இசைத்தமிழ் ஆராய்ந்து இசை நூல் செய்தவர் நாரதர் எனவும் கூறப்படுகிறது.[23] நாரதர் கூறக்கேட்டு வான்மீகி இராமாயணம் செய்தார் என்பதினால் வான்மீகி இடைச்சங்க காலத்தைச் சார்ந்தவராய் இருத்தல் வேண்டும் என்பது புலனாகிறது.

இராமாயணத்தில் குறிக்கப்படும் கபாடபுரம் சிறப்புற்று விளங்கிய காலம் கி.மு.நான்காம், மூன்றாம் நூற்றாண்டு என வரையறுத்துள்ளனர்.[24] எனவே வான்மீகி இராமாயணம் செய்த

காலம் கி.மு. நான்காம் மூன்றாம் நூற்றாண்டிற்குப் பிற்பட்டது என்பது தெளிவாகிறது.

**நூலமைப்பு**

வான்மீகி இராமாயணம் பாலகாண்டம், அயோத்தியா காண்டம், ஆரண்ய காண்டம், கிட்கிந்தா காண்டம், சுந்தர காண்டம், யுத்த காண்டம், உத்தர காண்டம் என்ற ஏழு காண்டங் களையும், ஐநூறு சருக்கங்களையும், இருபத்து நாலாயிரம் சுலோகங்களையும் கொண்டு இலங்குகிறது. இதனை வான்மீகி பால காண்டத்திலும், உத்தர காண்டத்திலும் குறித்துள்ளார்.

**இராமாவதாரம்**

கம்பர் தாம் இயற்றிய நூலுக்கு இட்டு வழங்கிய பெயர் இராமாவதாரம் என்பதே, இதனைச் சிறப்புப் பாயிரப்பாடலில் இவரே,

**நடையின்நின்று உயர் நாயகன் தோற்றத்தின்**
**இடை நிகழ்ந்த இராமாவ தாரப் பேர்த்**
**தொடை நிரம்பிய தோம் அறு மாக்கதை**[25]

எனக் கூறியவற்றான் அறியமுடிகிறது. இராமகாதை என்ற பெயராலும் இந்நூல் குறிக்கப்பெறுகிறது. கம்பர் இராமாவதாரப் பேர்த், தொடை நிரம்பிய தோம் அறு மாக்கதை என்பதினால் இராமகாதை என்ற பெயர் வழங்கப் பெற்றுள்ளமை புலனாகிறது.

கம்பர் தம் நூலுக்கு இட்டு வழங்கிய பெயர் வழங்காமல் முதல் நூலகிய இராமாயணம் என்ற பெயரைக் கொண்டே கம்ப ராமாயணம் என வழங்கப்பெற்று வருதல் குறிப்பிடத்தக்கதாகும்.

**கம்பர் - வரலாறு**

கம்பர் வரலாற்றைப் பற்றிப் பல்வேறு கருத்துக்கள் நிலவு கின்றன. கம்பரைப் பற்றிய வரலாற்றை அறிய செவி வழிச் செய்திகளும், தனிபாடல்களுமே துணை செய்கின்றன. அவற்றை அடிப்படையாக வைத்தே கம்பருடைய வரலாறு உருவாகி யுள்ளது.

கம்பநாட்டு அரசனின் மகன் கம்பர் என்றும், நாட்டில் ஏற்பட்ட கலகத்தால் தாய், காளி கோயில் பூசாரி ஒருவன் வீட்டில்

அடைக்கலம் புக அங்குப் பிறந்தார் என்று கூறப்படுகிறது.[26] மற்றும் கம்பர் தந்தை வீரவர்மன் என்னும் குறுநில மன்னன், தாய் அம்பிகா, தந்தை பகைவரால் இறந்தபோது தாய் அம்பிகா திருவழுந்தூரை அடைந்து காளி கோயிலில் கம்பரை ஈன்று இறந்தாள். இறந்த பிறகு பூசாரியாகிய ஆதித்தன் என்பான் இவரை வளர்த்தான் எனவும் ஒரு வரலாறு கூறப்படுகின்றது.[27] இராமசாமிப் புலவர் காளிகோவில் பூசை செய்யும் உவச்சர் குலத்தில் ஆதித்தன் என்பவருக்கு மகனாகத் தோன்றினார் கம்பர் என்கிறார்.[28]

இவ்வரலாறுகளுக்குத் தக்க சான்றுகள் இன்மையால் இவையாவும் அறிஞர்களால் ஏற்றுக் கொள்ளப்படாதவை களாகவே உள்ளன.

### பெயர்

கவிச்சக்கரவர்த்தி என்ற சிறப்புப் பெயரால் அழைக்கப் பெறும் கம்பருக்குப் பெயர் கொடுத்தமையைத் தனிப்பாட லொன்று பின் வருமாறு கூறுகின்றது.

**பெற்று வளர்த்தும் வித்தைதனைப் பேணிக் கொடுத்தும்**
**பெயர்பொறித்தும்**
**பற்ற அரும்பால் அமுதளித்தும் பகைத்த வறுமை பகைதீர்த்தும்**
**கற்ற முதனூல் திருவழுந்தூர்க் கம்பன் தழையக் கருணைசெய்வான்**
**மற்றும் புலவோரையும் வாழவைத்தார் சோழ மண்டலமே**

என்பது அப்பாடல். கம்பர் என இவருக்கு வழங்கப்பெறும் பெயர் காரணப் பெயரென்றும், இயற்பெயரென்றும் இருவேறு கருத்துக் கள் நிலவுகின்றன. இவற்றிற்கெல்லாம் கம்பர் இயற்றிய நூல் களிலோ கம்பரைப் பறறி கூறும் நூல்களிலோ தக்க ஆதாரங்கள் இல்லை.

### காரணப்பெயர்

கம்பர் என்று பெயர் வழங்கியமைக்குப் பல காரணங்கள் கூறப்படுகின்றன.

1. குழந்தையாயிருந்த காலத்தில் கம்பத்தடியில் கிடந்த காரணம் பற்றிக் கம்பர் என்ற பெயர் பெற்றார்.

2. கலிங்கராயன் என்ற தலைவனது குதிரை இறக்கும்படி பாடிய இவரை அவன் நேரில் பார்த்தபோது கையில் ஒரு கம்போடு நின்று கொண்டிருந்தமையால் கம்பர் என அத்தலைவனால் அழைக்கப் பெற்றார்.

3. கம்பத்தில் தோன்றிய நரசிம்மமூர்த்தியை உபாசனை மூர்த்தியாகக் கொண்டமையால் கம்பர் எனப் பெயர் பெற்றார்.

மேற்குறித்த காரணங்களையெல்லாம் ஆய்வாளர்கள் தம் நூல்களில் மறுத்துள்ளனர்.[29] செல்வக்கேசவராயர் ஆந்திர நாட்டுக் கர்நூலுக்கு அருகில் கம்பம் என்ற நாட்டிலிருந்து ஆதித்தன் மரபினர், தொண்டை நாட்டிற்கு வந்தனர். அங்கிருந்து சோழநாட்டிற்கு வந்து வேலூர், திருவழுந்தூர் முதலிய ஊர்களில் குடிபுகுந்தனர். கம்ப நாட்டிலிருந்து வந்த ஆதித்தன் தன் மகனுக்கு தனது தாய் நாட்டின் பெயரை இட்டார் எனக் கூறுகின்றார்.[30] இதனையே மோ.வே.கோவிந்தராஜய்யங்காரும், அ.கி. நாயுடுவும் வழிமொழிந்துள்ளனர்.[31]

இயற்பெயர்

கம்பருடைய பெயர் இயற்பெயரே அன்றிக் காரணப் பெயராக வழங்கப்பெறவில்லை என அ.ப.பதிப்பில் பின்வருமாறு தெளிவுறுத்தப்படுகின்றது. கி.பி.எட்டு, ஒன்பதாம் நூற்றாண்டுக் கல்வெட்டுக்களில் நந்திவர்மப் பல்லவனுடைய அரசியல் அதிகாரி கம்பன் அரையன் என்ற பெயராலும் தெள்ளாறெறிந்த நந்திவர்மனுடைய இரண்டாம் மகன் கம்பவர்மன் என்ற பெயராலும் வழங்கப்பெற்று வந்துள்ளனர். முதலாம் இராசராச சோழனுடைய படைத் தலைவர்களுள் ஒருவன் கம்பன் மணியன் என்ற பெயரினன் என்றும், அவ்வரசனுடைய அதிகாரி கம்பன் என்ற பெயருடையவன் என்றும் கல்வெட்டுக்களால் அறிய வருகின்றன. எனவே கம்பர் என்ற பெயர் இயற்பெயரே எனக் கூறப்படுகின்றது.[32] இதனை ஆய்வாளர் பலரும் ஏற்றுக்கொண்டுள்ளனர்.[33] எனவே கம்பருடைய பெயர் இயற்பெயராக இருத்தலே பொருந்தும்.

*பிறந்த ஊர்*

கம்பர் தஞ்சை மாவட்டத்தில் மயிலாடுதுறைக்கு அண்மையிலுள்ள திருவழுந்தூர் என்னும் ஊரில் பிறந்தவர் எனப் பின்வரும் பாடல் உணர்த்துகிறது.

**கம்பர் பிறந்தஊர் காவேரி தங்கும் ஊர்**
**கும்பமுனி சாபம் குலைந்த ஊர் - செப்பதுமத்**
**தாதகத்து நான்முகனும் தாதையும் தேடிக்காணா**
**ஓதகத்தார் வாழும் அழுந்தூர்[34]**

இதற்கு ஆதாரமாக இவ்வூரில் கம்பர் வீடு இருந்ததாகக் கூறப்படும் இடம் கம்பர்மனை, கம்பர்மேடு என மக்களால் வழங்கப் பட்டு வருவது குறிப்பிடத்தக்கதாகும்.

பெற்றுவளர்த்தும் எனத்தொடங்கும் தனிப்பாடலொன்று கம்பர் பிறந்த ஊரை திருவழுந்தூர் என்றே கூறுகிறது. நச்சினார்க்கினியர் அகத்திணையியல் உரையில் கூறும் அழுந்தூர் கம்பர் பிறந்த திருவழுந்தூரே எனக் கம்பர் வரலாறு என்ற நூலில் அ.கி.நாயுடு கூறுகின்றார்.[35] அ.ப.பதிப்பிலும் திருவழுந்தூரே கம்பர் பிறந்த ஊர் எனக் கூறப்பட்டுள்ளது.[36] எனவே இன்று வழங்கிவரும் தேரழுந்துரே கம்பர் பிறந்த ஊர் என்பது புலனாகிறது.

*கம்பரை ஆதரித்தவர்*

கம்பரை ஆதரித்து இராமாவதாரம் இயற்றுவதற்குத் துணை நின்றவர் வெண்ணெய்நல்லூரில் வாழ்ந்த சடையப்பவள்ளலே என்ற கருத்து நிலவுகின்றது. இதற்கேற்ப கம்பர் தம் காப்பியத்தில் சடையப்பவள்ளலைப் பத்து இடங்களில் சிறப்பித்துப் பாடியுள்ளார்.

**மண்ணவர் வறுமை நோய்க்கு மருந்து ஆன சடையன் வெண்ணெய்**
**அன்னல்தன் சொல்லே அன்ன. . . . . . . . . .[37]**
**. . . . . . . . . . . . . . சடையன் வெண்ணெயில்**
**தஞ்சம் என்றோர்களைத் தாங்கும் தன்மைபோல்[38]**

இப்பாடல் வரிகள் கம்பரை ஆதரித்தவர் திருவெண்ணெய் நல்லூர் சடையப்ப வள்ளலே என்பதைப் புலப்படுத்துகின்றன.

**கம்பர் காலம்**

கம்பர் வாழ்ந்த காலம் பற்றி ஆய்வு மேற்கொண்ட அறிஞர்கள் தத்தமக்குக் கிடைத்தச் சான்றுகளைக் கொண்டு வெவ்வேறு கருத்துகளை வெளியிட்டுள்ளனர்.

கம்பர் காலம் கி.பி.ஒன்பதாம் நூற்றாண்டிலிருந்து பன்னிரண்டாம் நூற்றாண்டு வரையுள்ள இடைப்பட்ட நான்கு நூற்றாண்டிற்குள் இருத்தல் வேண்டும் என்பதே பெரும்பான்மை யோரின் கருத்தாக உள்ளது. இவற்றுள் கி.பி ஒன்பதாம் நூற்றாண்டில் இக்காப்பியம் அரங்கேற்றப்பட்டது எனவும், கி.பி.பன்னிரண்டாம் நூற்றாண்டின் இறுதியில் அரங்கேற்றப் பட்டது எனவும் இருவேறு கருத்துகள் அறிஞர்களிடையே நிலவுகின்றன. இவர்களின் கருத்துக்களை ஆதாரமாகக்கொண்டு இங்குக் கம்பரின் காலம் ஆய்ந்து சுட்டப்படுகின்றது.

**பத்தாம் நூற்றாண்டுக்கு முற்பட்டவர் கம்பர்**

இராமாயணப் பதிப்புகளில் காணப்படும்

**எண்ணிய சகாத்தம் எண்ணூற்று ஏழின்மேல், சடையன் வாழ்வு**
**நண்ணிய வெண்ணெய் நல்லூர் தன்னிலே கம்பநாடன்**
**பண்ணிய இராம காதை பங்குனி அத்த நாளில்**
**கண்ணிய அரங்கர் முன்னே, கவி அரங்கேற்றினானே**

என்ற தனிப்பாடலால் கம்பரின் காலத்தை கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு என தெ.பொ.மீனாட்சிசுந்தரனார் வரையறுத் துள்ளார். இதற்கு ஆதாரமாக, கன்னட நாட்டில் பிலகள்ளி என்னும் ஊரில் காணப்படும் பத்தாம் நூற்றாண்டைச் சார்ந்த கோயிலில் காணப்படும் கம்பராமாயணக் காவியச் சிற்பங் களையும் எடுத்துக் காட்டியுள்ளார்.[39]

மேற்கூறிய தனிப்பாடலையே ஆதாரமாகக் கொண்டு கம்பரின் காலம் ஒன்பதாம் நூற்றாண்டு என்றே மு.அருணாசலமும், மு.கோவிந்தசாமியும் நிறுவியுள்ளனர்.[40]

**பத்தாம் நூற்றாண்டிற்கும் பிற்பட்டவர் கம்பர்**

மேற்கூறியவர்கள் கருத்தை தி.வெ.சதாசிவப் பண்டாரத் தார், கம்பநாடு என்றொரு நாடு இருந்தது என்பதற்குக் கல்

வெட்டுக்களிலும், செப்பேடுகளிலும் சிறிதும் ஆதாரமின்மையால் எண்ணிய சகாப்தம் எண்ணூற்றேழின் மேல் என்னும் பாடல் பழமையானதும் உண்மை உரைப்பதும் அன்று என மறுக்கின்றார்.

மேலும் பிலம்புக்கு நீங்குப் படலத்திலுள்ள புவிபுகழ் சென்னி பேரமலன் எனத் தொடங்கும் பாடல் வரியில் உள்ள அமலன் என்ற பெயர் உத்தம சோழனையே குறிக்கும். அவனின் ஆட்சிக்காலம் கி.பி.தொள்ளாயிரத்து எழுபது முதல் தொள்ளா யிரத்து எண்பத்தைந்து வரை என்பதால் கம்பரது காலம் கி.பி.பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதியாதல் வேண்டும் என்கிறார் தி.வை.சதாசிவப் பண்டாரத்தார்.[41]

## கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டே

கம்பருடைய காலம் கி.பி.பன்னிரண்டாம் நூற்றாண்டு என வரையறுத்துள்ளவர்களில் எஸ்.வையபுரிப்பிள்ளை குறிப்பிடத் தக்கவர். இவர் எண்ணிய சகாப்தம் எண்ணூற்றேழின் மேல் என்ற பாடலைக் கொண்டு கம்பர் காலத்தை வரையறுப்போரின் கருத்தைப் பின்வருமாறு மறுத்துள்ளார்.

நம்மாழ்வாரைக் குறித்துக் கம்பர் சடகோபரந்தாதி பாடி யுள்ளார். சடகோபரது காலம் கி.பி.பத்தாம் நூற்றாண்டின் முற்பகுதியென்பது ஆய்வாளர்களால் நிறுவப்பட்டுள்ளது. சீவக சிந்தாமணியிலிருந்து கம்பர் விருத்த முறைகளையும், கருத்து களையும் எடுத்தாண்டுள்ளார். சிந்தாமணியின் காலம் கி.பி. பத்தாம் நூற்றாண்டின் பிற்பகுதி. முதன்முதலில் கவிச்சக்கரவர்த்தி என்ற சிறப்புப்பெயர் பெற்றவர் கலிங்கத்துப்பரணி பாடிய செயங்கொண்டாரே ஆவார். இவருடைய காலம் முதற் குலோத்துங்கன் காலமாகிய பதினொன்றாம் நூற்றாண்டின் முற்பகுதியாகும். இவ்வாறு சில இடர்ப்பாடுகளைக் கூறி, கம்பர் காலத்தை வையாபுரிப்பிள்ளை கீழ்வருமாறு வரையறுக்கின்றார்.

பெரிய திருமொழியில் மஞ்சுலாஞ் சோலை என்ற பாசுரத்தின் வியாக்கியானத்தில் பெரியவாச்சான் பிள்ளை யவர்கள், ஈக்கள் வண்டொடு மொய்ப்ப என்ற இராமாயண அடியை மேற்கோள்காட்டி, என்று ஆற்று வரவுகளிலே சொல்லு

வார்களாய்த்துத் தமிழர் என எழுதியுள்ளார். இவர் வாழ்ந்த காலம் கி.பி. பதிமூன்றாம் நூற்றண்டின் முற்பகுதி.

கம்பர் தெலுங்குப் பிரதேசமாகிய ஓரங்கல் நாட்டில் பிரதாபருத்திரன் அவைக்குச் சென்றதாகவும், அவனது வள்ளல் தன்மையைப் புகழ்ந்து பாடியதாகவும் ஒரு வரலாறு காணப்படுகிறது. இவ்வரலாறு உண்மையென்றே கொள்ளலாம். ஏனெனில் கம்பர், அந்து, அக்கட, கிச்சு போன்ற தெலுங்குச் சொற்களைக் கையாண்டுள்ளார்.

மேலே குறிக்கப்பட்ட அரசனாகிய முதலாம் பிரதாபருத்திரன் கல்வெட்டுக்கள் கி.பி.ஆயிரத்து நூற்றுஅறுபத்திரண்டு, எழுபத்தொன்பதாம் ஆண்டுகளுக்கு உரியனவாயுள்ளன. எனவே, கம்பர் பன்னிரெண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவரென இவ்வரலாறு உணர்த்துகிறது.

**ஆவின் கொடைச்சகரர் ஆயிரத்து நூறொழித்துத்**
**தேவன் திருவழுந்தூர் நன்னாட்டு - மூவலூர்ச்**
**சீரான் குணாதித்தன் சேய்அமையப் பாடினான்**
**காரார் காகுத்தன் கதை.**

என்ற கம்பராமாயண ஏட்டுப்பிரதிகளில் காணப்படும் பாடல் மேலே கூறியவற்றை உறுதிப்படுத்துவனவாக உள்ளது. இதனால் சகாப்தம் ஆயிரத்து நூறில், அதாவது கி.பி.ஆயிரத்து நூற்றெழுபத்தெட்டில் இராமாயணத்தைக் கம்பர் பாடினார் என்பது தெளிவாகிறது.

எண்ணிய சகாத்தம் எண்ணூற்றேழின் மேல். . . அரங்கேற்றினானே என்ற செய்யுள் எவ்வாறு பிறந்தனவென்று வினவலாம். இரா.இராகவையங்கார் கூறியுள்ளபடி பேரெண்ணாகிய ஆயிரத்தை நீக்கி அப்பதங்களைக் குறிப்பிடுதல் வழக்காதலால் ஆயிரத்தின் மேல் அதாவது கி.பி.ஆயிரத்து நூற்றெண்பத்தைந்தில் இராமாயணம் அரங்கேற்றப்பட்டது எனக் கொள்ளுதல் தக்கது. சகாத்தம் எண்ணூற்றேழில் அதாவது கி.பி.எண்ணூற்றைம்பத்தைந்தில் இக்காவியம் அரங்கேறியதென்று கருதுதல் மேற்காட்டிய சான்றுகட்கும், வைணவ சமய வரலாற்

றிற்கும், தமிழிலக்கிய வரலாற்றிற்கும் முற்றும் முரணாகும். கி.பி.ஆயிரத்து நூற்றெழுபத்தெட்டில் இக்காப்பியம் பாடி முடிக்கப்பட்டது எனவும், கி.பி.ஆயிரத்து நூற்றெண்பத்தைந்தில் அரங்கேற்றப்பட்டது எனவும் கூறுதல் மிகவும் பொருத்தமாகும் என்கிறார் வையாபுரிபிள்ளை.[42]

வையாபுரிப்பிள்ளை கருத்தை அடியொற்றி கா.சுப்பிர மணியபிள்ளை, மு.கோவிந்தசாமி, இரா.இராகவையங்கார், மு.இராசமாணிக்கனார் முதலானோர் கம்பர் காலம் கி.பி.பன்னி ரண்டாம் நூற்றாண்டே என நிறுவுகின்றனர்.[43]

கம்பரது காலத்தை மேலும் ஆராய்ந்து கருத்து வேறுபாடில் லாது அறுதியிட்டுக் கூறும் வரையில் இவரது காலம் கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதி எனக்கொள்வதே சால்புடைத்து.

**நூலமைப்பு**

வான்மீகி இராமாயணத்தை ஒட்டியே கம்பராமாயணக் காண்டப் பெயர்களும் அமைந்துள்ளன. பாலகாண்டம், அயோத் தியா காண்டம், ஆரண்ய காண்டம், கிட்கிந்தா காண்டம், சுந்தர காண்டம், யுத்த காண்டம் என ஆறு காண்டங்களையும் நூற்றுப் பதினான்கு படலங்களையும், பத்தாயிரத்து ஐநூற்று முப்பத்து நான்கு பாடல்களையும் கொண்டு இலங்குகிறது. இதனை அ.ப.பதிப்பினால் உறுதி செய்ய இயலுகின்றது.

**தமிழில் கம்பருக்கு முன் அமைந்த இராமாயணக் குறிப்புகள்**

தமிழ் மக்களிடையே கம்பருக்கு முன் மிகப் பழங்காலந் தொட்டே இராமாயணக்கதை வழங்கி வந்துள்ளமையை இராமா யணம் பற்றி அமைந்த பாடல்களும், நூல்களும் உணர்த்துகின்றன.

**பாடல்கள்**

தொல்காப்பியம், யாப்பருங்கலம், வீரசோழியம் முதலிய இலக்கண நூல்களுக்கு இலக்கிய மேற்கோள்களாகக் காட்டப் பெற்றுள்ள பாடல்களும், புறத்திரட்டுப் பாடல்கள் சிலவும், இராமாயணம் பற்றிய செய்திகளைக் கூறும் பாடல்களாக உள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

தொல்காப்பியம் அகத்திணையியல் நூற்பாவிற்கு உரை காணுமிடத்து நச்சினார்க்கினியர் காட்டும் மேற்கோள் பாடல் இராமாயண நிகழ்ச்சியைக் கூறுவதாக உள்ளது.

**ஆள்வினை முடித்த அருந்தவ முனிவன்**
**வேள்வி போற்றிய இராமன் அவனொடு**
**மிதிலை மூதூர் எய்திய ஞான்றே**
**மதியுடம் பட்ட மாக்கண் சீதை**
**கருவிசை வில்ஞாண் இடியொலி கேளாக்**
**கேட்ட பாம்பின் வாட்டம் எய்தித்**
**துயில் எழுந்து மயங்கினள்**[44]

என்பது அப்பாடல். வீரசோழியத்தில், வேந்தன் சிறப்பு என்ற பகுதிக்கு உரை எழுதுமிடத்துப் பெருந்தேவனார்,

**மற்றியவனை மாலென்று அறிந்தால்அவ் வாளரங்கன்**
**பெற்றி கருதுவதென் பேதையர்காள் - மற்றிவன்தன்**
**கண்டான் கடைசிவத்தற் குண்டோ கடலிலங்கை**
**வண்டார் அரக்கன் வலி,**
**ஐயிருபது யோசனையும் ஆங்கோர் இடனின்றிக்**
**கைபரந்த சேனைக் கடலொளிப்பத் - தையல்**
**வழிவந்து இராமன் வடகரையா னென்றான்**
**விழிவந்து வேறாக மீட்டு**

என்ற இராமாயணம் பற்றிய பாடல்களை மேற்கோளாகச் சுட்டுகின்றார்.[45]

புறத்திரட்டில் ஆசிரியமாலை என்ற தொகைநூல் இராமாயண நிகழ்ச்சிகளைக் கூறுவனாக உள்ளன.

**இருசுடர் வழங்காப் பெருமூ திலங்கை**
**நெடுந்தோள் இராமன் கடந்த ஞான்றை**
**எண்கிடை மிடைந்த பைங்கட் சேனையில்**
**பச்சை போர்த்த பல்புறத் தண்டை**
**எச்சார் மருங்கினும் எயிற்புறத்து இறுத்தலின்**
**கடல்சூழ் அரணம் போன்றது**
**உடல்சின வேந்தன் முற்றிய ஊரே**[46]

என்பது அப்பாடல்களில் ஒன்றாகும்.

**நூல்கள்**

சங்க இலக்கியங்களாகிய அகநானூறு, புறநானூறு, கலித்தொகை முதலான நூல்களிலும், சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய காப்பியங்களிலும், பெருங்கதையிலும், நாயன்மார்கள், ஆழ்வார்கள் பாடல்களிலும் இராமாயணக் கதைக் குறிப்புகள் காணக்கிடக்கின்றன.

**சங்க இலக்கியங்களில் இராமாயணக்கதை**

அகநானூற்றுப் பாடலொன்றில், தலைவியின் திருமணத்திற்குப் பின் ஊரார் பேசிய பழி நீங்கியது என்பதனைக் கூறுமிடத்து மதுரைத் தமிழ்க் கூத்தனார், கடுவன் மள்ளனார் இராமாயணச் செய்தியைப் பொதிந்து வைத்துள்ளார். இராமன் ஆலமர நிழலில் தங்கி வானரப் படையுடன் போர்ச் செயல்பற்றி ஆலோசனை செய்தபோது மரத்தின் மேலிருந்த பறவைக் கூட்டங்கள் ஒலிகளை அடக்கிக் கொண்டன. அதுபோன்று ஊரார் பேசிய பழி நீங்கியது என்பதனை,

**வெல்வேல் கவுரியர் தொன்முது கோடி**
**முழுங்கு இரும் பௌவம் இரங்குமுன் துறை**
**வெல்போர் இராமன் அருமறைக்கு அளித்த**
**பல்வீழ் ஆலம்போல**
**ஒலி அவிந்தன்று இவ் அழுங்கல் ஊரே**[47]

என்ற பாடல் உணர்த்துகின்றது.

புறநானூற்றில் சோழன் தம்மைப் புகழ்ந்து பாடிய பாணர்களுக்குப் பொன் அணிகளை வாரி வழங்கினான். அணிகளை அணிந்தறியாத பாணர்களின் மனைவியர் விரல்களில் அணிய வேண்டியதை காதுகளிலும், காதில் அணிய வேண்டியதை விரல்களிலும் மாறி அணிந்து கொண்டனர் என்பதைக் கூறுமிடத்து இராமாயண நிகழ்ச்சியைச் சுட்டுகின்றார்.

**கடுந்தெறல் இராமன் உடன்புணர் சீதையை**
**வலித்தகை அரக்கன் வவ்விய ஞான்றை**
**நிலஞ்சேர் மதர்அணி கண்டகுரங்கின்**
**செம்முகப் பெருங்கிளை இழைப் பொலிந்தாங்கு**
**அறாஅ வருநகை இனிது பெற்றிகுமே**[48]

என இராவணன் சீதையைக் கவர்ந்து சென்றபோது கிட்கிந்தையில் அவளிட்ட அணிகலன்களைக் குரங்கினம் அணியத் தெரியாமல் அணிந்து மகிழ்ந்தது போன்று பாணர் மனைவியர் அணிகளை அணிந்தனர் என்கிறார் ஊன்பொதி பசுங்குடையார்.

இராவணன் கயிலைமலையைப் பெயர்க்க விரும்பித் தன் கைகளால் தூக்கமுயன்றபோது மலையடியில் கைகள் மாட்டிக் கொண்டு வருந்திய செய்தியைக் கபிலர் குறிஞ்சிக்கலியில்,

**இமைய வில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்**
**உமை அமர்ந்த உயர்மலை இருந்தனனாக**
**ஐயிரு தலையில் அரக்கர் கோமான்**
**தொடிப்பொலி தடக்கையின் கீழ்புகுந்து அம்மலை**
**எடுக்கல் செல்லாது உழப்பவன் போல[49]**

எனப் பொதிந்துள்ளார்.

### காப்பியங்களில் இராமாயணக்கதை

இளங்கோவடிகள், கோவலனும் கண்ணகியும் புகார் நகரத்தைவிட்டு நீங்கியமையைக் கூறுமிடத்து, இராமன் வனம் சென்ற பின் அயோத்தி மாநகரம் எப்படிப் பொலிவிழந்து இருந்ததோ அதனைப்போன்று புகார் நகரம் விளங்கியது என்கிறார்.

**பெருமகன் ஏவல் அல்லது யாங்கணும்**
**அரசே தஞ்சமென் றருங்கான் அடைந்த**
**அருந்திறல் பிரிந்த அயோத்தி போலப்**
**பெரும்பெயர் மூதூர் பெரும்பே துற்றதும்[50]**

மணிமேகலையில் காயசண்டிகையின் பெரும் பசிக்கு இடுகின்ற உணவெல்லாம் போகுமிடம் தெரியாமல் போவதற்கு உவமை கூறவந்த சாத்தனார், இராமன் இராவணனை வெல்லக் கடலை அடைந்தபோது குரங்குகள் பெயர்த்துக் கொணர்ந்த பெருமலைகளெல்லாம் கடல் வயிறு புகுந்து நிறைவு பெற்று அடைபெறாது இருந்த நிகழ்ச்சியை,

**நெடியோன் மயங்கி நிலமிசைத் தோன்றி**
**அடல்அரு முந்நீர் அடைந்த ஞான்று**
**குரங்குகொணர்ந்து எறிந்த நெடுமலை எல்லாம்**
**அணங்குஉடை அளக்கர் வயிறு புக்காங்கு[51]**

என்று நினைவுறுத்துகின்றார். பெருங்கதையில், சீதையின் கற்பின் பெருமை, இராமனுக்கு உதவிய தம்பி இலக்குவன் பெருமை, சீதையைத்தேடிச் சென்ற குரங்கினங்களின் பெருமை முதலியவற்றையும்,[52] சிந்தாமணியில் இராமனின் வில்வீரத்தையும்[53] ஆசிரியர்கள் பொதித்து வைத்துள்ளமை எண்ணத்தக்கதாகும்.

**ஆழ்வார் பாசுரங்களில் இராமாயணக்கதை**

ஆழ்வார்கள் பலரும் தம் பாடல்களில் இராமாயணக்கதை நிகழ்ச்சிகளைப் பாடியுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். பேயாழ்வார் ஒரு பாசுரம் முழுவதும் இராமாயண நிகழ்ச்சியைப் படம்பிடித்துக் காட்டுகிறார்.

**எய்தான் மராமரம் ஏழும் இராமனாய்**
**எய்தான்அம் மான் மறியை ஏந்திழைக்காய் - எய்ததுவும்**
**தென்னிலங்கைக் கோன் வீழ . . . . . . .**[54]

என்பது அப்பாசுரமாகும். திருமழிசையாழ்வார் இராமன் குரங்குகளைத் துணைக்கொண்டமையைத் தம் பாசுரத்தில்

**குரங்கினப் படைகொடு குரை கடலின் மீதுபோய்**
**அரக்கரங்க ரங்க வெஞ்சரம் துரந்தஆதி நீ**[55]

எனச் சுட்டுகிறார். குலசேகராழ்வார், பெருமாள் திருமொழியில் பதினொரு பாசுரங்களில் இராமனது தோற்றம் முதல் வைகுந்தம் சேரும் நிலை வரை பாடியுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். சீதைக்கு அனுமன் தெரிவித்த அடையாள மொழியாக ஆறாம் பாசுரத்தில்,

**சித்திரகூடத் திருப்பச் சிறுகாக்கை முலை தீண்ட**
**அத்திரமே கொண்டெறிய அனைத்துலகும் திரிந்தோடி**
**வித்தகனே இராமாவோ நின்னபயம் என்றழைப்ப**
**அத்தகனேஅதன் கண்ணை அறுத்ததும் ஓர் அடையாளம்**[56]

என அமைத்துப் பாடியுள்ளார். மேலும், ஆண்டாள், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் முதலியோரும் இராமாயணக் கதையைத் தம் பாசுரங்களில் அமைத்துப் பாடியுள்ளனர்.

**நாயன்மார் பாடல்களில் இராமாயணக்கதை**

ஆழ்வார்களை அடியொற்றியே நாயன்மார்களும் தேவாரப் பாடல்களில் இராமாயணக் கதைகளைச் சித்திரித் துள்ளனர். திருஞானசம்பந்தர் தமது பதிகம் ஒவ்வொன்றிலும் எட்டாவதாக அமைந்த பாடல்களில் இராமாயண நிகழ்ச்சியை அமைத்துப் பாடியுள்ளமை குறிக்கத்தக்கதாகும். திருநாவுக்கரசர் திருஇராமேச் சுரப் பதிகத்தில்,

**வன்கண்ணர் வாளரக்கர் வாழ்வினை யொன்றறியார்**
**புன்கண்ண ராகிநின்று போர்கள்செய் தாரைமாட்டிச்**
**செங்கண்மால் செய்தகோயில் திருஇரா மேச்சுரத்தைத்**
**தங்களால் எய்தவல்லார் தாழ்வராந் தலைவன்பாலே**[57]

என்று இராமனைத் திருமாலாகவே நினைத்துப் பாடுகின்றார்.

மேற்கூறிய சான்றுகளால் இராமாயணக் கதைகள் கம்ப ருக்கு முன்பே தமிழ் இலக்கியங்களில் எடுத்தாளப்பெற்று வந்துள்ளமையை அறியமுடிகிறது.

**கம்பருக்குப்பின் இராமயணத்தாக்கத்தால் எழுந்த நூல்கள்**

கம்பருக்குப்பின் இராமயணத்தை அடியொற்றி தமிழில் பல இலக்கியங்கள் மலர்ந்துள்ளன. அவற்றுள் இராமசெயம், இராம நாடகக் கீர்த்தனை, இராமாயண வெண்பா, இராவணகாவியம், குயில் இராமாயணம், தக்க இராமாயணம், நாடக நூல்கள் முதலானவை குறிப்பிடத்தக்கனவாகும்.

**இராமசெயம்**

பாரதியப்பன் என்பவரால் இயற்றப்பட்டது. இராமாயணத் திருப்புகழ் என்ற பெயராலும் இந்நூல் வழங்கப்படுகிறது. முன்னூற்றைந்து பாடல்களைக் கொண்ட பக்திச்சுவைமிக்கது.

**இராம நாடகக் கீர்த்தனை**

இராம நாடகக் கீர்த்தனை பாடுவதற்கென்றே நாடக வடிவில் அமைந்த இசைப்பாடலாகும். இம்முறையில் இராமா யணக் கதைகளை அமைத்து முதலில் பாடியவர் சீர்காழி அருணாசலக்கவிராயர் ஆவர். இக்கதையைத் தகுந்த பண்களில்

ஆறு காண்டங்களுக்கும் தமிழ்க் கீர்த்தனைகளாக அமைந்துள்ளமை குறிப்பிடத்தக்கது ஆகும். இவர் தாம் பாடிய இசைப் பாடல்களை நாடகம் என்றே அழைக்கின்றார்.

**இராமாயண வெண்பா**

கோட்டையூர் சுப்பிரமணிய ஐயரால் இயற்றப்பட்டது இராமாயண வெண்பா. கம்பரை அடியொற்றி காண்ட, படல அமைப்புகள் காணப்படுகின்றன. கம்பராமாயணச் சொற்களை எடுத்து வெண்பாவாக யாத்துள்ளார்.

**இராவணகாவியம்**

புலவர் குழந்தை என்பவரால் இயற்றப்பட்டது இந்நூல். இதனுள் இராவணன் பெருமை, ஆட்சிச் சிறப்பு முதலியன எடுத்துப் பேசப்படுகிறது. இறுதியில் இராவணன் சூழ்ச்சியாகக் கொல்லப்பட்டார் என முடிக்கின்றார் ஆசிரியர். இது திராவிடர் கழக இயக்கத்தின் தாக்கத்தால் எழுந்த நூல்

**குயில் இராமாயணம்**

கதைப்பாடல் அமைப்புடையது குயில் இராமாயணம்.பரதன், சுக்கிரீவன், விபீடணன் ஆகியோரின் ஆட்சி நிலையைக் கூறுவது. இந்நூலைப் பெரும்பாடியில் வாழ்ந்த அமிர்த கவிராயர் இயற்றியுள்ளார். நூற்றிருபத்தெட்டுப் பாடல் களைக் கொண்டது.

**தக்க இராமாயணம்**

தக்கை என்னும் இசைப்பாவால் அமைந்த நூல். பத்தர் பாடி எம்பெருமான் கவிராயர், மூவாயிரத்து நாற்பத்தைந்து பாடல்களால் இதனை இயற்றியுள்ளார்.

**நாடகங்கள்**

கம்பராமாயணக்கதை நிகழ்ச்சிகளைக் கருவாகக் கொண்டு நாடகங்களை இயற்றியுள்ளனர் பிற்கால ஆசிரியர்கள். அவற்றுள் பின்வருவன குறிப்பிடத்தக்கனவாகும்.

க.அழகிரிசாமி எழுதிய கவிச்சக்ரவர்த்தி, வஞ்சமகள் நாடகங்கள், இரா.பழனிசாமி எழுதிய கவிச்சக்ரவர்த்தி கம்பர்

நாடகம், தி.மாணிக்கவாசகம் எழுதிய மன்னர் மன்னன், பரதன் நாடகங்கள், ரா.சீனிவாசன் எழுதிய சொல்லின் செல்வன் நாடகம், சுத்தானந்த பாரதியார் எழுதிய ஸ்ரீராமதியாகம் நாடகம் முதலான நாடகங்கள் கம்பராமாயணத் தாக்கத்தால் எழுந்தன வாகும்.

## பழமொழிகள்

கம்பராமாயணத் தாக்கத்தால் தமிழ் மக்களிடையே பழமொழிகள் பல தோன்றி வழங்கி வருகின்றன. அவற்றுள் இராமன் ஆண்டால் என்ன இராவணன் ஆண்டால் என்ன என்பதும், விடியவிடியக் கதைகேட்டு சீதைக்கு இராமன் சித்தப்பன் என்பதும், தம்பியுடையான் படைக்கஞ்சான் என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

இங்ஙனம் பல புதிய இலக்கிய வரவுகள் கம்பராமா யணத்தால் தமிழுக்குக் கிடைத்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

## தொகுப்புரை

மேற்கூறப்பட்ட செய்திகளின் மூலம் கீழ்க்காணும் முடிவுகள் கிடைக்கப்பெறுகின்றன.

1. இராமனது வரலாற்றைக் கூறுவதினால் இராமாயணம் எனவும், மற்ற இராமாயணத்திலிருந்து வேறுபடுத்திக் காட்ட ஆசிரியர் பெயரை முன்கொண்டு வான்மீகி இராமாயணம் எனவும் வழங்கப்பெற்று வருகிறது என ஆய்ந்து நிறுவப் பெற்றுள்ளது.
2. வால்மீகியின் வரலாறு, மற்ற இராமாயணங்கள் கூறும் வரலாறுகளிலிருந்து எங்ஙனம் மாறுபட்டுத் திகழ்கிறது என்பது ஒப்புநோக்கப்பட்டு ஆய்ந்து கூறப்பட்டுள்ளது.
3. வான்மீகியின் காலம் விரிவாக ஆய்வு செய்யப்பட்டு இடைச் சங்கத்தைச் சார்ந்தவராய் இருத்தல் வேண்டுமென நிறுவப் பெற்றுள்ளது.
4. இராமாவதாரம் என்பதே கம்பர் தம் நூலுக்கு இட்டு வழங்கிய பெயர் என்பதும், இன்று வழங்கும் பெயர் முந்நூல் கருதி வழங்கப்பெறுவது என்பதும் ஆய்ந்து சுட்டப் பட்டுள்ளது.

5. கம்பருக்கு வழங்கும் பெயர் இயற்பெயரே எனவும், கம்பர் பிறந்த ஊர் திருவழுந்தூரே எனவும், அவரை ஆதரித்த வள்ளல் சடையப்ப வள்ளலே எனவும் ஆய்ந்து கூறப் பெற்றுள்ளது.

6. கம்பருடைய காலம் பற்றி விரிவான ஆய்வு மேற்கொள்ளப் பெற்று, கி.பி.பன்னிரண்டாம் நூற்றாண்டின் பிற்பகுதி என நிறுவப்பெற்றுள்ளது.

7. தமிழில் கம்பருக்குமுன் இராமாயணக் குறிப்புக்கள் அமைந்த பாடல்களும், நூல்களும் எவை எவையென முறையாகச் சுட்டப்பட்டுள்ளன.

8. தமிழில் கம்பருக்குப் பின் எழுந்த இலக்கியங்கள் எவையென தொகுத்துக் கூறப்பட்டுள்ளன.

## குறிப்பு விளக்கம்

1. வா. இராமா., முதற்பகுதி, முன்னுரை
2. க. இராமா., அ.ப.ப., சுந்.காண்., முதற்பகுதி, முன்னுரை
3. கு.திருமேனி, கம்பருக்குக் கதை கொடுத்தவர் வான்மீகரா? ப.55.
4. க. இராமா., அ.ப.ப. சுந்.காண்., முதற்பகுதி, முன்னுரை.
5. வா. இராமா., பால.காண்., ச.4.
6. ஸ்ரீவசநபூஷணம், முதற்பிரகரணம், கு.5.
7. வா. இராமா., பால.காண். ச.2.
8. கு.திருமேனி.,கம்பருக்குக் கதை கொடுத்தவர் வான்மீகரா? ப.59.
9. மேற்படி நூல், ப.61.
10. வா. இராமா., முதற்பகுதி, முன்னுரை
11. ப.கோதண்டராமன்., உலகப்பெருங் கவிஞர்கள், ப.4.
12. தகடூரான்.,கம்பன் ஓர் ஒப்பீடு, ப.122.

13. கு.திருமேனி, கம்பருக்குக் கதை கொடுத்தவர் வான்மீகரா? மு. நூ.ப.35.
14. மேற்படி நூல், ப.58.
15. கலைக்களஞ்சியம், தொகுதி இரண்டு, ப.70.
16. மேற்படி நூல், ப.70
17. கோதண்டராமன்.,உலகப் பெருங்கவிஞர்கள், ப.8.
18. அரங்க, சீனிவாசன்.,புதுக்கோட்டைக் கம்பன் விழா மலர், ப.9.
19. ரா.இராகவையங்கார்.,தமிழ் வரலாறு. ப.37.
20. கு.திருமேனி.,கம்பருக்குக் கதை கொடுத்தவர் வான்மீகரா? பக்.35-36.
21. ரா.இராகவையங்கார்.,தமிழ் வரலாறு,ப.36,ப.இராமன்., ப.75, தமிழ் இலக்கிய வரலாறு.
22. கு.திருமேனி.,கம்பருக்குக் கதை கொடுத்தவர் வான்மீகரா? ப.35.
23. மேற்படி நூல், முன்னுரை
24. மா.இராசமாணிக்கனார்.,தமிழ்மொழி - இலக்கிய வரலாறு, ப.98.
25. க.இராமா.க.க.ப., சிறப்புப்பாயிரம், ப.11., வரி.1-3.
26. யாழ்ப்பாணம் சதாசிவப்பிள்ளை.,தமிழ் இலக்கியத் திரட்டு, கம்பர் சரித்திரம், ப.94.
27. செகவீரபண்டியனார்., கம்பன் கலைநிலை, முதற்பாகம், ப.33.
28. புலவர் சு.ஆ.இராமசாமி., கம்பராமாயண வசனம், முதற்பகுதி, முன்னுரை
29. அ.கி.நாயுடு., கம்பர் வரலாறு, ப.3.

இரா.வ.கமலக்கண்ணன்,, உலகப் பெருங்கவிஞர் கம்பர், ப.146.

30. செல்வகேசவராய முதலியார், கம்பநாடார், ப.18.

*31. மோ.வே.கோவிந்த ராஜய்யங்கார், கம்பநாடார், இதழ், கம்பச் சரிதம், ப. 18.*

*32. க.இராமா., அ.ப.ப. சுந்.காண். முதற்பகுதி, முன்னுரை.*

*33. சக்திதாசன் சுப்பிரமணியன், ஜலஜா சக்திதாசன், கம்பன் கவித்திரட்டு, பாலகாண்டம், ப.10.*

*34. தமிழ் நாவலர் சரிதை, பா.185.*

*35. அ.கி.நாயுடு, கம்பர் வரலாறு, ப.1.*

*36. க. இராமா., அ.ப.ப., சுந்.காண். முதற்பகுதி, முன்னுரை.*

*37. க. இராமா., க.க.ப., பால.காண். வேள்விப்படலம், பா.1, வரி.3-4.*

*38. மேற்படி நூல், யுத்த.காண். சேதுபத்தனப்படலம், பா.9., வரி.3-4.*

*39. தெ.பொ.மீனாட்சி சுந்தரனார். மூன்றாவது தமிழாசிரியர் கருத்தரங்கு மலர்*

*40. மு.அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு., ப.1.*
*மு.கோவிந்தசாமி, இலக்கியக் காலம், ப.29*

*41. தி.வை.சதாசிவப் பண்டாரத்தார், இலக்கிய ஆராய்ச்சியும், கல்வெட்டுகளும், பக்.21-25.*

*42. எஸ்.வையாபுரிப்பிள்ளை, தமிழ்ச்சுடர் மணிகள், கம்பர் காலம், ப.132.*

*43. கா.சுப்பிரமணியப்பிள்ளை, இலக்கிய வரலாறு, ப.342. இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், நான்காம் கருத்தரங்கு மலர், கம்பன் காலம், டாக்டர்.மு. கோவிந்த சாமி, செந்தமிழ் தொகுதி மூன்று, கம்பர் காலம், ரா.இராக வையங்கார், கால ஆராய்ச்சி, டாக்டர். மா.இராச மாணிக்கனார், ப.229.*

*44. தொல்.பொருள். அகத்திணையியல், நூ.54.*

*45. வீரசோழியம், வேந்தன் சிறப்பு, பா.113.*

*46. புறத்திரட்டு, எயில்கோள், ஆசிரியமாலை, பா.1334.*

47. அகம்., பா.70. வரி.13-17.

48. புறம்., பா.378, வரி.13-21.

49. கலித்., குறிஞ்சிக்கலி, பா.2. வரி. 1-5.

50. சிலம்., காண்.2. கா.13. வரி.63-65.

51. மணி., கா.17., வரி.9-13.

52. பெருங்கதை, காண்.1. கா.36, வரி.338-342, காண்.3, கா.24, வரி.90-92, காண்.1., கா.55, வரி.109-110.

53. சீவக., இலம்பகம், 7. பா.1643.

54. நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம், மூன்றாம் திருவந்தாதி, பேயாழ்வார், பாசு.53, வரி.1-3.

55. மேற்படி நூல். திருச்சந்தவிருத்தம், திருமழிசையாழ்வார், பாசு.22, வரி.1-3.

56. மேற்படி நூல். பெருமாள் திருமொழி, குலசேகராழ்வார், பாசு.44., வரி.1-4.

57. நாலாந்திருமுறை, திருநாவுக்கர நாயனார், திரு இராமேச்சுரப்பதிகம், பா.597.

# அயோத்தியா காண்டம்

# வான்மீகி - கம்பர் கதைக் கட்டமைப்பு

### தோற்றுவாய்

முதல் நூல் செய்யும் ஆசிரியர், தாம் அறிந்த கதைக் கருவை, தம்காலம், பட்டறிவு, மண்ணின் மரபுகள் முதலியவற்றிக்கு இசையுமாறு ஒரு நூலாக வடித்துத் தருகிறார். கால வளர்ச்சியில் ஏற்படும் கருத்து மாற்றங்கள் காரணமாகப் பின்னூல் ஆசிரியர் மூலக்கதையில் பல்வேறு மாற்றங்களைச் செய்து கொள்ளும் வாய்ப்பினைப் பெறுகிறார். இவ்வகையில் வான்மீகியிடமிருந்து கம்பர் வேறுபடும் இடங்கள் பல. வேறுபடுவதற்குக் காரணங்கள் பல இருத்தல் கூடும். இவற்றை ஆராயப் புகுமுன் இவ்விரு நூலாசிரியர்களில் கதைக் கடடமைப்புக்கு ஒரு எல்லையிட்டுக் காட்டுதல் தவிர்க்க இயலாததாகிறது. கதைச் சுருக்கம் போல் இவை தோன்றினும், இத்தகு ஆய்வுக்குப் பெரிதும் வேண்டத்தக்க தாகிறது. மூலநூலை மட்டுமோ,அன்றி வழிநூலை மட்டுமோ நன்கு அறிந்தார்க்கு இவ்வியலை நோக்கும் போதே கதை மாறுபடுமிடங்கள் சட்டெனப் புலப்பட்டுத் தோன்றும். இது ஒரு புறப் பயனாக அமையும்.

### அயோத்தியா காண்டம் - பெயர்க்காரணம்

காண்டங்களின் பெயர்கள் அந்தந்த இடங்களில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளின் தலைமை கருதியே பெயர் பெறுகின்றது. அவ்வகையில் கோசல நாட்டின் தலைநகரான அயோத்தியில் நிகழ்ந்தவைகளைப் பேசுதலின் இப்பகுதி அயோத்தியா காண்டம் என்று பெயர் பெற்றுள்ளது. இதற்கு உரையெழுதியவர்களும் இக்காரணம் பற்றியே பெயர் பெற்றது என்று கூறுவது குறிப்பிடத்தக்கது ஆகும்.[1]

### வான்மீகியின் அயோத்தியா காண்ட அமைப்பு

வான்மீகியின் அயோத்தியா காண்டம் நூற்றுப்பத்தொன்பது சருக்கங்களையும், நாலாயிரத்து முந்நூற்று அறுபத்து நான்கு சுலோகங்களையும் கொண்டு விளங்குகிறது.[2]

## வான்மீகியின்-அயோத்தியா காண்டக் கதைக் கட்டமைப்பு

### பட்டம் சூட்ட நிச்சயித்தல்

உயர்பண்புகள் அனைத்தும் ஒருங்கே அமையப்பெற்றவன் இராமன். தந்தையாகிய தசரதன் அவனுக்கு இளவரசுப் பட்டம் சூட்ட விருப்பம் கொண்டான். தன் எண்ணத்தைத் தெரிவிப்ப தற்காக மகாசபையைக் கூட்டினான். இராமனின் ஒப்புயர்வற்ற குணத்தை அறிந்திருந்த சபையினர் மன்னன் விருப்பத்திற்கு இசைந்து மகிழ்ந்தனர். மக்கள் மனத்தை உணர்ந்த தசரதன் பட்டம் சூட்டுவதற்குரிய ஏற்பாடுகளைச் செய்யுமாறு வசிட்ட முனிவரை வேண்டினான்.

### இராமனுக்கு அறிவித்தல்

தயரதன் பட்டம் சூட்டப்போகும் செய்தியினை இராம னுக்கு அறிவிக்க, அவனை அழைத்து வருமாறு சுமந்திரனை அனுப்பினான். சபைக்கு வந்த இராமனிடம் அரசநீதிகளை எடுத்துரைத்தான் தயரதன். அரண்மனைக்குச் சென்ற இராமனை மீண்டும் அழைத்து வருமாறு செய்து மக்கள் விருப்பப்படி இளவரசனாக நாளையே பட்டம் சூட்டப்போகின்றேன். எனக்குத் தீய சகுனங்கள் தோன்றுகின்றன. பரதன் தூயவன், அவன் மனத் தினைப் பிறர் மாற்ற முற்படுவர். எனவே பரதன் நாடு திரும்புமுன் இதனை முடிக்க வேண்டும் என்றான். அரண்மனைக்கு மீண்ட இராமன் தந்தையின் விருப்பத்தைத் தாய் கோசலையிடம் தெரிவிக்க அவள் மகிழ்ச்சியுற்றாள். அருகிருந்த இலக்குவனிடமும் கூறினான்.

### நோன்பு மேற்கொள்ளல்

தயரதன் வேண்டுகோளின்படி வசிட்ட முனிவர் இராமன் அரண்மனைக்குச் சென்று பட்டம் சூட்டுவதற்கு முன் நடத்த வேண்டிய சடங்குகளைச் செய்வித்தார். அதனை மன்னனுக்கு அறிவிக்கச் சென்றபோது நகர மக்கள் நகரத்தை அழகுபடுத்தினர். இராமன் சீதையுடன் திருமால் கோயிலுக்குச் சென்று நோன்பு மேற்கொண்டான்.

**மந்தரையின் சூழ்ச்சி**

மந்தரை, மக்கள் நகரத்தை அழகுபடுத்துவதைக் கண்டு இராமனுக்குப் பட்டம் சூட்டப்போகும் செய்தியினை அறிந்தாள். அதனால் பொறாமையுற்றுத் தீய எண்ணம் மேலிடக் கைகேயிடம் கூறினாள். இராமன் பட்டம் சூடப்போகும் செய்தியினைக் கேட்ட கைகேயி மகிழ்ச்சியுற்று மந்தரைக்கு விலை உயர்ந்த இரத்தின ஆபரணத்தைக் கொடுத்தாள். அதனைப் பெறாது கோபமுற்ற மந்தரை இராமனுக்கு அரசாட்சி கொடுப்பதினால் ஏற்படப்போகும் இழப்பினைப் பலவாறு கூறி கைகேயியின் மனத்தை மாற்ற முயன்றாள்.

மந்தரையின் சூழ்ச்சியால் ஆட்கொள்ளப்பட்ட கைகேயி பரதனுக்கு முடிசூட்ட அவளிடமே ஆலோசனை கேட்டாள். தசரதன் முன் கொடுத்த வரங்களை நினைவுறுத்தி அவற்றினைக் கேட்குமாறு கூறினாள் மந்தரை.

**கைகேயின் மாற்றம்**

மனமாற்றம் அடைந்த கைகேயி கோபமுற்றவளாய் அணிகலன்களை எல்லாம் நீக்கித் துயருற்று இருந்தாள். தயரதன் இராமனுக்குப் பட்டம் சூட்டப்போகும் செய்தியைக் கைகேயிக்குத் தெரிவிக்க அவளிருக்குமிடம் சென்றான். கைகேயி இருந்த நிலைக் கண்டு அவளின் துயர் நீக்க எதை விரும்பினும் தருவதாக உறுதி கூறினான்.

கைகேயி முன் அளித்த இரண்டு வரங்களை நினைவுறுத்திப் பரதனுக்கு நாடாளும் உரிமை வேண்டும். அதனால் இராமன் காடேக வேண்டும் என்ற வரங்களைக். கேட்டாள். அதனைக் கேட்ட தயரதன் துயரத்தால் மூர்ச்சை அடைந்து பலவாறு வேண்டி அவள் மனத்தை மாற்ற இயலாமல் வருந்தினான்.

**வரத்தினால் விளைந்தது**

பட்டம் சூட்டுவதற்குரிய அனைத்தும் தயாராக இருப்பதை மன்னனுக்கு அறிவிக்க வசிட்டர் சுமந்திரனை அனுப்பினார். மன்னன் இருக்குமிடம் சென்ற சுமந்திரன் உறங்கிக்கொண்டிருந்த தயரதனைப் புகழ்மொழிகள் கூறி எழுப்பினான். தயரதன் துன்பம்

மிகுதியால் வெறுத்துக்கூற மன்னனின் கோபத்திற்குக் காரணம் வினவினான். கைகேயி, இராமன் மீது கொண்ட அன்பால் மன்னன் இரவு முழுதும் உறங்கவில்லை ஆதலால் உடல் நலம் குன்றி இருக்கின்றார். நீ சென்று இராமனை அழைத்து வருக என்று கூறினாள். அது கேட்ட சுமந்திரன் இராமன் மாளிகைக்குச் சென்றான். செல்லும் வழியில் மண்டபத்தில் இருந்தவர்கள் மன்னன் வராமைக்குரிய காரணத்தை வினவ, மறுபடியும் மன்னன் இருக்குமிடம் சென்றான். மன்னன் இராமனை ஏன் அழைத்து வரவில்லை என்று வினவ, சுமந்திரன் இராமனிடம் சென்று தசரதன் அழைப்பதைக் கூற இராமன் இலக்குவனோடு மன்னனைக் காணச் சென்றான்.

அரண்மனையை அடைந்த இராமன் தசரதனை வணங்கி நின்றான். துயர் மேலிட மன்னன் பேசாதிருந்ததைக் கண்ட இராமன் கைகேயியிடம் காரணத்தை வினவினான். தன் தந்தையின் துயரம் நீங்கத் தான் யாது செய்ய வேண்டும் என்ற இராமனிடம், கைகேயி தனக்கு அளித்த இரண்டு வரங்களைக் கூறினாள். ஒன்று மரவுரி அணிந்து பதினான்கு ஆண்டுகள் தவம் புரிவதற்கு நீ இன்றே நாட்டை விட்டுக் காட்டிற்குச் செல்ல வேண்டும். இரண்டாவது வரம் நீ நாடு திரும்பும் வரை பரதன் நாட்டை அரசாட்சி செய்ய வேண்டும் என்று கூறினாள். அதனைக் கேட்ட இராமன் உளம் மகிழ்ந்து காட்டிற்குச் செல்ல விடை கேட்டான்.

**விடைபெறல்**

கைகேயியின் கட்டளையினை ஏற்ற இராமன் கோசலையைக் கண்டு நடந்தவற்றைக் கூறினான். அவள் பெரிதும் துயருற்று இராமனைக் காட்டிற்குச் செல்ல வேண்டாம் என்று வேண்டினாள். அதனைக் கேட்டிருந்த இலக்குவன் மிகவும் கோபத்துடன் விதியையும் வெல்வேன் எனப் பலவாறு கூறினான். இராமன் அவர்களது துயரத்தைப் போக்கித் தந்தையின் கட்டளைப்படியே காட்டிற்குச் செல்வதாகக் கூறினான். தாயிடமிருந்து விடைபெற்ற இராமன் சீதையிடம் சென்று காட்டிற்குச் செல்ல இருப்பதைக்கூற

சீதை தானும் உடன் வருவதாகக் கூறினாள். காட்டில் அனுபவிக்க வேண்டிய துன்பங்களை எடுத்துக்கூறி மறுத்தான் இராமன். சீதை உடன் வரவேண்டியதன் இன்றியமையாமையைக் கூறி அனுமதி பெற்றாள். இலக்குவனும் காட்டிற்குச் செல்ல இராமனின் இசைவைப் பெற்றான்.

இராமன் தன் செல்வம் முழுவதையும் மக்களுக்கு வழங்கி, இலக்குவன், சீதையுடன் தயரதனிடம் விடைபெறச் சென்றான். அப்போது நகர மக்கள் அனைவரும் வருத்தி இந்நிலைக்குக் காரண மாகிய கைகேயியைப் பலவாறு தூற்றினார்கள். தயரதனிடம் மூவரும் காட்டிற்குச் செல்ல விடை கேட்க அவன் புலம்பினான். சுமந்திரன், சித்தார்த்தர், வசிட்டர் முதலானோர்கள் கைகேயி யைப் பலவாறு கண்டித்தார்கள். இராமன் மரவுரியைக் கேட்க, கைகேயி கொடுத்த மரவுரியை மூவரும் உடுத்திக்கொண்டு விடை பெற்றனர்.

## இராமனைப் பிரிந்த அயோத்தி

இராமன், சீதை, இலக்குவன் மூவரும் தேரில் ஏற சுமந்திரன் தேரை ஓட்டிச் சென்றான். அக்காட்சியினைக் கண்ட மக்கள் பின் தொடர்ந்தனர். அயோத்தி நகரம் இருள் சூழ்ந்தது போன்றாயிற்று.

இராமன் சென்றவுடன் தயரதன், கைகேயிடம் நான் உனக்கு உரியவனல்லேன், பரதன் செய்யும் ஈமச்சடங்கு என்னைச் சேர வேண்டாம் என்று கூறிக் கோசலையிடம் சென்றான். கோசலை, இராமனை நினைத்து அவன் காட்டில் படப்போகும் துன்பங்களைக் கூறி வருந்தினாள்.

## மாந்தரின் செயல்

நகர மக்கள் இராமன் தேரினைத் தொடர்ந்து தமசா நதிக் கரை வரை சென்றார்கள். நதிக்கரையில் இரவு தங்கிய இராமன் அயோத்திக்கு மக்கள் திரும்பமாட்டர்கள் என்பதை அறிந்து தான் அயோத்திக்குச் செல்வது போல் தேரினைச் செலுத்தச்செய்து சுவடு தெரியா வண்ணம் காட்டிற்குப் புறப்பட்டான்.

நகர மக்கள் இராமனைக் காணாது தேரின் சுவடுவழியே சிறிது தூரம் சென்றார்கள். பின் சுவட்டினைக் காணாது இராமன்

அயோத்திக்குச் சென்று இருப்பான் என நினைத்து அயோத்திக்கு மீண்டனர்.

### குகன் சந்திப்பு

அயோத்தியின் எல்லையைக் கடந்து மூவரும் கங்கைக் கரையை அடைந்து அங்கிருந்து சிருங்கிபேரம் என்ற இடத்தைச் சேர்ந்தார்கள். அந்நாட்டு வேடர்குலத் தலைவனாகிய குகன் இராமனைக் கண்டு வணங்கி, கொண்டு வந்த பொருள்களை ஏற்றுக்கொள்ளுமாறு வேண்டினான். குகனின் அன்பைக் கண்டு மகிழ்ந்த இராமன் தான் மேற்கொண்டுள்ள தவவாழ்க்கைக்குப் பொருள்களைப் பெறுதல் ஏற்றதன்று என மறுத்துவிட்டான்.

இராமனும், சீதையும் இரவு உறங்கும்போது, இலக்குவன் தன்னுடன் காவல் காக்கின்ற குகனிடம் தங்கள் தாய், தந்தையைப் பற்றிக் கூறி வருத்த முற்றான். மறுநாள் காலை இராமன் கங்கையைக் கடக்கக் குகனிடம் ஓடம் கொண்டுவரப் பணித்தான். தேரினை ஓட்டி வந்த சுமந்திரன் இராமனைப் பிரிய மறுத்து உடன் வருவேன் என்றான். இராமன் அவனிடம் தான் கூறும் செய்திகளைத் தயரதனிடம் சென்று கூறுமாறு அயோத்திக்கு அனுப்பினான். குகனுடைய பணியாட்கள் ஓடம் செலுத்த மூவரும் கங்கையைக் கடந்தனர்.

### இராமன் உற்ற துயர்

கங்கையைக் கடந்து, இரவு மரத்தின் கீழ் தங்கினார்கள். அப்போது இராமன் இலக்குவனிடம் எந்தத் தந்தை மனைவியின் பொருட்டுப் பிள்ளையைக் காட்டிற்கு அனுப்புவான் எனத் துயரத்துடன் தயரதனையும் கைகேயியையும் குற்றம் சாட்டினான். கைகேயியினால் தாய் கோசலைக்கும், சுமத்திரைக்கும் துன்பம் ஏற்படும் என்பதால் இலக்குவனை அயோத்திக்குச் செல்லக் கூறினான். இலக்குவன் அதனை ஏற்க மறுத்தான். இரவு நீங்கி, காலையில் கங்கையும், யமுனையும் இணையும் இடம் நோக்கிச் சென்றார்கள்.

### முனிவரைக் காணல்

கங்கையும், யமுனையும் சேருமிடத்தில் பரத்வாச முனிவர் ஆசிரமத்தைக் கண்டு, அவரை வணங்கினார்கள். இராமன்

அவரிடத்தில் காட்டிற்கு வர நேர்ந்த வரலாற்றைக் கூறினான். பரத்வாச முனிவர் அவர்களைத் தன்னுடன் தங்குமாறு கூற, இராமன் அயோத்திக்கு அண்மையில் இருப்பதால் மக்கள் காண வருவார்கள் என்பதால் வேறு இடம் செல்வதாகக் கூறினான். முனிவர் சித்திரகூட மலைக்குச் செல்லுமாறு வழியைக் காட்டினார். மூவரும் யமுனை நதியைக் கடந்தார்கள். சீதை யமுனை நதியையும், சித்திரகூட மலையை அடைந்த பின் ஆலமரத்தையும் வழிபட்டாள். சித்திரகூட மலையில் வான்மீகி முனிவரைக் கண்டு மூவரும் வணங்கினார்கள். அங்கு இலக்குவன் அமைத்த பர்ண சாலையில் தங்கினார்கள்.

### இராமனைப் பிரிந்த தயரதன்

இராமனைப் பிரிந்து அயோத்திக்கு மீண்ட சுமந்திரனிடம் இராமன் நிலையைக் கேட்டு வருத்தமுற்றார்கள். பின் சுமந்திரன் தயரதனிடம் சென்று இராமன் காட்டை அடைந்தமையையும், அவன் கூறிய செய்திகளையும் கூற அதனைக் கேட்டு மன்னரும், தேவியர்களும் அழுது புலம்பினார்கள். கோசலை தயரதனிடம் புண்படுத்தும் சொற்களைக் கூற, தயரதன் தான் செய்த தீய செயல்களை நினைத்து வருத்தமுற்றான்.

தயரதன் தான் முன்செய்த தீவினையைக் கோசலையிடம் கூறினான். யானை வேட்டைக்குச் சென்றபோது முனிவர் மகன் நீர் முகந்த ஓசையை யானை என நினைத்து அம்பெய்து கொன்று விட்டேன். மகன் இறந்ததைக் கேட்ட அவன் பெற்றோர்கள் எங்களைப் போன்று நீயும் புத்திர சோகத்தால் இறப்பாய் எனச் சாபமிட்டனர். அந்தச் சாபத்தின் பலனைத் தற்போது அனுபவிக்கின்றேன் என்று கூறி உயிர் துறந்தார். இறுதிச் சடங்குகள் செய்யப் புதல்வர்கள் அருகே இல்லாததால் தயரதன் உடலை எண்ணெயில் இட்டுப் பாதுகாத்தார்கள்.

### பரதன் நாடு திரும்பல்

தயரதன் இறந்தமையால் அமைச்சர்கள் வசிட்டரிடம் நாட்டில் மன்னன் இல்லாவிட்டால் வரும் தீமையை எடுத்துக்கூறி தயரதன் புதல்வர்களில் ஒருவனை மன்னனாக்க வேண்டும்

என்றார்கள். வசிட்டர் கேகய நாட்டிற்கு சென்றுள்ள பரதன், சத்துருக்கனை அழைத்துவர சித்தார்த்தன் முதலான தூதுவர் களைப் பரிசு பொருள்களுடன் நாட்டில் நடந்த நிகழ்ச்சிகளைக் கூற வேண்டாம் எனக் கூறி அனுப்பி வைத்தார்.

பரதன் தீயசெயல்கள் நிகழக்கூடிய கனவுகளைக் கண்டு அதனால் தந்தைக்கோ, சகோதரர்களுக்கோ தீமை நிகழப் போகின்றது எனத் துயருற்றான். அப்போது வசிட்டர் அனுப்பிய தூதுவர்கள் பரதனிடம் உடன் அழைத்து வருமாறு கூறியமையை எடுத்துரைத்தார்கள். பரதன், சத்துருக்கனன் இருவரும் அனை வரிடமும் விடைபெற்று அயோத்திக்குப் புறப்பட்டார்கள்.

### தந்தை இறந்தமை அறிதல்

அயோத்திக்கு வந்த பரதன் நகர் பொலிவிழந்து இருப் பதைக் கண்டான். தயரதனின் அரண்மனைக்குச் சென்று அங்கு மன்னனைக் காணாது கைகேயியின் மாளிகைக்குச் சென்றான். கைகேயி தயரதன் இறந்த செய்தியைக் கூற, பரதன் மயங்கி வீழ்ந்தான். பின் தெளிந்து இராமன் எங்குள்ளான் என வினவ இராமன், சீதை, இலக்குவன் மூவரும் காட்டிற்குச் சென்றுள்ளதை கூறினாள். அவர்கள் செய்த குற்றம் யாது எனப் பரதன் கேட்க, தாம் பெற்ற வரங்களைக் கூறி, பரதனை நாடாளும்படி வேண்டி னாள் கைகேயி.

### மகன் தாயை பழித்துக்கூறல்

கைகேயி கூறியவற்றைக் கேட்ட பரதன் மிகவும் துயருற் றான். நாட்டினை நான் ஆள விரும்பவில்லை. இராமனுக்கே உரியது இந்நாடு, மன்னன் செய்தது முறையன்று. காட்டிற்குச் சென்ற இராமனை அழைத்து வந்து நாடாளச் செய்வேன் என்றான். மேலும் கைகேயியை நோக்கி இராமனை, கோசலை யிடமிருந்து பிரித்தமையால் ஏற்பட்ட துன்பத்தைக் கூறினான். காமதேனு தன் மகன்கள் காளைகளாகத் துன்படுவதைக் கண்டு கண்ணீர் வடித்தமையைக் கூறி அங்ஙனம் கோசலையைத் துன்பப் படும்படி செய்துவிட்டாய். உன் எண்ணத்தை என்றும் நிறை வேற்றேன் என்றான்.

**தூயவன் பரதன்**

பரதன் கோசலையைக் காணச்சென்றான். கோசலை அவனிடம் அரசு உனக்கு எளிதில் கிடைத்துள்ளது. நீ நாடாள், என்னை இராமன் இருக்குமிடம் கொண்டுசேர் என்றாள். அதனைக் கேட்ட பரதன் அவள் அடியில் வீழ்ந்து தான் குற்ற மற்றவன் என்பதைக் காட்டப் பல சபதங்களைச் செய்தான். கோசலை, முனிவர்கள் அடைய வேண்டிய உயர்ந்த நிலையை அடைவாய் என்று பரதனது தூய எண்ணத்தைப் புகழ்ந்தாள்.

**தந்தைக்குக் கடன் செய்தல்**

வசிட்டர், பரதனைத் தயரதனுக்கு இறுதிக் கடன் செய்யு மாறு கூறினார். தயரதன் உடலை சரயு நதிக்கரைக்குக் கொண்டு சென்று மகன் தந்தைக்குச் செய்ய வேண்டிய இறுதிச் சடங்கு களையெல்லாம் பரதன் நிறைவேற்றினான்.

**மந்தரைக்கு நேர்ந்தவை**

தயரதனுக்கு இறுதிக் கடன்களையெல்லாம் முடித்த பரதன் இராமனைக் காணக் காட்டிற்குப் புறப்பட்டான். அதனைக் கண்ட சத்துருக்னன் ஒரு பெண்ணால் இராமன் காட்டிற்கு அனுப்பப் பட்டதை நினைத்தால் வியப்பாக உள்ளது. அதனை ஏற்று இராமனும், இலக்குவனும் சென்றது முறையல்ல என்றான். அப்பொழுது மந்தரை அங்குவர, இவளால் நேர்ந்ததல்லவா எனக் கோபத்துடன் அவளைத் தரையில் வீழ்த்தினான். பரதன், இராமன் அறிந்தால் கோபம் கொள்வான் எனக்கூறி அவளை விடுமாறு செய்தான்.

**பரதன் நாடாள மறுத்தல்**

வசிட்டர் முதலானோர்கள் பரதனிடம் நாட்டை ஏற்றுக் கொள்ளுமாறு கூறினார்கள். பரதன், இராமனே இதை ஏற்றுக் கொள்ளத் தகுதி உடையவன். நான் ஏற்பது தர்மம் அன்று. இராமனைக் காடு சென்று அழைத்து வருவேன், இயலாமல் போனால் இலக்குவன் போன்று காட்டிலேயே வாழ்வேன் என்றான். இதனைக் கேட்ட அனைவரும் பரதன் அன்பைக் கண்டு மகிழ்ந்தார்கள். பரதன் அனைவரையும் இராமனைக் காட்டி

லிருந்து அழைத்துவரத் தன்னுடன் வருமாறு வேண்டினான். சுமந்திரனிடம் காட்டிற்குச் செல்லப் படைகளைத் தயார் செய்யுமாறு கூறினான்.

**குகனைக் காணல்**

பரதன், படைகள் பின்வர கோசலை, சுமத்திரை, கைகேயி யோடு அமைச்சர் முதலானோர்கள் முன்செல்ல இராமனைக் காணக் காட்டிற்குப் புறப்பட்டான். இரவு கங்கைக்கரையில் சிருங்கிபேரத்தில் தங்கினார்கள். படைகள் வந்திருப்பதைக் கண்ட குகன் பரதனிடம் சென்று படையைப் பற்றி ஐயத்துடன் வினவ உண்மை நிலையை எடுத்துரைத்தான் பரதன். பரதன் அன்பை உணர்ந்த குகன் இராமன் சிருங்கிபேரத்தில் தங்கியிருந்தமை யையும் உறங்கிய இடத்தையும் காட்டினான். பரதன் தானும் அவ்வாறே மரவுரி அணிந்து, பழங்களையும், கிழங்குகளையும் உண்டு வாழ்வேன் என்று சபதம் செய்தான்.

**முனிவரைக் காணல்**

இரவு நீங்கி காலைப்பொழுதில் குகன் உதவியுடன் கங்கையைக் கடந்தான் பரதன். அங்கு பரத்துவாச முனிவரின் இருப்பிடம் கண்டு படைகளைத் தூரத்தே நிறுத்திவிட்டு அவரை வணங்கச் சென்றான். அதனைக் கண்ட முனிவர் ஐயமுற்றார். பரதன், இராமனை அழைத்துச் செல்ல வந்தமையைக் கூற முனிவர் மகிழ்ந்து அனைவருக்கும் விருந்து படைத்தார். மறுநாள் காலை பரதன் முனிவரை வணங்கி இராமன் இருக்குமிடத்தைக் கேட்டறிந்தான். அவர் பரதனுடன் வந்த மகளிர் மூவரையும் பற்றி வினவ பரதன் கோசலை முதலானவர்களை அறிமுகம் செய்து தன் தாயாகிய கைகேயியைப் பற்றி இழிவாகக் கூறினான். முனிவர் கைகேயி குற்றமற்றவள் என்றும், நிதழ்ந்தவையெல்லாம் தெய்வச் செயல் என்றும் கூறினார். அனைவரும் அவரை வணங்கி விடை பெற்றனர்.

**இராமன் இருக்குமிடம் காணல்**

பரத்துவாச முனிவரிடம் விடைபெற்ற பரதன் படைகளுடன் சித்திரகூட மலையை அடைந்தான். அங்கு ஓரிடத்தில்

புகைவருதலைக் கண்டு இராமன் இருக்குமிடம் என உணர்ந்தான். படைகளைத் தூரத்தில் நிறுத்திவிட்டு சத்துருக்கனன், சுமந்திரன், குகன் பின்தொடர இராமனைக் காண முன் சென்றான்.

அப்போது இராமன் சித்திரகூடத்தின் இயற்கை அழகையும், மந்தாகினி ஆற்றின் வளங்களையும் கண்டு மகிழ்ந்து சீதையிடம் கூறிக்கொண்டிருந்தான். தூரத்தே படையின் ஓசையும், புழுதி ஆகாயமளவு செல்வதையும் கண்ட இராமன் இலக்குவனை அழைத்துக் காரணத்தை அறிந்து வருமாறு கூறினான். மரத்தின் மீது ஏறி, வரும் படைகள் பரதனுடையவை என்பதை அறிந்த இலக்குவன் கோபம் கொண்டான். இராமன் பரதனுடைய பண்பு நலன்களையெல்லாம் எடுத்துரைத்து இலக்குவனின் எண்ணத்தை மாற்றினான்.

**இராமனைக் கண்ட பரதன்**

இராமன் இருக்குமிடத்தை அடைந்த பரதன் தன்னால் நேர்ந்த இன்னல் என வருத்திக் கண்ணீர் பெருக, பேச இயலாது இராமன் அடியில் வீழ்ந்தான். சத்துருக்கனும் அங்ஙனமே செய்தான். அதனைக் கண்ட இராமன் தானும் கண்களில் நீர் பெருகப் பரதனையும், சந்துருக்கனனையும் தழுவிக்கொண்டான்.

இராமன், பரதனிடம் இன்னல்களை ஏற்றுக் காட்டிற்கு வந்ததன் காரணத்தை வினவி, அனைவரின் நலன்களையும் கேட்டான், பின் அவனுக்கு அரசநீதிகளை எடுத்துரைத்து அதன்படி ஆட்சி செலுத்துகின்றாயா என்றான். பர்தன் எனக்கு அரசநீதி எதற்கு? மூத்தவன் இருக்கும்போது இளையவன் அரசு ஏற்பது நீதியன்று. தாங்கள்தான் அயோத்திக்கு வந்து அரசை ஏற்றுக் கொள்ளவேண்டும். தந்தை இறந்ததால் இறுதிக்கடன் செய்தல் வேண்டும் என்றான் பரதன்.

**தந்தை இறந்ததை அறிதல்**

தயரதன் இறந்ததை அறிந்த இராமன் மயங்கி வீழ்ந்தான். பின் தெளிந்து பலவாறு கூறி வருந்தினான். இராமன் சீதைக்கும், இலக்குவனுக்கும் தயரதன் இறந்தமையைக்கூற அவர்களும்

பெரிதும் துயருற்றார்கள். இராமனும், இலக்குவனும் தந்தைக்குச் செய்ய வேண்டிய இறுதிக் கடனைச் செய்தார்கள்.

**நாடாள இராமனை அழைத்தல்**

இராமன், பரதனிடம் மரவுரி அணிந்து வந்ததன் காரணத்தை வினவினான். பரதன், கைகேயியின் வார்த்தைக்கு உடன்பட்டுத் தந்தை அநீதியைச் செய்து விட்டார். அவர் இறந்துவிட, கைகேயி நரகத்தையே அடையப்போகிறாள். தாங்கள்தான் நாடாள வேண்டும் என்றான். இராமன் தாயை இகழ்தல் தகாது. தாய், தந்தை கூறியவைகளை ஏற்று நடத்தல் வேண்டும். எனவே என்னைக் காடாளவும், உன்னை நாடாளவும் கூறிய அவர்கள் சொற்படி காட்டில் வாழ்வேன் என்றான்.

பரதன் அயோத்தி எனக்குக் கொடுக்கப்பட்டது. அதனை உனக்குத் தருகிறேன் என்று கூற, இராமன் நீ ஆள்வதே தகுந்தது என்றான். பின் ஜாபாலி முனிவர் பரதனுடைய வேண்டுகோளுக்கு இணங்குமாறு நாத்திகவாதத்தை இராமனுக்கு எடுத்துரைத்தார். அதனைக் கேட்ட இராமன் நீதியன்று என மறுத்துரைத்தான்.

வசிட்ட முனிவர், தாய், தந்தையைவிடக் குரு மேலானவர், என் வார்த்தைகளைக் கேட்பதால் தர்மத்தை மீறியவனாக மாட்டாய், எனவே அரசை ஏற்றுகொள் என்றார். இராமன் தந்தையின் கட்டளையை மீறுதல் முறையன்று என்றான்.

இராமன் அயோத்திக்கு வர மறுத்ததைக்கண்ட பரதன் தருப்பைப் புல்லைப் பரப்பி உண்ணா நோன்பை மேற்கொண்டான். அதனைக் கண்ட இராமன் நோன்பை விடுத்து அயோத்திக்குச் சென்று நாட்டை ஆளுமாறு கூறினான். பரதன் பதினான்கு ஆண்டுகள் நான் காட்டில் வாழ்கிறேன். தாங்கள் அயோத்திக்குச் சென்று நாட்டை ஆளவேண்டும் என்றான்.

தேவர்களும், முனிவர்களும் இராமனுக்கும் பரதனுக்குமிடையே நிகழ்ந்தவைகளைக் கேட்டு வியப்புற்று மகிழ்ந்தார்கள். பின் பரதனிடம், தந்தையின் கட்டளையை நிறைவேற்றுவதே தர்மம் என்றார்கள்.

**திருவடி பெற்று நாடு திரும்பல்**

பரதன், இராமனின் எண்ணத்தை மாற்ற இயலாது என்பதை உணர்ந்து திருவடிகளைத் தருமாறு கேட்டான். இராமன் அங்ஙனமே கொடுக்க பரதன் அவற்றைத் தலைமேல் கொண்டு தாங்கள் அயோத்திக்கு வரும்வரை மரவுரியுடன் நகரத்திற்கு வெளியே வாழ்ந்து, அரசாட்சி செய்வேன். குறித்த காலம் முடிந்த மறுதினம் நாடு திரும்பவில்லையாயின் தீயில் புகுவேன் என்றுரைத்து இராமனிடம் விடைபெற்றான். அவன் கூறியவாறே அயோ ;தி நகரம் செல்லாது நந்திக் கிராமத்தில் திருவடிகளை வைத்து நாட்டை ஆண்டு வந்தான்.

**தண்டக வனம் செல்லல்**

சித்திரகூடத்தில் இராவணனின் தம்பி கரன் என்னும் அரக்கனால் ஏற்படும் துன்பங்களால் முனிவர்கள் வேறிடத்திற்குச் சென்றார்கள். அவர்கள் சென்றபின் இராமன், சீதை, இலக்குவனன் மூவரும் அத்திரி முனிவரின் ஆசிரமத்துக்குச் சென்றார்கள். முனிவரின் மனைவி அனுசூயை சீதைக்குக் கற்பின் பெருமைகளை எடுத்துரைத்தாள். சீதை தன் வரலாற்றை அனுசூயைக்குக் கூறினாள்.

மறுநாள் காலைப்பொழுதில் இராமன் அத்திரி முனிவரின் ஆசிரமத்தில் இருந்து வேறிடம் செல்லப் புறப்பட்டான். முனிவர்கள் அரக்கர்களால் ஏற்படும் துன்பத்தை நீக்குமாறு வேண்டினார்கள். காட்டிற்குச் செல்லும் வழியைக் கேட்டறிந்து முனிவர்களிடம் விடைபெற்று மூவரும் தண்டக வனம் சென்றார்கள்.[3]

**கம்பரின் - அயோத்தியா காண்ட அமைப்பு**

கம்பரின் அயோத்தியா காண்டம் மந்திரப்படலம், மந்தரை சூழ்ச்சிப் படலம், கைகேயி சூழ்வினைப்படலம், நகர் நீங்கு படலம்,தைலம்ஆட்டுபடலம், குகப்படலம், வனம்புகு படலம், சித்திரகூடப் படலம், பள்ளி படைப் படலம், கங்கைகாண் படலம், ஆறுசெல் படலம், திருவடி சூட்டுப்படலம் என்ற பன்னிரண்டு படலங்களையும், ஆயிரத்து நூற்றுதொண்ணுற்றெட்டுப் பாடல்களையும் கொண்டு இலங்குகிறது.[4]

## கம்பரின் - அயோத்தியா காண்ட கதைக் கட்டமைப்பு

### முடி சூட்ட நிச்சயித்தல்

தயரதன் தன்மூத்த புதல்வன் இராமனுக்கு முடிசூட்டித் தான் காட்டிற்குச் சென்று தவம்புரியக் கருதினான். தன் விருப் பத்தை அமைச்சர்களையும், வசிட்டரையும் அழைத்துக் கூறினான். மன்னனின் விருப்பத்தை அறிந்த வசிட்டர் இராமனுடைய பண்பு நலன்களைப் பாராட்டி அவனே மன்னன் ஆவதற்கு உரியவன் என்றார். சுமந்திரன் அமைச்சர்கள் அனைவரும் மன்னனின் விருப்பத்திற்கு இசைவதைத் தெரிவித்தான்.

வசிட்டர் முதலானவர்களின் விருப்பத்தை அறிந்து மகிழ்ந்து தயரதன் சுமந்திரனை அனுப்பி இராமனை அழைத்துவரச் செய்தான். இராமனிடம் தன் வயது முதிர்ந்த நிலையைக் கூறி முடிசூட்ட நிச்சயித்திருப்பதைத் தெரிவித்தான். இராமன் தன் இசைவைக் கூற, மகிழ்ந்த தயரதன், மன்னர்களுக்கு அதனை அறிவிக்கச் செய்தான். வசிட்டரிடம் முடிசூட்டு விழாவிற்கு வேண்டியவற்றைச் செய்யுமாறு பணித்து, நாள் கணிப்பவர்களிடம் நல்லதொரு நாளைத் தெரிவிக்குமாறு வேண்டினான்.

### தாயின் மகிழ்ச்சி

இராமனுக்கு முடிசூட்டவிருக்கும் செய்தியை மங்கையர் நால்வர் கோசலையிடம் கூற, அவள் மகிழ்ச்சியடைந்தாள். அதனால் தன் கணவன் தசரதன் முடிதுறப்பான் என்பதை நினைத்து வருத்தமுற்றாள். எனினும் மகிழ்ச்சியான செய்தியைக் கூறிய மகளிர்க்குப் பரிசுகளை வழங்கி மகிழ்வித்தாள் கோசலை. பின் சுமத்திரையோடு திருமால் கோயிலுக்குச் சென்று வணங்கி தானங்கள் பல செய்து நோன்பு மேற்கொண்டாள்.

### மாந்தரின் மகிழ்ச்சி

தயரதன் வசிட்டரை அழைத்து முடிசூட்டுவதற்கு நாளை நல்ல நாள். எனவே முடிசூட்டுவதற்கு முன் வேண்டிய சடங்கு களைச் செய்து, அரச நீதிகளை இராமனுக்கு எடுத்துரைக்குமாறு வேண்டினான். வசிட்டரும் அங்ஙனமே இராமன் இருக்குமிடம் சென்று அவனுக்கு அரசநீதிகளை எடுத்துரைத்தார். பின் இராம

னுடன் திருமால் கோயிலுக்குச் சென்று வணங்கி, இறைவன் முன்னிலையில் இராமனுக்குச் செய்ய வேண்டிய சடங்குகளை யெல்லாம் செய்தார். தருப்பைப் புல்லில் இருந்து நோன்பு மேற்கொள்ளுமாறு செய்துவிட்டு மன்னனுக்குத் தெரிவித்தார். அதனை அறிந்த தயரதன் நகரத்தை அலங்கரிக்குமாறு மக்களுக்கு கட்டளையிட்டான். நகர மக்கள் நாளை இராமன் முடிசூடுவான் என்பதை அறிந்து மகிழ்ச்சி மேலிட நகரத்தைப் பலவாறு அழகுபடுத்தினார்கள்.

### மந்தரையின் சூழ்ச்சி

விழாக்கோலம் பூண்ட நகரத்தைக் கண்ணுற்ற மந்தரை யாகிய கூனி இராமனுக்கு முடிசூட்டப் போகும் செய்தியை அறிந் தாள். இளமைக் காலத்தில் தன் கூன் சிதைய உண்டை எறிந்த இராமன், மன்னன் ஆவது அவளுக்குப் பொறுக்கவில்லை. பொறாமையால் கோபம் கொண்டு, உறங்கும் கைகேயியை எழுப்பி, அவளிடத்து இராமனுக்கு முடிசூட்டப்போகும் செய்தி யைக் கூறினாள். அதனைக் கேட்டு மகிழ்ந்த கைகேயி முத்து மாலை ஒன்றைப் பரிசாகக் கூனிக்கு வழங்கினாள். கூனி அம்மா லையை வீசியெறிந்து விட்டுக் கைகேயியின் தூய மனத்தினைப் பலவாறு கூறி மாற்ற முயன்றாள்.

### கூனியின் உபாயம்

கூனியின் சொற்களால் மனமாற்றம் அடைந்த கைகேயி தன் மகன் பரதன் அரசு எய்தும் வழியைக் கேட்டாள். கூனி தயரதன் **சம்பரசுரனோடு** போர் புரிந்தபோது நீ செய்த உதவிக்காக அளித்துள்ள இரண்டு வரங்களைக் கொண்டு, ஒரு வரத்தால் பரதன் நாடாளவும், மற்றொன்றினால் இராமன் பதினான்கு ஆண்டுகள் காடாளவும் வேண்டுமாறு உபாயம் கூறினாள். அதனைக் கேட்ட கைகேயின் உளம் மகிழ்ந்து கூனியைப் போற்றினாள்.

### கைகேயின் மாற்றம்

கூனியின் உபாயத்தால் மனமாற்றம் அடைந்த கைகேயி தன் அணிகலன்களையெல்லாம் நீக்கித் தரையினில் பொலிவிழந்து

கிடந்தாள். தயரதன் விழா ஏற்பாடுகளைச் செய்துவிட்டுக் கைகேயின் மாளிகைக்குச் சென்றான். அங்குக் கைகேயின் நிலை கண்டு என்ன நேர்ந்ததோ என எடுக்கத் தொடங்கத் தன்னை விடுவித்துக்கொண்டு தரையில் வீழ்ந்தாள். தயரதன் நடந்தது யாது என்று வினவ, கைகேயி என்னிடத்தில் அன்பிருப்பது உண்மையாயின் முன் கொடுத்த வரங்களை அளிக்க வேண்டும் என்றாள். கைகேயின் வஞ்சக உள்ளத்தை அறியாத தயரதன் நீ வேண்டியதைத் தருகிறேன் என்றான்.

கைகேயி, ஒரு வரத்தால் பரதன் நாடாளவும், மற்றொரு வரத்தால் இராமன் காடாளவும் வேண்டும் என்ற வரங்களைக் கேட்டாள். அதனைக் கேட்ட தயரதன் துன்பம் கொண்டான். பலவாறு வேண்டியும் கைகேயின் மனம் மாறவில்லை. தந்த வரத்தினை நல்கவில்லையாயின் உயிர்விடுவேன் என்றாள். மன்னன் மிக வருந்தி நீ கேட்டதைக் கொடுத்தேன். என் மகன் காட்டை ஆள்வான் நான் இறந்து தேவருலகத்தை ஆள்வேன், நீ உன் மகனோடு பழிக்கடலில் வீழ்வாய் என்று கூறி மூர்ச்சை யுற்றான்.

### வரத்தால் விளைந்தது

இரவு நீங்கி காலைப்பொழுதில் முடிசூட்டு விழாவினைக் காண்பதற்கு மன்னர்களும், மக்களும் முடிசூட்டும் மண்டபத் திற்கு வந்தார்கள். வசிட்டர் முடிசூட்டுவதற்கு வேண்டியவற்றைச் செய்துவிட்டுக் காலம் நெருங்கிவிட்டதால் தயரதனை அழைத்து வருமாறு சுமந்திரனை அனுப்பினார். சுமந்திரன் தயரதன் இருக்கும் கைகேயியின் மாளிகைக்குச் சென்றான். கைகேயி இராமனை அழைத்து வருமாறு சுமந்திரனிடம் கூறினாள். சுமந்திரனும் திருமால் கோயிலில் இருந்த இராமனை அழைத்து வந்தான். இராமன் கைகேயியைக் கண்டு வணங்கி நிற்க கைகேயி, பரதன் நாடாள வேண்டும், நீ தவவேடம் கொண்டு பதினான்கு ஆண்டுகள் காடாள வேண்டும். இது மன்னன் ஆணை என்றாள். அதுகேட்ட இராமன் மிகவும் மலர்ந்த முகத்துடன் மன்னன் கட்டளை இல்லையெனினும், உம்முடைய கட்டளையை

மறுத்துரைப்பேனோ இப்பொழுதே விடையும் பெற்றேன் என்றான்.

### தாயும் சேயும்

கைகேயியிடமிருந்து விடைப்பெற்றுச் சென்ற இராமன் கோசலை இருக்குமிடம் சென்றான். இராமனைக் கண்ட கோசலை ஐயம் கொண்டு முடிபுனைதற்கு ஏதேனும் இடையூறு உண்டோ என்று வினவ, இராமன் நின் மகன் பரதன் முடிசூடுகின்றான் எனறான். அதனைக் கேட்ட கோசலை முறைமையன்று என்ப தன்றி, பரதன் முடிசூட்டுவதற்கு உன்னைவிடச் சிறந்தவன். நின் தம்பிக்கு அரசு கொடுத்து ஒற்றுமையாக வாழ்க என்றாள். இராமன் தந்தை என்னைப் பதினான்கு ஆண்டுகள் முனிவர் களோடு காட்டில் தங்கி வருதல் வேண்டும் என்றார் என்றான். இராமன் கூறியதைக் கேட்ட கோசலை பலவாறு புலம்பினாள். கோசலைக்கு ஆறுதல் கூறிய இராமன் மன்னன் கட்டளையை மறுக்கலாகாது என்றான். உடன் வருவேன் என்ற கோசலையை மன்னனைத் தேற்றுவது தங்கள் கடன் என்று கூறி சுமத்திரையைக் காணச் சென்றான் இராமன்.

### உரிமைக்கு ஆகான்

கோசலை, இராமனைக் காட்டிற்குச் செல்லாமல் தடுக்கும் பொருட்டுத் தயரதனைக் காணச்சென்றாள். தயரதன் இருந்த நிலை கண்டு பலவாறு கூறிப் புலம்ப,கோசலையின் அழுகை யொலிக்கேட்டு முடிசூட்டும் மண்டபத்திலிருந்த மன்னர்கள் காரணத்தை அறிந்து வருமாறு வசிட்டரை வேண்டினார்கள். வசிட்டர் சென்று செய்தியுணர்ந்து தயரதனுக்கு ஆறுதல் கூறி, கைகேயியிக்கும் அறிவுரை கூறினார். வசிட்டரின் அறிவுரை கேட்டும் மனம் மாறாத கைகேயியைத் தயரதன் இவள் என்னு டைய மனைவியும் அல்லள், இவள் மகன் எனக்கு மகனும் அல்லன், என் உரிமைக்கும் ஆகான் என்று கூறினான்.

### சாபம் உரைத்தல்

பின் கோசலை வந்துள்ளமையை உணர்ந்த தயரதன் மயங்கி வீழ்ந்தான், கோசலை பலவாறு ஆறுதல் கூறினாள். மூர்ச்சை

தெளிந்து தயரதன் தான் முன்னொரு காலத்தில் முனிவர் மகனைச் கொல்ல நேர்ந்தமையையும் முனிவர் மகனைப் பிரிந்து வாழ விரும்பாமல் வானுலகம் சென்றார், அதுபோல் நீயும் மகனைப் பிரிந்து உண்டாகும் துன்பத்தால் வானுலகம் செல்வாய் என்று சாபம் பெற்ற வரலாற்றையும் கூறி இராமன் காடு புகுவதும், என்னுயிர் வானம் புகுவதும் உறுதி என்றான். தசரதன் கூறியதைக் கேட்ட கோசலை மேலும் துயருற்றாள்.

**விதிக்கும் விதியாகும் என் வில்**

இராமன் காடேகும் செய்தி அறிந்த இலக்குவன் கோப முற்று இராமன் முடிபுனை விழாவைத் தடுப்பவர் யாவராயினும் ஒழித்து விடுவேன் என்று கூறிக்கொண்டு வில்லுடன் திரிந்தான். இலக்குவனின் நாணொலி கேட்டு சுமித்திரையின் மாளிகையில் இருந்த இராமன் இலக்குவனிடம் வந்து எல்லாம் விதியினால் விளைவது, எவர் மீதும் குற்றம் இல்லை என்றான். விதிக்கும் விதியாகும் என் வில் தொழில் காண்டி என இலக்குவன் வீரம் பேச அவன் கோபத்தை நீக்கினான் இராமன்.

**சுமித்திரையின் மாண்பு**

இராமன், இலக்குவனோடு தன்பொருட்டு வருந்தும் சுமித்திரையிடம் சென்று தான் காட்டிற்குச் செல்ல வேண்டியதன் இன்றியமையாமையை எடுத்துரைத்து அவள் வருத்தத்தை நீக்கி னான். அப்போது கைகேயியின் பணிப்பெண்கள் மரவுரியைக் கொண்டு வந்தனர். இலக்குவன் அவற்றைப் பெற்றுக்கொண்டு தன் தாயை வணங்கி நின்றான். சுமித்திரை அவனிடம் இராமன் இருக்கும் காடே அயோத்தி, இராமனே உன் தந்தை, சீதையே உன் தாய், நீ இராமனுக்கு அடியவன் போல் ஏவல் செய்தல் வேண்டும். இராமன் அயோத்திக்குத் திரும்பி வந்தால் வருக. இன்றேல் முன்னம் முடிக என்று கூறி இருவருக்கும் விடை கொடுத்தாள். இராமன் பெற்றோர்க்குத் துணையாக இருக்குமாறு கூற, இலக் குவன் தானும் உடன் வருவேன் என்று கூறி இராமனின் இசைவைப் பெற்றான்.

### நின் பிரிவினும் சுடுமோ பெருங்காடு

இராமன் சீதையைக் காண்பதற்கு அவளிருக்குமிடம் சென்றான். கணவன் மரவுரி அணிந்து வருவதைக் கண்ட சீதை திகைத்து காரணம் கேட்க, இராமன் காடேகும் செய்தியைக் கூறி நீ வருந்தாமல் இரு என்றான். தன் கணவன் அரசு துறந்து காடு புகுவதைவிட, வருந்தாமல் இரு என்ற சொல்லைக் கேட்டு மிகவும் துயருற்றாள் சீதை. இராமன், காடு மிக்க வெப்பம் உடையது. நின் பாதங்கள் அவற்றைக் தாங்காது என்றான். சீதை நின் பிரிவினும் சுடுமோ பெருங்காடு என்று கூறி, தானும் மரவுரி அணிந்து வந்து கணவன் கையைப் பற்றி நின்றாள்.

### மூவரும் விடை பெறுதல்

இராமன், சீதை, இலக்குவன் மூவரும் மரவுரி அணிந்து வீதி வழியே செல்வதைக்கண்ட நகரமக்கள் வருத்தமுடன் பின் தொடர்ந்தார்கள். தயரதனின் மாளிகையை அடைந்த இராமன் உடன் வந்த தாய்மார்களை, தந்தையின் துயரத்தைப் போக்குமாறு கூறி வணங்கி விடைபெற்றான். மூவரும் தேரில் ஏறிக் காடு நோக்கிச் செல்ல நகரமக்களும் தேரைத் தொடர்ந்து சென்றார்கள்.

### சுமந்திரன் நாடு திரும்பல்

மூவரும் அன்றிரவு முனிவரோடு சோலையில் தங்கினார்கள், உடன் வந்த நகரமக்கள் சோலைக்கு அருகில் தங்கி நீண்ட நேரம் உறங்காதிருந்து நள்ளிரவில் தங்களை மறந்து உறங்கலாயினர். அப்போது இராமன், சுமந்திரனை அழைத்துத் தொடர்ந்து வரும் மக்களை அயோத்திக்கு மீண்டும் செல்லச் செய்தல் இயலாது. அவர்கள் உறங்கும்போதே நீ தேரைத் திருப்பிக்கொண்டு அயோத்திக்குச்செல், விழித்தெழும் மக்கள் தேர்ச்சுவடு கண்டு நான் அயோத்தி மீண்டதாக எண்ணித் திரும்புவார்கள என்றான்.

இராமன் கூறியதைக்கேட்ட சுமந்திரன் அவனைப் பிரிவ தற்கு மனமின்றி வருந்தினான். இராமன் அவனது துயரத்தை நீக் கித் தந்தைக்கும், தாய்க்கும், வசிட்டருக்கும் செய்திகள் கூறினான். சீதையும் அங்ஙனமே கூற சுமந்திரன் விடைபெற்று அயோத்திக்குச் செல்ல மூவரும் அங்கிருந்த காடு நோக்கிச் சென்றார்கள்.

### தனையனைப் பிரிந்த தந்தை

அயோத்தியை அடைந்த சுமந்திரன் வசிட்டரிடம் சென்று இராமன் காடு புகுந்ததைக் கூறினான். பின் இருவரும் தயரதன் மாளிகைக்குச் சென்றார்கள். தேர் வந்ததே என்று அறிந்த மன்னன் வசிட்டரிடம் இராமன் வந்தானோ என்று வினவ, மறுமாற்றம் சொல்ல இயலாதவராய் முனிவர் அப்பால் சென்றார். அவரின் முகக்குறிப்பால் இராமன் அண்மையில் உள்ளானா? நெடுந்தூரம் சென்று விட்டானா? என்று கேட்டான். சுமந்திரன், இராமன் காடுபுகுந்தான் என்ற அளவில் மன்னன் உயிர் பிரிந்தது.

தயரதன் இறந்தமை அறிந்த கோசலை முதலானவர்கள் புலம்பி அழுதார்கள். சுமந்தரன் சென்று மன்னன் இறந்தமையைக் கூற, வசிட்டர் அங்கு வந்து விதியின் விளைவை எண்ணித் துயருற்றார். பரதன் வந்தபின் மன்னனுக்கு இறுதிக்கடன் செய்யத் தகும் என்று கூறி அதுவரை உடலை எண்ணெயில் இட்டுப் பாதுகாக்கச் செய்து பரதனை விரைந்து அழைத்து வருமாறு தூதுவரை அனுப்பினார்.

### இராமனைக் காணாத மாந்தர்

இரவுநீங்கி காலைப்பொழுதில் இராமன் இருந்த சோலையில் அவனைக் காணாது வருந்திய நகர மக்கள் தேரின் சுவட்டினைக் கண்டு மகிழ்ந்தார்கள். இராமன் அயோத்திக்குத் திரும்பியிருப்பான் எனக்கருதி நாடு மீண்டார்கள். அங்கு மன்னன் இறந்த செய்தியையும், இராமன் நாடு திரும்பாமல் காடு சென்றமையையும் அறிந்து மிக்க துன்பம் அடைந்தார்கள்.

### நால்வர் ஐவராதல்

இராமன், சீதை, இலக்குவனனோடு கங்கையின் வட கரையை அடைந்தான். அங்குள்ள முனிவர்கள் இராமனை எதிர் கொண்டு அழைத்துச் செல்ல அவர்கள் ஆசிரமத்தில் தங்கினான். சீதையுடன் கங்கையில் நீராடி முனிவர்கள் அளித்த விருந்தை உண்டு வீற்றிருந்தான். அப்போது வேடர் குலத் தலைவனான குகன் இராமன் வரவு அறிந்து அவனைக்காணக் காணிக்கையுடன் வந்தான். அவனது அன்பைப் பாரட்டிய இராமன் நாளையே

கங்கையைக் கடக்க வேண்டும். நீ இன்று இரவு ஊர்க்குச் சென்று தங்கி நாளைக் காலை ஓடத்துடன் வருக என்றான். குகன் இராமனைப் பிரிந்து செல்வதற்கு வருந்தி இரவு உடன் தங்குவதற்கு இசையுமாறு வேண்டினான். இராமன் அவனது பேரன்பைக்கண்டு தம்மோடு இருப்பதற்கு இசைந்தார். இலக்குவனன் வாயிலாக இராமன் அயோத்தியைத் துறந்து காடுபுகுந்த செய்தியை அறிந்த குகன் பெரிதும் வருந்தினான். மறுநாள் காலைப்பொழுதில் இராமன், குகனிடம் ஓடம் கொண்டுவரப் பணிக்க அவன் தன்னுடைய ஊரில் வந்து தங்குமாறு இராமனை வேண்டினான். குகனின் அன்பு மிகுதி கண்டு மகிழ்ந்த இராமன் புண்ணிய நதிகளில் நீராடி, வழிபட்டு விரைவில் வருவோம் என்றான்.

இராமன் பணித்தவாறே குகன் ஓடத்துடன் வர மூவரும் முனிவரிடம் விடைபெற்றார்கள். குகன் ஓடம் செலுத்த. கங்கையின் தென்கரையை அடைந்தனர். இராமன் குகனிடம் சித்திரகூடத்திற்குச் செல்லுதற்குரிய வழியை வினவினான். குகன் காட்டில் தனக்குள்ள பயிற்சி மிகுதியும், தன் ஆற்றலையும் கூறித் தன்னையும் உடன் அழைத்துச் செல்லுமாறு வற்புறுத்தி, இசைந்தால் தன் சுற்றத்தாரையும் அழைத்து வந்து பணிகளைச் செய்கிறேன் என்றான்.

குகன் கூறியதைக் கேட்ட இராமன் உடன் வருதற்கு இலக்குவன் ஒருவனே போதும். நீ என் உயிர் போன்றவன். என் தம்பி உன் தம்பி சீதை உன் கொழுந்தி. கடல் சூழ்ந்த உலகம் உன்னுடையது. அயோத்தியிலுள்ள நம் சுற்றத்தைக் காத்தற்கு உன் தம்பி பரதன் இருக்கிறான். இங்குள்ள நம் சுற்றத்தைக் காத்தற்கு நீ இருத்தல் இன்றியமையாதது என்று கூறி அவனிடம் விடை பெற்றான். இராமன் காட்டை நோக்கிச் செல்ல, சீதையும் இலக்குவனும் பின் தொடர்ந்தார்கள்.

### பரத்துவாச முனிவரைக்காணல்

இராமன் வழியில் இனிய காட்சிகளைச் சீதைக்குக் காட்டியவாறே அழைத்துச் சென்றான். மாலையில் பரத்துவாச முனிவரின் ஆசிரமத்தை அடைந்தார்கள். இராமனின் வரவை அறிந்து

மகிழ்ந்த முனிவர் அவனது தவவேடம் கண்டு கண்ணீர் பெருக வருந்தினார். இராமன் காடு புகுந்ததற்கான காரணத்தை அறிந்து அவர்களை அன்புடன் உபசரித்தார்.

முனிவர் அவ்விடத்தின் சிறப்பையெல்லாம் எடுத்துரைத்து இராமனை அங்குத் தங்குமாறு வேண்டினார். இராமன் அயோத் திக்கு அருகிலிருப்பதால் நாட்டு மக்கள் வந்து நிறைவார்கள். அதனால் தவவாழ்க்கை தடைப்படும். எனவே வேறிடம் கூறுமாறு பணித்தான். மூவரும் சித்திரகூடம் செல்லுமாறு விடை கொடுத்து அனுப்பினார்.

**இராமன் வியந்த திறன்கள்**

மூவரும் யமுனையைக் கடந்து பாலை நிலத்தை அடைந் தார்கள். அதனையடுத்து வனங்கள் நிறைந்த சித்திரகூடக் மலைக்குச் சென்றார்கள். அம்மலையில் இருந்த முனிவர் இராமன் வரவு கண்டு மகிழ்ந்து உபசரித்தார். அங்கு இலக்குவ னால் அமைக்கப்பட்ட பர்ணசாலையில் தங்கினார்கள். இராமன் வழிநடையில் சோர்வுறாத சீதையின் அடித்திறத்தையும், பர்ண சாலை அமைத்த இலக்குவனின் கைத்திறத்தையும் கண்டு வியந்து, இலக்குவனிடம் உனக்கு நீண்டநாள் துன்பம் விளைப்பவன் ஆவேன் என்றான். அதுகேட்டு இலக்குவன் இராமன் காட்டிற்கு வர நேர்ந்த துன்பத்தை எண்ணி வருந்தினான். இராமன் தவவாழ்க்கையின் நலன்களை எடுத்துரைத்து அவன் வருத்தத்தை நீக்கினான்.

**பரதன் நாடு திரும்பல்**

வசிட்டர் அனுப்பிய தூதுவர்கள் கேகய நாட்டிற்குச் சென்று ஓலையைப் பரதனிடம் கொடுத்தனர். செய்தி அறிந்த பரதன் அனைவரிடமும் விடைபெற்று சத்துருக்கனொடு அயோத்திக்கு புறப்பட்டான். கோசல நாட்டில் வரும்வழியிடை பொலிவிழந்து இருப்பதைக்கண்ட பரதன் ஐயுற்று சத்துருக்க னிடம் கூற அவனும் வருத்தமுற்றான். இருவரும் விரைந்து அரண்மனையை அடைந்து தந்தையைக் காணச் சென்றார்கள்.

தயரதனைக் காணாது வருந்தி இராமன் இருக்குமிடம் சென்ற பரதனை, பணிப்பெண் ஒருத்தி கைகேயி அழைப்பதாகக்

கூறினாள். பரதன் சென்று தாயை வணங்கி நிற்க அவள் கேகய நாட்டிலுள்ளவர்களின் நலம் வினவ, கூறிய பரதன் தந்தை எங்குளார் என்றாள். கைகேயி தயரதன் இறந்தமையைக் கூறி வருந்தாதே என்றாள். அதுகேட்ட பரதன் மிக வருந்திப் புலம்பினான். பின் இராமனைக் கண்டாலன்றி என் துன்பம் தீராது என்றான். கைகேயி, அவன் சீதை, இலக்குவனோடு காட்டில் உள்ளான் என்றாள். அச்சொல்லைக் கேட்ட பரதன் நடுங்கி இராமன் காடுபுகுந்த காரணத்தை அறிந்து தாயைப் பலவாறாகப் பழித்துக் கோசலை இருக்குமிடம் சென்றான்.

**தூயவன் பரதன் எனல்**

பரதன், கோசலையிடம் சென்று அடியில் வீழ்ந்து புலம்பினான். அவன்படும் துயரை உணர்ந்த கோசலை, பரதன் தூயவன் எனத் தெளிந்து, கைகேயியின் சூழ்ச்சியினை அறியவில்லையா என்றாள். அது கேட்ட பரதன் பல சூளுரைகளைக் கூறி அவளது ஐயத்தை நீக்கினான். கோசலை தூய உள்ளத்தையுடைய பரதனை வாழ்த்தித் தந்தைக்கு இறுதிக்கடன் செய்யுமாறு கூறினாள்.

**ஈமக்கடனுக்கு உரிமையில்லை எனல்**

பரதன், வசிட்டருடன் சென்று தந்தையின் உடம்பைக் கண்டு புலம்பினான். பின் மன்னன் உடம்பை சரயு நதிக்கரைக்கு யானைமீது ஏற்றிக் கொண்டு சென்றார்கள். அந்தணர்கள் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்தபின் பரதனை இறுதிக் கடன் செய்ய அழைக்க, பரதன் சென்றான். அப்போது வசிட்டர் அவனைத் தடுத்து, அன்னை தீமையால் மன்னன் உன்னையும் துறந்தான். ஆதலால் ஈமக்கடனுக்கு உரிமை உடையவன் அல்லன் என்றார். பரதன் தன் நிலைக்குப் பெரிதும் வருந்தினான். பின்னர்ச் சத்துருக்கனைக் கொண்டு இறுதிக்கடனை வசிட்டர் நிறைவேற்றினார்.

**பரதன் நாடாள மறுத்தல்**

இறந்த மன்னனுக்குச் செய்யவேண்டிய சடங்குகள் யாவும் முடிந்த பின் வசிட்டரும், அமைச்சர்களும் மன்னன் இல்லாமல் நாடு இருப்பது மரபன்று எனப் பரதனை நாடாளுமாறு

கூறினார்கள். பரதன் மூத்தவன் இருக்க இளையவன் அரசு ஏற்பது தருமம் அன்று. இராமனை அழைத்து வந்து முடிசூட்டுவேன். அவன் வர மறுத்தால் நானும் காட்டில் தங்கித் தவம் செய்வேன். நீங்கள் வேறு கூறின் உயிர்வாழேன் என்றான். அவையோர் பரதன் பண்பினைக் கண்டு வியந்து போற்றினர்.

### பரதன் காடு செல்லல்

பரதன் சத்துருக்கனிடம் இராமனை அழைத்துவரக் காடு செல்வது பற்றி முரசறைந்து அறிவிக்கச் செய்தான். மக்கள் அனைவரும் இராமனைக் காண மகிழ்ச்சியோடு புறப்பட்டார்கள். தாயாரும், முனிவரும், அமைச்சரும், அந்தணரும், படையும் உடன் வர பரதன் மரவுரி அணிந்து புறப்பட்டான். அப்பொழுது கூனியும் உடன் வருவதைச் சத்துருக்கன் கண்டு வெகுண்டு அவள் கையைப் பற்றினான். அவன் செயல் கண்ட பரதன் தடுத்தது அண்ணன் சினம் கொள்வான் என்று கூறி அழைத்துச் சென்றான். முன் இராமன் தங்கிய சோலையில் பரதன் தங்கி இராமன் உறங்கிய புல்லணையின் அருகில் புழுதியில் உறங்கினான். அங்கிருந்து இராமன் காலால் நடந்து சென்றமையறிந்து தானும் நடந்தே சென்றான்.

### ஆயிரம் இராமன் ஒப்பாகான்

பரதன் கங்கையின் வடகரையை அடைந்து தன் படையொடு தங்கினான். அவன் படையொடு வந்தமை கண்டு பகையெனப் பிறழ உணர்ந்த குகன் சினம் கொண்டு தன் படைகளோடு தென்கரையில் நின்றான். சுமந்திரன், பரதனிடம் சென்று குகன் பெருமைகளைக் கூறி, அவன் உன்னைக்காண விரும்பித் தென்கரையில் நிற்கின்றான் என்பதை உணர்த்தினான்.

அதுகேட்ட பரதன் மகிழ்ந்து, குகன் இரமானுக்குத் தோழமையாயின் அவனும் எனக்கு அண்ணனே என்று அன்புமிக சத்துருக்கனுடன் அவனைக் காணச் சென்றான். பரதனின் மாசடைந்த மெய்யும், மரவுரியுடையும், பொலிவிழந்த முகத்தையும் கண்ட குகன் தவறாக நினைத்தமைக்கு வருந்தி, எதிரே தொழுது நின்ற பரதனை வீழ்ந்து வணங்கினான். பரதன், அயோத்திக்கு

இராமனை அழைத்துச் சென்று முடிசூட்டுவிக்க வந்ததாகக் கூற குகன் ஆயிரம் இராமன் உனக்கு ஒப்பாகான் என்று வியந்து போற்றினான்.

### பரதன் தன்நிலைக்கு வருந்தல்

பரதன், இராமன், இலக்குவன் தங்கிய இடத்தை வினவ, குகன், இராமன் தங்கி உறங்கிய இடத்தையும், இலக்குவன் கண் இமைத்தலும் செய்யாது இராமனைக் காத்து நின்றமையையும் கூறினான். அது கேட்ட பரதன் நான் இராமனுக்கு எல்லையற்ற துன்பம் விளைதற்குக் காரணமாயினேன். இலக்குவன் அத்துன்பங் களைத் துடைக்க நின்றான் என்று தன்நிலை நோக்கி வருந்தினான்.

அன்று இரவு இராமன் தங்கிய இடத்தில் படையோடு தங்கினான் பரதன். காலைப்பொழுதில் குகனின் உதவியுடன் படைகளைக் கங்கையின் தென்கரையை அடைவித்தான். படகில் செல்லும்பொழுது குகன் பரதனை வினவ, பரதன், குகனுக்குத் தாய்மார்களை அறிமுகம் செய்வித்தான். குகன் வணங்கக் கோசலை அவனுக்கு நல்லுரை வழங்கினாள். அனைவரும் தென் கரையை அடைய குகன் உடன்வர, பரதன் நடந்து சென்றான்.

### பரதன் பரத்துவாச முனிவரைக் காணல்

பரதன் படைகளோடு பரத்துவாச முனிவரின் இருப் பிடத்தை அடைந்து அவரை வணங்கினான். முனிவர் அவன் வருகை பற்றி வினவ, பரதன் வந்தமைக்கான காரணத்தைக் கூறினான். அவன் தூயமனம் கண்டு மகிழ்ந்து முனிவர் அன்றிரவு விருந்தளித்தார். பரதன் தான் மட்டிலும் இராமனைப்போன்று காய், கிழங்கு உண்டு, புழுதியில் படுத்து உறங்கினான். மறுநாள் காலை அனைவரும் பரத்துவாச முனிவரிடம் விடைபெற்று சித்திரகூடம் நோக்கிச்சென்றனர்.

### தவறை உணர்த்திய தனயன்

படைகள் சித்திரகூடத்தை நெருங்கியபொழுது மேலே கிளம்பிய தூசிகளையும் எழுந்த ஒலிகளையும் கண்டு படை வருவதை உணர்ந்தான் இலக்குவன். குன்றின்மீது ஏறி, வருவது பரதன் என்பதைக் கண்டு, அவனைத் தவறாக எண்ணி போர்

செய்யத் துணிந்தான். இராமன், பரதன் அன்பினால் தன்னைக் காண வருகின்றான் என்று அவன் சினத்தை நீக்கினான்.

பரதன் படைகளை தூரத்தே நிறுத்திவிட்டு, சத்துருக் கனுடன் முதலில் வந்து ராமனை வணங்கினான். இராமன் இலக்குவனை நோக்க அ ா பரதன் மீது பிறழ நினைத்தமையை எண்ணி வருந்தினான்.

### தயரதன் இறந்தமை அறிதல்

பரதனின் தவக்கோலத்தைக் கண்ட இராமன், தந்தை நலத்துடன் இருகின்றாரா? என்று வினவ, பரதன் தந்தை இறந்த செய்தியைக் கூறினான். அதுகேட்ட இராமன் தரையில் வீழ்ந்து புலம்ப, அங்கு வந்த வசிட்டர் அவனுக்கு ஆறுதல் கூறி, தயரதனுக்கு நீர்க்கடன் செய்யுமாறு கூறினார், இராமனும் அங்ஙனமே செய்தான்.

பின்னர் இராமன் முனிவர், அமைச்சர், மன்னர்கள் உடன் வர, பர்ணசாலைக்குச் சென்றான், அங்கு சீதை இருந்த நிலை கண்ட பரதன் அவள் அடியில் வீழ்ந்து கண்ணீர்விட்டான். இராமன் அவளுக்குத் தயரதன் இறந்தமையைக்கூற, பெரிதும் துயருற்றாள். முனிவர்களின் மனைவியர் கங்கையில் நீராட்டி சீதையின் வருத்தத்தைத் தணித்தனர். அப்போது கோசலை முதலானவர்களோடு, படையுடன் சுமந்திரன் வந்து சேர்ந்தான். தாய்மார்களைக் கண்ட இராமன், சீதை, இலக்குவன் மூவரும் அவர்கள் அடிகளில் வீழ்ந்து வணங்கிக் கண்களில் நீர்ச்சொரிந்து நின்றனர்.

### இராமனை நாடாள அழைத்தல்

இரவு நீங்கிக் காலைப்பொழுதில் எல்லோரும் தன்னைச் சூழ்ந்திருக்க, இராமன் பரதனிடம் தவவேடம் பற்றி வினவனான். பரதன், இராமனை அயோத்திக்கு வந்து அரசாளுமாறு வேண்டினான். இராமன் தந்தையின் கட்டளையை நிறைவேற்ற வேண்டும் என்று மறுத்துரைத்து, அரசு உன்னுடையது என்றான். பரதன் அவ்வாறாயின் நான் இப்பொழுது உனக்குக் கொடுத்தேன். நீ முடி

சூட்டிக்கொள் என்று வேண்டினான். இராமன் அதனை மறுத்து, பரதனை அரசாளும்படி ஆணையிட்டான்.

வசிட்டர், அரசாட்சியை ஏற்றுக்கொள்ளுமாறு ஆணை யிட இராமன் அவரை வணங்கி மறுத்தான். இராமன் அரசாள மறுத்தமையால் பரதன் தானும் காட்டில் வாழ்வேன் என்றான்.

## திருவடி பெறுதல்

பரதன் உறுதியைக் கண்ட தேவர்கள் இராமன் காடாளவும், பரதன் நாடாளவும் பணித்தனர். அதன்படி இராமன் பரதனைப் பதினான்கு ஆண்டுகள் நாடாளும்படி வேண்டினான். பரதனும் உடன்பட்டு பதினான்காம் ஆண்டின் இறுதியில இராமன மீளா விடில் உயிர் நீப்பேன் என்றான். இராமன் அதற்கு இசைந்தான். பரதன் இராமனின் திருவடிகளை வேண்டிப்பெற்று, தலைமேல் சுமந்துகொண்டு தன்னுடன் வந்தவர்களுடன் மீண்டான். அயோத்தி நகரினுள் செல்லாது நந்திக் கிராமத்தில் திருவடி நிலைகளைக் கொண்டு அரசாண்டு வந்தான்.

## இராமன் வேறிடம் செல்லல்

பரதன் முதலானவர்களை அயோத்திக்கு அனுப்பிய இராமன் அங்குத் தங்கினால் நகரமக்கள் தன்னைக்காண்பதற்கு மறுபடியும் வருவார்கள் எனக்கருதி சீதை, இலக்குவனொடு தென்திசை நோக்கிச் சென்றான்.[5]

## குறிப்பு விளக்கம்

1. க. இராமா., அயோ.காண். உ.வே.சா.பதிப்பு, முன்னுரை, அ.ப.ப., முன்னுரை, வை.மு.கோபாலகிருஷ்ணமாசிரியர் பதிப்பு, முன்னுரை.
2. வா.இராமா, அயோ.காண்.
3. மேலது.
4. க. இராமா., அயோ.காண்., அ.ப.ப.
5. மேலது.

# அயோத்தியா காண்டத்தில் கம்பரின் நீக்கம்

கம்பர் முன்னூலாகிய வான்மீகியில் சொல்லப்பட்ட கதைப் பகுதிகளில், சிலவற்றைத் தம் காலச் சூழலுக்கும், காப்பிய நோக்கிற்கும் ஏற்பப் பாடாது விடுத்துள்ளார். அங்ஙனம் விடுத் துள்ளமையை நீக்கம் (Deletion) என்று கூறலாம். அவ்வகையில் அயோத்தியா காண்டத்தில் கம்பர் நீக்கியவை எவையென ஆய்ந்து கூறுவதாக இப்பகுதி அமைகிறது.

## அயோத்தியா காண்டத்தில் கம்பர் நீக்கியவை

கம்பர் கதையோட்டத்திற்கும், காப்பிய மாந்தரின் பண்பு நலன்களுக்கும் ஏலாத கூற்றுக்களையும், நிகழ்ச்சிகளையும் அயோத்தியா காண்டத்தில் பாடாது நீக்கியுள்ளார். இங்ஙனம் கம்பர் நீக்கிய கூற்றுக்களையும் நிகழ்ச்சிகளையும் அ.பாண்டு ரங்கன் கதையின் ஓட்டத்திற்கும், போக்கிற்கும் தடையாகவும், முரணாகவும் அமைகின்ற கூற்றுக்கள், நிகழ்ச்சிகள், காப்பியக் கதை மாந்தரின் பண்பு நலன்களுக்கு ஊறு செய்யும் வகையில் அமைகின்ற கூற்றுகள், நிகழ்ச்சிகள் என வகைப்படுத்தியுள்ளார்.[1] இதனைக் கொண்டு நீக்கம் வகைப்படுத்தப்பட்டுள்ளது.



**கதையோட்டத்தில் தடையாகவும், முரணாகவும் அமையும் கூற்றுகள், நிகழ்ச்சிகள் நீக்கம்**

அயோத்தியா காண்டத்தில் கதையோட்டத்திற்குத் தடையாகவும் முரணாகவும் அமைந்த கூற்றுக்களையும், நிகழ்ச்சிகளையும் நீக்கி, காப்பியத்தைப் படைத்துள்ளார் கம்பர்.

**கூற்றுநீக்கம்**

1. பரதன், கேகயத்திலிருக்கும் போது, விடியற்காலத்தில், தயரதன் எண்ணெய் பூசிக்கொண்டு கழுதை பூட்டிய தேரில் தென்திசை நோக்கிச் செல்வது போன்ற தீக்கனவு கண்டு பலரும் ஆறுதல் கூற வருந்திக் கொண்டிருந்தான் என வான்மீகி கூறுகின்றார்.[2]

கம்பர், பரதன் கண்டு கூறிய தீக்கனவைத் தம் காப்பியத்தில் கூறாமல் விடுத்துள்ளார். அங்ஙனம் கம்பர் பாடாமல் விடுத்தமைக்கு ஆய்வாளர்கள் காரணம் கூறியுள்ளனர்.

பரதன், தான் கண்ட தீக்கனவை விரிவாக எடுத்துக் கூறுவது, கதையோட்டத்தைத் தடுப்பதால், கம்பர் அந் நிகழ்ச்சியை ஒதுக்கி விடுகின்றார் என்கிறார் அ.பாண்டுரங்கன்.[3]

கோசல நாட்டையும் அயோத்தியா நகரத்தையும் நேரில் கண்டு மக்களின் துயரத்தால் தயரதன் மரணத்தை உய்த்துணர வைப்பது காவியப் போக்கிற்குச் சிறப்புத்தரும் என்ற எண்ணத்தால் பரதன் கனவைக் கூறாது விடுத்தார் என்கிறது அ.ப. பதிப்பு.[4]

தமிழ் இலக்கியங்களில் பின் நடக்கப்போகும் நல்வினை, தீவினைகளை முன்பே உணர்த்தும் உத்தியாகக்கனவினை ஆசிரியர்கள் கையாண்டுள்ளனர். சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் இவ்வுத்தியைக் கையாண்டுள்ளமை குறிப்பிடத் தக்கதாகும். பாண்டியனின் மனைவி கோப்பெருந்தேவி கண்டு கூறிய, கனவின் வாயிலாக மதுரையில் பின் நிகழப்போகும் தீவினைகளை,

**திசையிரு நான்கும் அதிர்ந்திடும் அன்றிக்**
**கதிரை இருள் விழுங்கக் காண்பென்காண் எல்லா**
**விடுங்கொடி வில்லிர வெம்பகல் வீழும்**
**கடுங்கதிர் மீனிவை காண்பென்காண் எல்லா**

கருப்பம்

செங்கோலும் வெண்குடையும்

செறிநிலத்து மறிந்து வீழ்தரும்

நங்கோன்றன் கொற்றவாயில்

மணிநடுங்க நடுங்குமுள்ளம்

இரவுவில் விடும் பகல்மீன் விழும்

இருநான் குதிசையும் அதிர்ந்திடும்

வருவதோ துன்பமுண்டு[5]

என முன்பே உணர்த்தியுள்ளார்.

வான்மீகியில் தயரதன் இறந்த பிறகு நாடாள அரசன் வேண்டும் அமைச்சர்களும், மக்களும் வசிட்டனிடம் கேட்கின்றனர். வசிட்டர் கேகயத்தில் இருக்கும் பரதனை அழைத்துவரத் தூதுவர்களை அனுப்புகின்றார். தூதுவர்கள் கேகயத்தை அடைந்து பரதனைக் காண வரும்போது பரதன் தான் கண்ட தீக்கனவைப் பற்றி கூறிக்கொண்டிருந்தான் எனக்காட்டுகின்றார்.

தயரதன் இறந்த பிறகு பரதன் வாயிலாகக் கூறும் இத் தீக்கனவு தேவையற்ற ஒன்றாக இருப்பதால் கம்பர் அதனைத் தம் காப்பியத்தில் கூறாமல் விடுத்துள்ளார் என்பது புலனாகிறது.

2. இராமனைக் காட்டிலிருந்து அழைத்துவந்து முடிசூட்டுவதற்குப் பரதன் சித்திரகூடத்திற்குச் சென்றான். அவனுடன் வசிட்டர், ஜாபாலி முதலிய முனிவர்களும் சென்றனர். பரதன் இராமனை அயோத்திக்குத் திரும்பி வந்து முடி புனையுமாறு வேண்டினான். இராமன் அவ்வேண்டுகோளை ஏற்க மறுத்துத் தன் கொள்கையில் உறுதியாக நின்றான். அந்நிலையில் ஜாபாலி முனிவர் சார்வாக மதக்கொள்கைகளை எடுத்துக்காட்டி இராமன் நாடு திரும்ப வேண்டும் என்று வற்புறுத்தினார். இராமன் அவருடைய நாத்திக வாதத்தைக் கண்டித்துப் பேசினான் என வான்மீகி படைத்துள்ளார்.[6]

கம்பர் ஜாபாலி முனிவர் கூறும் சார்வாக மதக் கொள்கையை நீக்கிக் காப்பியத்தை அமைத்துள்ளார். கதையின் ஓட்டத்திற்கும், கம்பருடைய நோக்கிற்கும் முரண்பட்டு

நிற்கின்றது ஜாபாலி முனிவரின் கொள்கை. எனவே இவற்றைத் தாம் பாடாமல் ஒதுக்கி விடுகின்றார் கம்பர் என அ.பாண்டு ரங்கன் கூறுகின்றார்.[7]

இரா.வ.கமலக்கண்ணன் நாத்திகவாதம் கம்பர் காலத்திற்குப் பயன்படாது என்பதால் ஜாபாலி முனிவரின் கூற்றைப் பாடாது நீக்கிவிட்டார் என்கிறார்.[8]

கம்பர் காப்பியம் படைத்த காலம் தமிழகத்தில் சமய எழுச்சி மிக்க காலமாக இருந்துள்ளது. நாயன்மார்களும், ஆழ்வார்களும் தம் பக்திப் பாடல்களால் சமயத்தைப் போட்டியிட்டு வளர்த்த காலம் அது. சேக்கிழார் பெரியபுராணத்தை, சைவ சமயத்திற்குக் கொடையாக நல்கிய காலம் அது. அக்காலச் சூழலில் தம் காப்பியத்தைப் படைத்த கம்பர் சமயம் சார்ந்த காப்பியமாகவே தம் நூலைப் படைத்துள்ளார். வான்மீகி இராமனை மனிதப்பண்பில் உயர்ந்தனவாக படைக்க, கம்பர் அவனைத் தெய்வ நிலைக்கு உயர்த்திக்காட்டுகின்றார், வசிட்டர்,

**எங்கள் செய் தவத்தினில், இராமன் என வந்தோன்,**
**சங்கினொடு சக்கரமுடைத் தனி முதற் பேர்**
**அம் கண் அரசு . . . . . . . . . . . . . . . . .**[9]

என இராமனைப் பாராட்டுகின்றார். இந்திரசித்தைக் கொல்ல இறுதியாக அம்பு எய்யும் இலக்குவன்,

**மறைகளே தேறத் தக்க, வேதியர் வணங்கற்பால,**
**இறையவன் இராமன் என்னும் நல் அற மூர்த்தி**[10]

எனப்போற்றுகின்றான். வாலி வதைப்படலத்தில்,

**மூலம்நீ முதல்வன்நீ முற்றும்நீ மற்றும்நீ**
**பாவம்நீ தருமம்நீ பகையும்நீ உறவும்நீ**[11]

என வாலி இராமனைத் துதிக்கின்றான். கும்பகர்ணன் வீடணனிடத்தில் பேசும்போது,

**யார்க்கும் இறையவன் இராமன்**[12]

என்று குறிப்பிடுகின்றான். இங்ஙனம் சமயச் சார்புடையவராக விளங்கும் கம்பர், வான்மீகி, ஜாபாலி மூலமாகக் கூறும் நாத்திக

வாதத்தை ஏற்றுக்கொள்ளாது தம் நூலில் நீக்கியுள்ளார். மேலும் ஜாபாலி முனிவரின் பாத்திரத்தையே படைக்காது நீக்கி உள்ளமையாலும் இது தெளிவாகிறது.

**நிகழ்ச்சி நீக்கம்**

1. இராமன், தயரதனைக் காணச் சென்றபொழுதும்,[13] கைகேயி வரத்தினால் காடாளப்போகும் செய்தியைக் கோசலை யிடம் கூறி விடைபெறச் சென்ற பொழுதும், இராமனுடன் இலக்குவனும் சென்றதாக வான்மீகி கூறியுள்ளார்.[14]

கம்பர் இவ்விரு இடங்களிலும் இராமன் தனியாகச் சென்றான் என காட்டுகின்றார். இராமனை என்றும் பிரியாத இலக்குவனை இங்குப் பிரித்தது, அவன் சீற்றத்திற்கும் மாற்றத் திற்கும் இடந்தர வேண்டும் என்ற கருத்தாகும். இலக்குவன் இராமனுடன் இருந்திருந்தால் அவன் தன் எண்ணங்களையும் முழுச் சீற்றத்தையும் வெளிப்படுத்த இயலாமல் போகும் என அ.ப. பதிப்புக் கூறுகின்றது.[15]

தயரதனைக் காணச் சென்ற இராமனிடம், கைகேயி தயரதன் தனக்கு அளித்த இரண்டு வரங்களைக் கூறினாள். ஒன்று மரவுரி அணிந்து பதினான்கு ஆண்டுகள் நீ இன்றே காட்டிற்குச் செல்லவேண்டும். இரண்டாவது வரம் அதன்மூலம் பரதன் நாடாள வேண்டும் என்பதே. கைகேயின் கட்டளையை மகிழ்ந்து ஏற்றான் இராமன்.

இராமன், தயரதன் கோசலையிடம் சென்று நடந்தவற்றைக் கூறி காடு செல்ல விடைகேட்க, அவள் பெரிதும் துயருற்று, காட்டிற்குச் செல்ல வேண்டாம் என்று வேண்டினாள். அதனைக் கேட்டிருந்த இலக்குவன் மிகவும் கோபமுற்று தயரதனின் கட்டளையை ஏற்றுக்கொள்ள வேண்டாம் என வெகுண்டு உரைத்ததாக வான்மீகி அமைத்துள்ளார்.

வான்மீகி கூற்றுப்படி இராமன் தயரதனைக் காணச்சென்ற போது இலக்குவனும் உடன் சென்றான் என்றால் கைகேயின் வரத்தைக் கேட்ட அளவிலேயே வெகுண்டு இராமனிடம் தயரதனின் கட்டளையை ஏற்றுக்கொள்ள வேண்டாம் எனக்

கூறியிருப்பான். அங்ஙனம் கூறாது இராமன் கோசலையிடம் விடைபெறச் சென்ற போது மட்டும் அவனின் துயர் கண்டு இலக்குவன் வெகுண்டுரைத்தான் என வான்மீகி கூறுவது பொருத்தமற்றதாக அமைகிறது.

கம்பர் காப்பியம் முழுவதிலும் இராமனையும் இலக்குவனையும் இணைபிரியாதவர்களாகப் படைத்துக் காட்டியுள்ளார். இலக்குவனைப் பற்றி பேசுமிடங்களிலெல்லாம் இளவல் ஆரியற்கு இளையவீரன் காகுத்தற்கு இளைய காளை, என்பன போன்ற தொடர்களை இலக்குவனைக் குறிக்கக் கம்பர் வழங்கியிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.[16]

விசுவாமித்திரர் தயரதனிடம் கரிய செம்மல் ஒருவனைத் தந்திடுதி என்று கேட்கின்றார். ஆனால் இராமன் இலக்குவன் இருவரையும் தயரதன் அவரோடு அனுப்பி வைக்கின்றான்.[17]

இங்ஙனம் இராமனை விட்டுப்பிரியாத இலக்குவனை, தசரதனைக் காணச் சென்ற பொழுதும், கோசலையிடம் விடைபெறச்சென்ற போதும் கம்பர் பிரித்து வைக்கின்றார். இதனால் இராமன் காடேகும் செய்தியை இலக்குவன் கேள்வியுறுகின்றான். கேட்ட மாத்திரத்திலேயே சீற்றம் கொண்டான் என்பதைக் கம்பர்,

**கேட்டான் இளையோன் கிளர் ஞாலம் வரத்தினாலே**
**மீட்டாள் அளித்தாள் வனம் தம்முனை, வெம்மைமுற்றி**
**தீட்டாத வேல்கண் சிறு தாய் என, யாவராலும்**
**மூட்டாத காலக் கடைத் தீ என மூண்டு எழுந்தான்**[18]

எனப் படைத்துக் காட்டுகின்றார். பின் இலக்குவன் கைகேயியின் செயலை இகழ்ந்து, போர்க்கோலம் பூண்டு நாணொலி எழுப்ப அது கேட்ட இராமன் அவனிருக்குமிடம் வந்து இலக்குவன் சீற்றத்தைத் தணித்தான்.[19]

இராமனைக் காடேகுமாறு கூறிய கைகேயியை, கண்டித்து வசிட்டர் சிலவே பேச இலக்குவனின் சீற்றம் வாயிலாகத்தான் கம்பர் முழுவதும் பேச வைக்கிறார்.[20]

இலக்குவன் தனக்கென வாழாமல், தான் மதித்துப் போற்றும் இராமன், சீதையோடு வாழ்வை அமைத்துக் கொண்

டவன். அதனால்தான் அவன் சிற்றத்திற்கு ஏற்றம் தந்துள்ளார் கம்பர் என்பது புலனாகிறது.

இக்காரணம் பற்றியே இராமன் காடேகும் செய்தியைக் கைகேயி வாயிலாகவே இலக்குவன் அறிந்தான் எனக் கம்பர் காட்டவில்லை. அங்ஙனம் கூறியிருப்பின் இலக்குவனின் சீற்றத் திற்கு இராமனே தடையாக இருந்திருப்பான். எனவேதான் இராமன் தயரதனைக் காணச்சென்ற போதும், கோசலையைக் காணச்சென்ற போதும் இலக்குவனை நீக்கிக் காப்பியத்தைப் படைத்துள்ளார் கம்பர்.

2. இராமன் காட்டிற்குச் செல்லத் தந்தையிடம் விடை பெறும் போது தயரதன் மிகவும் வருத்தமுற்று மூர்ச்சையடைந் தான். அதனைக் கண்டு அனைவரும் துயருற்றனர். தயரதனின் துயர் கண்டும் மனம் மாறாத கைகேயியை நோக்கி சுமந்திரர், சித்தார்த்தர், வசிட்டர் முதலானவர்கள் கோபமுற்றுப் பலவாறு கூறினார்கள். அப்போது சுமந்திரர், உன் தாயின் குணமே நீயும் பெற்றுள்ளாய். அவள் விலங்குகளின் ஒலியை கொண்டு பொருள் அறிந்து கொள்ளும் சக்தி பெற்ற தன் கணவன் ஒரு எறும்பு சத்த மிடுவதைப் பார்த்து சிரித்த காரணத்தைக் கேட்டாள். அதனைக் கூறினால் இறந்துபடுவேன் என்று கூறியும் பிடிவாதம் செய்தாள் எனக் கைகேயியின் தாயைப் பற்றிய வரலாற்றை எடுத் துரைத்தார்.[21]

சுமந்திரர் கூறியதைக் கேட்ட கைகேயி, அவருக்கு தயரத னின் முன்னோர்களில் ஒருவனாகிய அசமஞ்சனை நாட்டிலிருந்து காட்டிற்கு அனுப்பிய செய்தியைக் கூறிப் பழித்துரைத்தாள். அதனைக் கேட்டிருந்த சித்தார்த்தர் அசமஞ்சனின் உண்மை வரலாற்றை எடுத்துரைத்தார் என வான்மீகி கதை நிகழ்ச்சிகளை விரிவாக அமைந்துள்ளார்.[22]

மேலும் கேகய நாட்டிலிருந்து அயோத்தி மீண்ட பரதன் தந்தை இறந்தமையையும், இராமன் முதலானோர் காடு சென்றமையையும் அறிந்து அதற்குக் காரணமாகிய கைகேயியைப் பழித்துக் கூறுகின்றான். அங்ஙனம் கூறும்போது தன் மகன்கள்

காளைகளாகத் துன்பப்படுவதைக் கண்டு கண்ணீர் வடித்த காமதேனுவின் கதையைக் கைகேயிக்குப் பரதன் எடுத்துரைத்தாக வான்மீகிப் படைத்துள்ளார்.[23]

காப்பியக் கதையின் இடையே, கதையுள் கதையாகி அமைவன கிளைக் கதைகள். காப்பியத்தில் வரும் கிளைக் கதைகள் யாவும் மூலக்கதையோடு இணைந்து காப்பிய வளர்ச்சிக்கு உறுதுணையாக அமைதல் வேண்டும். மேற்கூறப்பட்ட கைகேயின் தாயைப்பற்றிய கதையும், அசமஞ்சனைப் பற்றிய வரலாறும், பரதன் கூறும் காமதேனுவின் கதையும் காப்பிய வளர்ச்சிக்குப் பயன்தராதன என்பதால் கம்பர் இக்கதைகளைத் தம் காப்பியத்தில் கூறாது நீக்கிவிடுகின்றார்.

மேலும் தயரதன் முன்னிலையில் சுமந்திரர் முதலானவர்கள் கைகேயியைப் பற்றிப் பழித்துக் கூறுவதாக அமைப்பது சிறப்பல்ல என்பதாலும் கம்பர் இதனை நீக்கம் செய்கின்றார். வசிட்டர்,

**கொழுநன் துஞ்சும் எனவும், கொள்ளாது உலகம் எனவும்**
**பழிநின்று உயரும் எனவும், பாவம் உளதுஅம் எனவும்**
**ஒழிகின்றிலை அன்றியும் என்று உணர்கின்றிலை**
**யான் இனிமேல்,**
**மொழிகின்றன என் என்னா முனியும் முறை அன்று என்பான்**[24]

எனக் கைகேயின் செயல் முறையன்று எனக் கூறுவதாகவே அமைத்துள்ளார் கம்பர்.

3. பரதன், தயரதன் இறந்தமையையும், இராமன் முதலானோர் காட்டிற்குச் சென்றமையையும் அறிந்த கைகேயியை மிகவும் பழித்துவிட்டுத் துயரத்தால் தரையில் உணர்ச்சியின்றிக் கிடந்தான். பின் உணர்வு வரப்பெற்றவனாய் எழுந்தபோது, தன்னைக் காணச் சுமந்திரன் முதலானோர் வந்திருப்பதைக் கண்டு, அவர்கள் தன் கருத்தை உணரும் வண்ணம் மீண்டும் கைகேயியைப் பழித்துக் கூறித் தான் அரசுபெறத் தாயுடன் கலந்து சூழ்ச்சி செய்யவில்லை என்பதையும், இராமன் காடு புகுந்தது தனக்குத் தெரியாது என்பதையும் புலப்படுத்திப் புலம்பினான் என வான்மீகி கூறியுள்ளார்.[25]

சுமந்திரர் முதலியோர், பரதனைக் காண வந்தமையையும் அவர்கள் முன் பரதன் உண்மை இயல்பை விளக்கினமையையும் கம்பர் கூறவில்லை. இந்நிகழ்ச்சிகள் கதைத்தொடர்புக்கு இன்றியமையாதன அல்ல என்ற எண்ணத்தாலும், விரிவஞ்சியும் விடுத்தார் போலும் என்கிறது அ.ப.பதிப்பு.[26]

கம்பர், பரதனைப் பண்பட்ட பாத்திரமாகப் படைத்துள்ளார். தந்தை இறக்கவும், தமையன் காடேகவும், தன் தாய் காரணமாயிருந்தாள் என்பதை அறிந்து, தன் தாயைக் கடிந்துரைத்தான். பின் கோசலையிடம் சென்று தான் மாசற்றவன் என்பதைக் காட்டி, அவள் நன்மதிப்பைப் பெறுகின்றான். கோசலை,

**முன்னை நும் குல முதலுளோர்கள் தாம்,**

**நின்னை யாவரே நிகர்க்கும் நீர்மையார்[27]**

என்று பரதனை முற்பட்டதாகிய நுங்குலத்து முன்னே இருந்த மன்னர்களில் நின்னை நிகர்க்கும் தன்மையுடையார் யார் என்று புகழ்ந்து வாழ்த்துகின்றாள்.

பதினான்கு ஆண்டுகள் கழித்தும், இராமன் வரவில்லை என்பதால் முன்பு காட்டில் கூறியபடியே தீப்பாய்ந்து இறக்கத் துணிந்தான் பரதன். அப்பொழுது கோசலை அவனுக்கு,

**எண்ணில் கோடி இராமர்கள் எண்ணினும்**

**அண்ணல் நின் அருளுக்கருகு ஆவரோ[28]**

என்று மகுடம் சூட்டுகின்றாள். இராமனை அழைத்து வந்து முடி சூட்ட எண்ணித் தவக்கோலம் புனைந்து காடுசென்று பரதனைச் சந்தித்த குகனும்,

**ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ[29]**

என்று பரதனது மாசற்ற பண்பிற்குச் சான்று பகர்கிறான். இத்தகையவனாகிய பரதன், சுமந்திரன் முதலியோர் காண வந்தபோது மறுமுறையும் தாயைப்பழித்துக் கூறுவது அவனது பண்பிற்குப் பொருத்தமற்றது என்பதால் கம்பர் அதனை நீக்கி விடுகின்றார்.

4. அரசை ஏற்றுக்கொள்ளுமாறு ஜாபாலி முனிவர் கூறிய நாத்திகக் கொள்கையை இராமன் கண்டிக்கின்றான். அப்போது

வசிட்டர் ஜாபாலி முனிவருக்காகப் பரிந்துபேசிப் பின் உலக உற்பத்தியை எடுத்துக்கூறி, மனுக்குல மரபைக்காட்டி, மூத்தவனே அரசாள்வது முறை எனக் கூறுவதாக வான்மீகி அமைத்துள்ளார்.[30]

வசிட்டர் கூறும் குலமரபுகள் கதையோட்டத்திற்குத் தடையாக உள்ளதாலும், விரிவஞ்சியும் கம்பர் இதனைக் கூறாமல் விடுத்துள்ளார்.

5.சித்திரக்கூடத்திலிருந்து இராமன் முதலானோர் அத்திரி முனிவரின் ஆசிரமத்திற்குச் சென்றனர். அங்கு அத்திரிமுனிவரின் மனைவி அனுசூயை, சீதைக்குக் கற்பின் பெருமையை எடுத்துக் கூறுவதாகவும் பின் சீதை அனுசூயையிடம் தன் வரலாற்றைக் கூறுவதாகவும் வான்மீகி அமைத்துள்ளார்.[31]

சீதையைக் கற்பின் கனலியாகக் கம்பர் படைத்துக் காட்டி யுள்ளார். அனுமன், சீதையை அசோகவனத்தில் கண்டு வந்து இராமனிடம் கூறும் போது,

**விற்பெருந் தடந்தோள்வீர வீங்குநீர் இலங்கை வெற்பில்,**
**நற்பெருந் தவத்தள்ஆய நங்கையைக் கண்டேன் அல்லேன்,**
**இற்பிறப்பு என்பது ஒன்றும், இரும்பொறை என்பது ஒன்றும்,**
**கற்பெனும் பெயரது ஒன்றும்,களி நடம் புரியக் கண்டேன்**[32]

என்று அவளது கற்பு நிலையை வியந்து கூறுகின்றான். கும்ப கருணனும், சீதையின் கற்பின் ஆற்றலை,

**திட்டியின்விடம் அன்ன கற்பின் செல்வியை**
**விட்டிலையோ இது விதியின் வண்ணமே**[33]

எனப் போற்றுகின்றான். அத்தகையவளுக்கு அனுசூயை கற்பின் பெருமையை எடுத்துக் கூறுவது பொருத்தமற்றது என்பதால் கம்பர் இதனைக் கூறாமல் விடுத்துள்ளார்.

மற்றும் அனுசூயைக்குச் சீதை தன் வரலாற்றைக் கூறுவ தாக வான்மீகி அமைத்துள்ளார். கம்பர், சீதையின் வரலாற்றைப் பால காண்டத்தில கூறியுள்ளார்.[34] எனவே அனுசூயையிடம், சீதை தன் வரலாற்றைக் கூறுவதாக அமைப்பது கூறியது கூறலாக அமையும் என்பதால் நீக்கிவிடுகின்றார்.

**காப்பியக் கதை மாந்தரின் பண்பு நலன்களுக்கு ஊறு செய்யும் வகையில் அமைகின்ற கூற்றுகள், நிகழ்ச்சிகள் நீக்கம்**

அயோத்தியா காண்டத்தில் காப்பிய மாந்தரின் பண்புகளுக்கு ஏற்றம் தராத முறையில் அமைந்த கூற்றுகளையும், நிகழ்ச்சிகளையும் நீக்கி உயர்ந்த பண்பட்ட பாத்திரங்களாக அவர்களை உயர்த்திக் காட்டுகின்றார் கம்பர்.

**கூற்று நீக்கம்**

1. இராமனைத் தயரதன் ஆலோசனை மண்டபத்திலும், தன் இருப்பிடத்திலுமாக இரண்டுமுறை வரவழைத்து முடிபுனை விழாவைப் பற்றியும் அதை விரைந்து முடிக்கக் கருதியதற்குரிய காரணத்தையும் கூறியதாக வான்மீகி கூறுகின்றார். அங்ஙனம் தயரதன் இராமனைத் தன் இருப்பிடத்திற்கு அழைத்துப் பேசிய போது, பரதன் கேகய நாட்டிலிருந்து வருவதற்குமுன் முடிசூட்டு விழாவை முடிப்பது நல்லது. அவன் மனதைப் பிறர் மாற்றுமுன் இதனைச் செய்து முடிக்க வேண்டும் என்று கூறியதாக வான்மீகி அமைத்துள்ளார்.[35]

காட்டிற்குச் சென்ற இராமனை அழைத்துவரச் சென்ற பரதன் நாட்டை ஏற்றுக் கொண்டுவருமாறு வேண்டினான். அப்போழுது இராமன் யாவரும் அறியாத மறைபொருள் ஒன்றினைக் கூறினான். கைகேயியை மணம்புரிந்தபோது தயரதன், கேகய மன்னனிடம், அவன் மகள் வயிற்றுப் பிள்ளைக்கே கோசல நாட்டு உரிமையை தருவதாக வாக்களித்திருந்ததைக் கூறியதாக வான்மீகி படைத்துள்ளார்.[36]

மேற்கூறிய காரணம் பற்றியே தயரதன், இராமனைத் தன் இருப்பிடத்திற்கு இரண்டாவது முறையாக அழைத்து, பரதன் கேகய நாட்டிலிருந்து வருவதற்குமுன் முடிசூட்டு விழாவை விரைந்து முடிப்பதற்குரிய காரணத்தைப் பற்றிப் பேசியதாக வான்மீகி அமைத்துள்ளார்.

**தயரதன் கேகயனிடம் அவன் மகள் வயிற்றுப் பிள்ளைக்கு அரசு கொடுப்பதாக வாக்களித்திருந்த செய்தியைக் கம்பர் தம் காப்பியத்தில் எங்கும் வெளிப்படையாகப் பேசவில்லை.**

எனவே தயரதன் இராமனை இரண்டாவது முறையாக அழைத்துப் பரதனை ஐயுற்றுக் கூறுவது கம்பருக்கு தேவையற்ற தாக இருப்பதால் அதனை நீக்கியுள்ளார். மேலும் மகனாகிய பரதனை ஐயுறுவது தயரதனின் பண்பு நலன்களுக்கும், பெரு மைக்கும் ஒவ்வாத கூற்றாக இருப்பதாலும், இராமனும், தயரதன் கூற்றுக்கு உடன்பட்டே செயல்பட்டதாக அமைவது, அவன் பண்பு நலன்களுக்கு மாசேற்றுவதாலும் கூறாது விடுகின்றார் கம்பர்.

2. இராமன், சீதையுடன் தன் மாளிகையில் இருந்த பொழுது சுமந்திரன், தயரதன் அழைப்பதாகக் கூறினான். முடி புனைதல் பொருட்டே அழைப்பதாக உணர்ந்த இராமன் மகிழ்ந்து சீதையிடம் பலவாறு புகழ்மொழிகள் பேசியதாக வான்மீகி கூறுகின்றார்.[37]

இராமன் சீதையிடம் மகிழ்ந்து கூறிய புகழுரைகளைக் கம்பர் கூறாது விடுகின்றார். செல்வக்காலத்து மகிழ்தல் மக்க ளுக்குப் பொருந்துமேயின்றித் தெய்வத் தன்மையுடைய இராம னுக்குப் பொருந்தாது என்ற கருத்தால் சீதையுடன் இராமன் பேசிய புகழுரைகளைக் கம்பர் கூறாது விடுத்தார் என்கிறது அ.ப.பதிப்பு.[38]

தயரதன் வேண்டுகோளின்படி வசிட்டர் இராமன் மாளி கைக்குச் சென்று பட்டம் சூட்டுவதற்கு முன் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்வித்தார். பின் இராமன் சீதையுடன் திருமால் கோயிலுக்குச் சென்று நோன்பு மேற்கொண்டான். தயரதன் கட்டளைப்படி இராமனை அழைக்கச் சென்ற சுமந்திரன், அவனது மாளிகையில் சீதையுடன் மகிழ்ந்திருந்த போது மன்னன் அழைத்தமையைத் தெரிவித்தான் என வான்மீகி அமைத் துள்ளார்.[39]

தயரதன் வேண்டுகோளின்படி வசிட்டர், இராமனைத் திருமால் கோயிலுக்கு அழைத்துச் சென்று இறைவன் முன்னிலை யில் முடிசூட்டுவதற்கு முன் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்வித்தார். இராமனை அழைக்கச் சென்ற சுமந்திரன் திருமால் கோயிலிலிருந்து அழைத்து வந்ததாகக் கம்பர் படைத்துள்ளார்.[40]

கம்பர் செய்த இம்மாற்றத்தால் சுமந்திரன், தயரதன் அழைப்பதாகக் கூறியபோது முடிபுனைதல் பொருட்டே அழைப்பதாக உணர்ந்த இராமன் மகிழ்ந்து சீதையிடம் கூறியதாக வான்மீகி அமைத்த புகழ்மொழி கம்பருக்குத் தேவை அற்றதாகி விடுகிறது. அதனால் இதனை நீக்கியுள்ளார்.

3. இராமன் காட்டிற்குப் புறப்பட்டபோது சீதையும் உடன் வருவேன் என்கிறாள். இராமன் காட்டின் வெம்மையை எடுத்துக் கூறி உடன்அழைத்துச் செல்ல மறுக்கின்றான். அப்போது அவள், இராமனைப் பலவாறு பழித்துக் கூறுவதாக வான்மீகி படைத்துள்ளார்.[41]

கம்பனில், இராமன் காட்டிற்குச் செல்ல நேர்ந்து மரவுரி அணிந்து சீதை இருக்குமிடம் வர, அவனைக் கண்டு திகைப்புற்று வினவினாள். இராமன் நடந்ததுரைத்துத் தான் காடு சென்று வரும்வரை வருந்தாதிரு என்றான். அதுகேட்ட சீதை மிகவும் வருத்தமுற்று அவனிடம்,

என்னை என்னை, இருத்தி ன்றாய் என்றாள்[42]

அதுகேட்ட இராமன். காட்டின் வெம்மையை எடுத்துரைத்தான்.

. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . நின்

பிரிவினும் சுடுமோ, பெருங்காடு என்றாள்[43]

என்று அவளது உறுதிப்பாட்டை உணர்த்த இராமன் உடன்வர இசைந்தான்.

வான்மீகியில், இராமனின் பண்பு சீதையின் பேச்சால் மாசுபடுவதோடு, கணவனுக்கு அறிவுரை கூறுமாறு அமைத்திருப்பது தெய்வக் கற்பிற்குப் பொருந்தாது என்பதால், அதனை நீக்கிச் சீதையைப் பண்பில் சிறந்தவளாகப் படைத்துக் காட்டுகின்றார் கம்பர்.

4. இராமன் முதலானோர் கங்கையைக் கடந்து அன்றிரவு மரத்தின் கீழ் தங்கினார்கள். அப்போது இராமன், இலக்குவனிடம் தாங்கள் காட்டிற்கு வருவதற்கு காரணமாகிய கைகேயியைப் பழித்துக் கூறினான். இலக்குவன் அவனைச் சமாதானம் செய்தான் என வான்மீகி படைத்துள்ளார்.[44]

இராமன் காட்டிற்குச் செல்ல விடை கேட்க, தயரதன் கைகேயிக்கு வரத்தைக் கொடுத்ததால் பிழை செய்தேன். இப்பொழுது என்னை நிராகரித்து விட்டு நீயே அயோத்திக்கு மன்னன் ஆவாய் என்றான். தயரதன் கூறியதைக் கேட்ட இராமன் முறையன்று என மறுத்துரைத் [illegible] யை வணங்கி, பதினான்கு ஆண்டுகள் காட்டிற்குச் சென்று மீள்வதாகக் கூறிச் சென்றான்.[45]

முன்னர் இவ்வாறு கூறிய இராமன் பின்னர் இலக்குவனிடம் தாயைப் பழித்துப் பேசுவதாக வான்மீகி படைத்துள்ளார். இது போன்றே இராமன் தனக்குக் காட்டில் துன்பம் வந்த இடத்தி லெல்லாம் கைகேயியையும், தயரதனையும் கடிந்துரைப்பதாக வான்மீகி படைத்துள்ளார். அவை இராமன் பண்பு நலன்களுக்கு ஏற்றதன்று.

கைகேயின் வேண்டுகோளின்படி சுமந்திரன், இராமனை அவளுடைய மாளிகைக்கு அழைத்து வந்தான். இராமன் கைகேயியைக் கண்டு வணங்கிநிற்க, அவள், உன் தந்தை உனக்குச் சொல்லக் கூடியது ஒன்றுளது. பரதன் நாடாள வேண்டும். நீ, தவவேடம் கொண்டு பதினான்கு ஆண்டுகள் காட்டிற்குச் சென்று மீளுதல் வேண்டும். இது மன்னன் ஆணை என்றாள். அதுகேட்ட இராமனின் முகமிருந்த பெற்றியை,

**இப்பொழுது, எம்மனோரால் இயம்புதற்கு எளிதே யாரும்**
**செப்ப அருங் குணத்து இராமன் திருமுகச் செவ்வி நோக்கின்**
**ஒப்பதே முன்பு பின் அவ் வாசகம் உணரக் கேட்ட**
**அப்பொழுதே, அலர்ந்த செந்தாமரையினை வென்றது அம்மா**[46]

என்று கம்பர் வியக்கின்றார். கம்பர் வியந்தது போன்றே இராமன் நாடிழந்து காடேகு என்றபோது அவன் திருமுகம் இருந்த பெற்றியை, சீதை கண்டு வியந்தாள். இதனை இலங்கையில் அசோக வனத்தில் இருந்த சீதை இராமனை நினைத்து வருந்திய போது, நினைந்து வருத்தமுற்றதாகக் கம்பர் அமைந்துள்ளார்.[47]

இங்ஙனம் இராமன் மனமாற்றம் இன்றி, தயரதனின் வேண்டுகோளை மகிழ்வுடன் நிறைவேற்றுபவனாகவே கம்பராமா யணத்தில் படைத்துக் காட்டப்பட்டுள்ளான். எனவே இராமன்

தாய் தந்தையைப் பழித்துக் கூறியதாக அமைந்த வான்மீகியின் கூற்றைத் தம் காப்பியத்தில் நீக்கிவிடுகின்றார்.

5. இராமனைக் காட்டில் காணவந்த பரதன் கங்கையில் தன் படைகளுடன் தங்கியிருந்தான். இராமனுக்கு தீங்கு செய்யவே பரதன் படைகளுடன் வந்துள்ளான் எனப் பிறழ உணர்ந்த குகன் பரதனை ஐயுற்று வினவியதாக வான்மீகி கூறியுள்ளார்.[48]

வான்மீகியைப் போன்றே கம்பனும் தம் காப்பியத்தில் குகன், படைகளோடு கங்கையை வந்தடைந்த பரதனைப் பகையெனப் பிறழ உணர்ந்தான். பின் பரதனின் தோற்றத்தை நேரில் கண்டு தெளிந்தான் என்பதை,

**வற் கலையின் உடையானை, மாசு அடைந்த மெய்யானை,**
**நற் கலைஇல் மதி என்ன நகை இழந்த முகத்தானை,**
**கல் கனியக் கனிகின்ற துயரானை, கண்ணுற்றான்**
**வில் கையினின்று இடை வீழ, விம்முற்று நின்று ஒழிந்தான்[49]**

என்ற பாடலின் வாயிலாக உணர்த்துகின்றார் கம்பர். பரதனின் தோற்றம் கண்டு தெளிந்தவனாகக் கம்பரின் குகன் விளங்க, பரதன் ஐயுற்று வினவியதாக வான்மீகி அமைத்துள்ளமை தேவையற்ற கூற்றாக இருப்பதினால் அதனைக்கூறாது நீக்கிவிடுகின்றார் கம்பர்.

6. பரதன் பரத்துவாச முனிவரின் ஆசிரமத்திற்குச் சென்று அவரை வணங்கியபோது அவன் படையோடு வந்ததமை கண்ட முனிவர், இராமனுக்குக் கொடுமை விளைவிக்க இங்கு வரவில்லையென்று நினைக்கின்றேன் என்று கூறுவதாக வான்மீகி அமைத்துள்ளார்.[50]

**செந்தழல் புரி செல்வன், திசைமுகமுனி செவ்வே**
**தந்தன உயிர் எல்லாம் தன்உயிர் என நல்கும்**
**அந்தணன், உலகு ஏழும் அமை எனின், அமரேசன்**
**உந்தியின் உதவாமே, உதவிடு தொழில் வல்லான்[51]**

என உலக உயிர்களையெல்லாம் தன் உயிர் போல் நோக்கியருளும் அழகிய தண்ணளியுடையவன் எனப் புகழ்ந்தேத்துகின்றார். அத்தகையவனைக் கண்டு பரதன்,

வந்த மாதவத்தோனை, அம் மைந்தனும்,
தந்தை ஆம் எனத் தாழ்ந்து வணங்கினான்
இந்த மோலி அன்னானும், இரங்கினான்,
அந்தம்இல் நலத்து ஆசிகள் கூறினான்[52]

எனத் தந்தையைப்போல நினைத்து வணங்கினான். பரத்துவாசரும் அழியா நலன்களைப் பெறுமாறு, வாழ்த்து மொழிகளைக் கூறினார் என்பதாகக் கம்பர் படைத்துக் காட்டுகின்றார்.

எனவே பரத்துவாச முனிவர் பரதனைக் கண்டு ஐயுற்று வின வியதாக வான்மீகி கூறியுள்ளமை பொருந்தாத கூற்றாக இருப்ப தினால் கம்பர் அக்கூற்றை நீக்கிக் காப்பியத்தை அமைந்துள்ளார்.

7. காட்டிற்குச் சென்ற இராமனை அழைத்துவரச் சென்ற பரதன் நாட்டை ஏற்றுக் கொள்ளுமாறு இராமனை வேண்டினான். அப்பொழுது இராமன் யாவரும் அறியாத மறைபொருள் ஒன்றினைக் கூறினான். கைகேயியை மணம்புரிந்தபோது தயரதன் கேகய மன்னனிடம் அவன் மகள் வயிற்றுப் பிள்ளைக்கே கோசல நாட்டு உரிமையைத் தருவதாக வாக்களித்திருந்ததைப் பரதனுக்கு இராமன் கூறியதாக வான்மீகி படைத்துள்ளார்.[53]

சம்பராசுரப் போரின் போது உதவிபுரிந்த கைகேயிக்குத் தயரதன் தந்த இரண்டு வரங்களே பரதனுக்கு நாடாளும் உரிமை யையும், இராமனுக்கு காடேகும் நிலையையும் கொடுத்தன என்பதையே கம்பர் தம் காப்பியத்தில் சுட்டியுள்ளார்.[54]

தயரதன், கேகயனிடம், அவன் மகள் வயிற்றுப் பிள்ளைக்கு அரசு கொடுப்பதாக வாக்களித்திருந்த செய்தியைக் கம்பர் தம் காப்பியத்தில் எங்கும் கூறவில்லை.

வான்மீகியைப் போன்று இராமன் கூறுவதாகக் கம்பர் அமைத்திருந்தால் அரசுரிமை பரதனுக்கு உரியது என்பதையும், அதனைப் பெறுவதில் கேடு உண்டு என்பதையும் முன்பே அறிந் திருந்தும், தயரதன் செயல் அனைத்திற்கும் இராமன் உடன்பட் டான் என்பது அவனின் கூற்றால் வெளிப்படும். இவை இராமனது பண்பிற்கு ஒவ்வாத கூற்று என்பதால் கம்பர் இதனை நீக்கி விடுகின்றார்.

***நிகழ்ச்சி நீக்கம்***

*1.இராமன் முதலானவர்கள் யமுனையாற்றிடையே தெப்பத்தில் செல்லும்போது சீதை யமுனையை வழிபட்ட செய்தியையும், யமுனையைக் கடந்தபின் சியாமம் என்னும் ஆலமரத்தை வழிபட்டமையையும் வான்மீகி அமைத்துள்ளார்.*[55]

*கம்பர் இந்நிகழ்ச்சிகளைக் கூறாது விடுத்துள்ளார். இங்ஙனம் விடுத்தமைக்கு அ.ப.பதிப்புப் பின்வருமாறு காரணம் கூறுகிறது. இவ்வணக்கம், தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள் ஆன சீதையின் இயல்பொடு பொருந்தாதென்று கம்பர் கூறாது விட்டுருக்கலாம் என்கிறது.*[56]

*தயரதன் வேண்டுகோளின்படி வசிட்டர் முடிசூட்டு விழாவின் முன்னாளில் இராமனுக்குச் செய்ய வேண்டிய சடங்குகளை எல்லாம் அவனது மாளிகைக்குச் சென்று செய்வித்தார். பின் இராமனும் சீதையும் திருமால் கோயிலுக்குச் சென்று வழிபட்டு நோன்பு இருந்தனர் என வான்மீகி படைத்துள்ளார்.*[57]

*திருமால் கோயிலுக்கு இராமனை மட்டிலுமே அழைத்துச் சென்று இறைவனுக்கு முன் சடங்குகளைச் செய்வித்தார் வசிட்டர் என்கிறார் கம்பர்.*[58] *சீதையும் உடன் சென்று வழிபட்டதாகக் கூறவில்லை. சீதை, திருமால் கோயிலுக்குச் சென்று வழிபட்டமையைப் பின்பற்றியே யமுனையையும், ஆலமரத்தையும் வழிப்பட்டதாக வான்மீகி கூற, கம்பர் தம் காப்பியத்தில் இதனை நீக்கிவிடுகின்றார்.*

*சுக்கிரீவனால் திருமகள் அனைய அத்தெய்வக் கற்பினாள்*[59] *எனப் போற்றப்படுகின்றாள் சீதை. இத்தகைய தெய்வக் கற்புடையவளாகிய சீதையைத் தெய்வம் தொழாஅள் கொழுநன் தொழுதெழுவாள் என்ற வள்ளுவரின் வாய்மொழிக்கேற்பப் படைத்துள்ளார் கம்பர் என்பது புலனாகிறது. எனவே சீதை வழிபட்டதாக வான்மீகி கூறும் நிகழ்ச்சிகளைக் கம்பர் நீக்கம் செய்துள்ளார்.*

*2. இராமனும், சீதையும் சிருங்கிபேரத்தை ஒட்டிய கங்கைக்கரையில் உறங்கிக் கொண்டிருந்தனர். இலக்குவன்*

அவர்களுக்குத் துணையாக இரவு முழுவதும் காவல் காத்தான். குகன், இலக்குவனைக் குறித்து ஐயுற்றுத் தானும் காத்திருப்பதாக வான்மீகி கூறுகின்றார்.[60]

காப்பியத்தின் தொடக்கத்திலிருந்தே இலக்குவன் இராமனுடன் படிப்படியாக வளர்ந்து, இராமனுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் உயர்நிலையினை அடைபவனாகவே திகழ்கின்றான்.

இராமன் காட்டிற்குச் செல்ல, விடைபெறும் பொருட்டு சுமித்திரையிடம் சென்றான். அவனருகில் நின்ற தன் மகன் இலக்குவனை நோக்கி சுமித்திரை,

**ஆகாதது அன்றால் உனக்கு அவ் வனம் இவ் அயோத்தி,**
**மா காதல் இராமன் நம் மன்னவன் வையம் ஈந்தும்**
**போகா உயிர்த் தாயர் நம் பூங்குழல் சீதைஎன்றே**
**ஏகாய் இனி, இவ்வயில் நிற்றலும் ஏதம் என்றாள்**[61]

என இராமன் செல்லும் காடு உனக்கு அயோத்தி, இராமனும், சீதையும் உனக்கு தந்தையும், தாயும் ஆவர். இராமனுக்கு அடியவன் போலப் பணி செய்க. அவன் இந்நகர்க்கு வரின் நீயும் வருக. இல்லைஎனில் அவனுக்கு முன் நீ முடிக என்றாள். தாயின் இவ்வாணைக்குப் பிறகு இலக்குவன் இராமனின் அடியவனாகவே தன் எண்ணத்திலும், சொல்லிலும், செயலிலும் மாற்றம் செய்து கொண்டான்.

**இந்நெடுஞ் சிலைவலானுக்கு ஏவல்செய் அடியென் யானே**[62]

என்று தன்னைக் கூறிக் கொள்வதில் பெருமை கொண்டவன். இராமன் சீதைக்காகத் தன் இன்பங்கள் வெறுத்து, ஒதுக்கியிருந்து அவர்களுக்கு இன்பங்களை நல்கியவன் என்பதனைக் கம்பர்.

**கனியிரும் பொழில் காத்து அயல் நின்றவன்**[63]

என்று கூறுவதினால் அறியமுடிகிறது. இத்தகையவனைக் குகன் ஐயம் கொள்வது அவன் பண்புக்கு ஏற்றம் தராது என்பதினால் கம்பர் நீக்கம் செய்கின்றார்.

3. இராமனை அயோத்திக்கு அழைத்து வரச்சென்ற பரதன் பரத்துவாச முனிவரின் ஆசிரமத்தில் தங்கி, விருந்துண்டு,

ஆடலும், பாடலும் கண்டு மகிழ்ந்து, மறுநாள் சிவிகையிலேறி இராமனைத் தேடிச் சென்றதாக வான்மீகி படைத்துள்ளார்.[64]

கம்பர் இந்நிகழ்ச்சியை நீக்கியே காப்பியத்தைப் படைத்துள்ளார். இங்ஙனம் நீக்கியமைக்குக் காரணம் கூறும் இரா.வ. கமலக்கண்ணன் கற்கனியக் கனிக்கின்ற துயரனாகப் பரதனைக் காட்டுவதற்கே கம்பர் இந்நிகழ்ச்சியை நீக்கியுள்ளார் என்கிறார்.[65]

கம்பர் பரதனைப் பண்பட்ட பாத்திரமாகவே படைத்துக் காட்டி உள்ளார். அயோத்திலிருந்து .புறப்பட்ட பரதன், இராமனைப் போன்றே மரவுரி அணிந்தமையை,

**தன்னுடையத் திரு அரைச் சீரை சாத்தினான்[66]**

இராமன் தங்கிய சோலையில் தங்கிய பரதன்,

**அல் அணை நெடுங்கணீர் அருவி ஆடினன்**
**கல் அணை கிழங்கொடு கனியும் உண்டிலன்,**
**வில் அணைத்து உயர்ந்த தோள் வீரன் வைகிய**
**புல் அணை மருங்கில், தான் பொடியின் வைகினான்[67]**

என, உண்ணாதவனாய், இராமன் படுத்து உறங்கிய புல்லணையின் பக்கத்தில் புழுதியில் படுத்தான் என்கிறார் கம்பர். அங்கிருந்து இராமன் காலால் நடந்த சென்றமையை அறிந்த பரதன் தானும் தேரைவிடுத்து நடந்துசென்றான். இதனைக் கம்பர்,

**ஆண்டு நின்று, ஆண்தகை அடியின் ஏகினான்**
**ஈண்டிய நெறி என, தானும் ஏகினான்**
**தூண்டிடு தேர்களும் துரக ராசியும்**
**காண்தகு கரிகளும் தொடர, காவினே[68]**

என்று கூறி, பரதன் இராமனிடம் கொண்டிருந்த பக்தியைச் சிறப்பித்துக் காட்டுகின்றார். மேலும் பரதனின் மாண்பினை உணர்த்தக் கருதிய கம்பர் குகனின் வாயிலாக அதனைக் காட்டுகின்றார். படைகளோடு கங்கையை வந்தடைந்த பரதனைப் பகையெனப் பிறழ உணர்ந்தான் குகன். பின் பரதனின் தோற்றம் கண்டு தெளிந்தமையை,

**வற்கலையின் உடையானை,மாசு அடைந்த மெய்யானை,**
**நற்கலையின் மதியென்ன நகையிழந்த முகத்தானை,**
**கல்கனியக் கனிகின்ற துயரானை, கண்ணுற்றான்**
**வில் கையின்று இடைவீழ விம்முற்று, நின்று ஒழிந்தான்[69]**

எனக் கூறுவதின் வாயிலாக, பரதனின் நிலையை உணர்த்து கின்றார் கம்பர்.

இத்தகைய பண்பாளனாகிய பரதன் பரத்துவாச முனிவரின் ஆசிரமத்தில் தங்கி, விருந்துண்டு, ஆடலும், பாடலும் கண்டு மகிழ்ந்தான் எனக் கூறுவது தாம் படைக்கவிரும்பிய அவனது பண் பிற்கு ஏற்றதன்று எனக் கொண்டமையால் கம்பர் இந்நிகழ்ச்சியைக் கூறாது விடுத்திருத்தல் வேண்டும் என்பது புலனாகிறது.

4. சித்திரகூடத்தில் இராமன் இருந்த இடத்து முனிவர்கள் குலபதி என்னும் முனிவரை முதன்மையாகக்கொண்டு, கரன் என்னும் அரக்கனின் கொடுமையைத் தாங்காதவர்களாய் இராம னிடம் கூறிவிட்டு கண்வரது இடத்துக்குச் சென்ற நிகழ்ச்சியை வான்மீகி அமைத்துள்ளார்.[70]

மேற்கூறிய நிகழ்ச்சியைக் கம்பர் தம் காப்பியத்தில் கூறாது விடுத்துள்ளார். திருமால், இராமனாக இந்நிலவுலகத்தில் அவதரித்ததன் நோக்கமே தீயோரை அழித்து அறத்தை நிலை நிறுத்தும் பொருட்டே என்பதனைத் தம் காப்பியத்தில் பல இடங்களில் உணர்த்தியுள்ளார் கம்பர். இதனை,

**அலை கடல் நடுவண், ஓர் அனந்தன் மீமிசை,**
**மலை என விழி துயில்வளரும் மா முகில்,**
**கொலைதொழில் அரக்கர்தம் கொடுமை தீர்ப்பென் என்று**
**உலைவுறும் அமரருக்கு உரைத்த வாய்மையை[71]**

என்பதாலும்,

**அரக்கர் குலத்தை வேர் அறுத்து, எம் அல்லல் நீக்கி அருளாய் என்று**
**இரக்க, எம்மேல் கருணையினால், ஏயா உருவம் இவை எய்தி,**
**புரக்கும் மன்னர் குடிப் பிறந்து, போந்தாய் அறத்தைப்பொறை தீர்ப்பான்,**
**சுரக்க நின்றே, நெடு மாயம் எமக்கும் காட்டக்கடவாயோ[72]**

என்ற பாடலாலும் அறிய முடிகிறது. முனிவர்கள் கரன் என்னும் அரக்கனது கொடுமைக்கு அஞ்சி சித்திரகூடத்திலிருந்து சென்ற நிகழ்ச்சியானது இராமனது அவதாரச் சிறப்புக்கும், வீரப் பண்பிற்கும் மாசேற்றம் என்பதால் கம்பர் இதனை நீக்கியுள்ளார்.

## தொகுப்புரை

மேற்குறிப்பிட்ட செய்திகளின் மூலம் கீழ்க்காணும் முடிவுகள் கிடைக்கப்பெறுகின்றன.

1. கம்பர் தம் காலச் சூழலுக்கும், காப்பிய நோக்கிற்கும் ஏற்ப முன்னூலாகிய வான்மீகியில் கூறப்பட்ட கதைப் பகுதிகளில் சிலவற்றை நீக்கிக் காப்பியத்தைப் படைத்துள்ளார். அயோத்தியா காண்டத்தில் கம்பர் நீக்கிய பகுதிகள் எவை யென வகைப்படுத்தப்பட்டுள்ளன.
2. கம்பர் அயோத்தியா காண்டத்தில் நீக்கிய கூற்றுக்களும், நிகழ்ச்சிகளும் எவை எவையெனச் சுட்டப்பட்டுள்ளன.
3. காப்பியக் கதையோட்டத்திற்குத் தடையாகவும் முரணாகவும் அமைந்தமையால் கூற்றுக்களையும், நிகழ்ச்சிகளையும் கம்பர் நீக்கம் செய்துள்ளார் என நீக்கம் செய்தமைக்குரிய காரணங் களும் நிறுவப்பெற்றுள்ளன.
4. காப்பிய மாந்தர்களின் பண்புகளுக்கு ஏற்றம் தராத முறையில் அமைந்த கூற்றுக்களையும், நிகழ்ச்சிகளையும் நீக்கி உயர்ந்த பண்பட்ட பாத்திரங்களாக எங்ஙனம் அவர்களை உயர்த்திக் காட்டுகின்றார் என்பதும் கூறப்பட்டுள்ளன.

## குறிப்பு விளக்கம்

1. அ.பாண்டுரங்கன் காப்பிய நோக்கில் கம்பராமாயணம், ப.72.
2. வா.இராமா., அயோ.காண். ச.69.
3. அ.பாண்டுரங்கன்., மு.நூ.,ப.73.
4. க.இராமா., அ.ப.ப., அயோ.காண்., முதற்பகுதி, ப.163.
5. சிலம்., காண்.2, கா.20, வரி.4-12
6. வா.இராமா., அயோ.காண். ச.108, 109.

7. அ.பாண்டுரங்கன்., உலகப் பெருங்கவிஞர் கம்பர், ப.170.
8. இரா.வ.கமலக்கண்ணன்., உலகப் பெருங்கவிஞர் கம்பர், ப.175.
9. க.இராமா., க.க.ப., பால.காண்., கோலங்காண் படலம், பா.32.
10. மேற்படி நூல், யுத்த. காண்., இந்திரசித்து வதைப்படலம், பா.51.
11. மேற்படி நூல், கிட்.காண்., வாலி வதைப்படலம், பா.129.
12. மேற்படி நூல், யுத்த. காண்., கும்பகர்ணன் வதைப்படலம், பா.136.
13. வா.இராமா., அயோ.காண். ச.20.
14. மேற்படி நூல். ச.21.
15. க. இராமா., அ.ப.ப. அயோ.காண். முதற்பகுதி, ப.363.
16. க. இராமா., க.க.ப. பால. காண். திருஅவதாரப்படலம், பா.127, யுத்த. காண். நாக பாசப்படலம், பா.162, 189.
17. க. இராமா., க.க.ப. பால. காண். கையடைப்படலம், பா.11.
18. மேற்படி நூல். அயோ. காண்., நகர் நீங்கு படலம், பா.111.
19. மேற்படி நூல். பாட. 122-137.
20. மேற்படி நூல். பா.43-45, 115-119.
21. வா.இராமா., அயோ.காண். ச.35.
22. மேற்படி நூல்., ச.36.
23. மேற்படி நூல்., ச.74.
24. க. இராமா., க.க.ப. அயோ.காண்., நகர்நீங்கு படலம், பா.43.
25. வா.இராமா., அயோ.காண். ச.75.
26. கா. இராமா., அ.ப.ப., அயோ. காண்., இரண்டாம் பகுதி, ப.164.
27. மேற்படி நூல், க.க.ப. அயோ. காண்., பள்ளி படைப்படலம்., பா.119, வரி.1-2.
28. மேற்படி நூல்., யுத்த காண்., மீட்சிப்படலம், பா.230, வரி.1-2.
29. மேற்படி நூல், அயோ. காண்., கங்கை காண்படலம், பா.35, வரி. 5, 4.
30. வா.இராமா., அயோ.காண். ச.110.

31. மேற்படி நூல்., ச.118.

32. க. இராமா., க.க.ப., சுந். காண்., திருவடிதொழுத படலம், பா.29.

33. மேற்படி நூல்., யுத்த காண். கும்பகருணன் வதைப்படலம், பா.80, வரி.3-4.

34. மேற்படி நூல், பால காண்., கார்முகப் படலம், பா.17.

35. வா.இராமா., அயோ.காண். ச.4.

36. மேற்படி நூல்., ச.107.

37. மேற்படி நூல்., ச.16.

38. க. இராமா., அ.ப.ப., அயோ. காண்., முதற்பகுதி., ப.191.

39. வா.இராமா., அயோ.காண். ச.16.

40. க. இராமா., க.க.ப., அயோ. காண்., மந்தரை சூழ்ச்சிப்படலம், பா.31., கைகேயி சூழ்வினைப்படலம், ப.84.

41. வா.இராமா., அயோ.காண். ச.30.

42. க. இராமா., க.க.ப., அயோ. காண்., நகர் நீங்குப் படலம், பா.220, வரி.3.

43. மேற்படி நூல்., பா.222., வரி.4.

44. வா.இராமா., அயோ.காண். ச.53.

45. மேற்படி நூல். ச.34.

46. க. இராமா., க.க.ப., அயோ. காண்., கைகேயி சூழ்வினைப்படலம், பா.112.

47. மேற்படி நூல்., சுந். காண்., காட்சிப் படலம், பா.20.

48. வா.இராமா., அயோ.காண். ச.85.

49. க. இராமா., க.க.ப., அயோ. காண்., கங்கைகாண்படலம், ப.29.

50. வா.இராமா., அயோ.காண். ச.90.

51. க. இராமா., க.க.ப., அயோ. காண்., வனம்புகுபடலம், பா.22.

52. மேற்படி நூல், திருவடிசூட்டுப்படலம், பா.1.

53. வா.இராமா., அயோ.காண். ச.107.

54. க. இராமா:, க.க.ப., அயோ. காண்., கைகேயி சூழ்வினைப்படலம், பா.12.

55. வா.இராமா., அயோ.காண். ச.55.

56. க. இராமா., அ.ப.ப., அயோ. காண்., இரண்டாம் பகுதி, ப.75.

57. வா.இராமா., அயோ.காண். ச.6.

58. க. இராமா., க.க._., அயோ. காண்., மந்தரை சூழ்ச்சிப்படலம், பா.31.

59. மேற்படி நூல்., கிட்.காண்., கலன்காண்படலம், பா.13.

60. வா.இராமா., அயோ.காண். ச.87.

61. க. இராமா., க.க.ப., அயோ. காண்., நகர்நீங்குபடலம்., பா.146.

62. மேற்படி நூல்., கிட். காண்., அனுமப்படலம், பா.28, வரி.4.

63. மேற்படி நூல்., ஆர. காண்., சூர்ப்பணகைப் படலம், பா.92, வரி.4.

64. வா.இராமா., அயோ.காண். ச.91.

65. இரா.வ. கமலக்கண்ணன், உலகப் பெருஞ்கவிஞர் கம்பர், ப.175.

66. க. இராமா., க.க.ப., அயோ. காண்., ஆறுசெல்படலம், பா.52, வரி.2.

67. மேற்படி நூல். பா.58.

68. மேற்படி நூல். பா.59.

69. மேற்படி நூல். கங்கை காண்படலம், பா.29.

70. வா.இராமா., ச.116.

71. க. இராமா., க.க.ப., பால காண்., திருஅவதாரப் படலம், பா.6.

72. மேற்படி நூல்., யுத்த காண்., பிரம்மாத்திரப்படலம், பா.223.



# அயோத்தியா காண்டத்தில் கம்பரின் மாற்றம்

## தோற்றுவாய்

கம்பர் தம் காப்பிய நோக்கிற்கும், தம் காலச்சூழலுக்கும், தமிழ்ப் பண்பாட்டிற்கும் ஏற்ப, முன்னூலாகிய வான்மீகியில் கூறப் பட்ட கதைப் பகுதியிலிருந்து சிலவற்றை மாற்றம் செய்துள் ளார். இம்மாற்றம் என்னும் சொல், நீக்கியவை, புதிதாகப் படைத்தவை என்பனவற்றையும் உள்ளடக்கும் என்றாலும் இவ்வியலில் குறிப் பிட்ட பொருளில் மட்டுமே வரையறை செய்யப்படுகிறது. ஒருவர் கூற்றை மற்றொருவர் கூற்றாகவும், ஓர் இடத்தில் நிகழும் நிகழ்ச்சியை மற்றோர் இடத்தில் நிகழுவதாகவும், குறிப்பிட்ட பின்புலத்தை மாற்றியுரைப்பதும் மாற்றம் (Shifting) என்ற சொல்லால் குறிக்கப்படுகிறது. அவ்வகையில் அயோத்தியா காண்டத்தில் கம்பர் மாற்றம் செய்தவை எவையென ஆய்ந்து கூறுவதாக இப்பகுதி அமைகிறது.

## அயோத்தியா காண்டத்தில் கம்பர் செய்த மாற்றம்

கம்பர் தம் காப்பிய மாந்தர்களின் பண்பு நலன்களுக்கும், கதை நிகழ்ச்சிகளுக்கும் ஒவ்வாத கூற்றுகளையும், நிகழ்ச்சி களையும் மாற்றம் செய்கின்றார். கம்பர் செய்த மாற்றங்களைக் கதை நிகழ்ச்சிமாற்றம், கதைமாந்தர் மாற்றம் என இரண்டாக வகைப்படுத்துவார் அ.பாண்டுரங்கன்.[1] இதனைக் கொண்டு இவ்வியலில் மாற்றங்கள் வகைப்படுத்தப்படுகின்றன.



**கதை நிகழ்ச்சி மாற்றம்**

கம்பர் நிகழ்ச்சிகளில் பல மாற்றங்கள் செய்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். அம்மாற்றங்களை நிகழ்ச்சி மாற்றம், சூழ்நிலைமாற்றம், காலமாற்றம், இடமாற்றம் என வகைப் படுத்தலாம்.

**நிகழ்ச்சி மாற்றம்**

1. தயரதன் இராமனுக்கு இளவரசுப் பட்டம் சூட்ட முனைவதாக வான்மீகி கூறுவர்.[2] கம்பர் இதனை மாற்றி இராமனுக்கு, மன்னனாகவே பட்டம் சூட்ட தயரதன் விழைவ தாகப் படைக்கின்றார்.[3]

அரசு வீற்றிருக்கும் மன்னர்கள் வயது முதிர்ந்தவுடன் உரியவர்களிடம் அரசுப் பொறுப்பை ஒப்படைத்து, காட்டிற்குச் சென்று தவம் மேற்கொள்வதை வழக்கமாகக் கொண்டிருந்தனர். அதன்படி வயது முதிர்ந்த தயரதனும் வடக்கிருக்கக் கருதி ஆலோசனை மண்டபத்தை அழைத்துத் தன் விருப்பத்தை அமைச்சர் முதலானவர்களுக்குத் தெரிவித்தான். இதனை,

**விரும்பிய மூப்பு எனும் வீடு கண்ட யான்,**
**இரும் பியல் அனந்தனும், இசைந்த யானையும்,**
**பெரும் பெயர்க் கிரிகளும், பெயரத் தாங்கிய,**
**அரும் பொறை இனிச் சிறிது ஆற்ற ஆற்றவேன்,**
**நம் குலக் குரவர்கள் நனவயின் நீங்கினார்,**
**தம் குலப் புதல்வரே தரணி தாங்கப் போய்,**
**வெம் குலப் புலன் கெட வீடு நண்ணினார்,**
**எங்கு உவப்பு உறுவர்? என்று எண்ணி நோக்குகேன்**

என்ற தயரதனின் வாக்கால் அறியமுடிகிறது.[4]

வான்மீகியின் தயரதன் இளவரசுப் பட்டம் சூட்ட விழைவ தால் அவனும் ஆட்சிப் பொறுப்பில் மன்னனாக இருக்க எண்ணு கின்றான். கம்பரின் தயரதன் வடக்கிருந்து தவக்கோலம் கொள்ள விரும்புவதால் இராமனை மன்னனாகவே முடிசூட்ட விழை கின்றான் என்பதாக மாற்றம் செய்கின்றார்.

2. இராமன், கைகேயியின் வரத்தினால் காடாளப் போகும் செய்தியைத் தெரிவிக்கக் கோசலையின் மாளிகைக்குச் சென்றான். அவள் தன் மகன் முடிசூடப் போகின்றான் என்ற எண்ணத்தால் மகிழ்ச்சியோடு வரவேற்றாள். பின் இராமன், சீதை இருக்குமிடம் சென்றபோது, அவள் தன் கணவன் வெண்கொற்ற குடையும், சாமரங்களும் இன்றி முடிபுனையாமல் வருவதைக் கண்டு வருந்தி நடுங்கினாள் என்பதாக வான்மீகம் கூறுகிறது.[5]

இவ்வாறு வான்மீகத்தில் சீதையின் பண்பை விளக்கும் நிகழ்ச்சி கம்பனில் குழைக்கின்ற கவரி இன்றிக் கொற்ற வெண் குடையும் இன்றி முடிபுனையாமல் மகன் வருவதைக் கண்ட கோசலை, இடையூறு உண்டோ நெடுமுடி புனைதற்கு[6] என்று ஐயுற்றதாக மாற்றப்படுகிறது.

இராமன் வரும் தோற்றத்தைக் கொண்டே அனுபவமிக்க கோசலை முடிபுனைவதில் இடையூறு நேர்ந்திருக்கலாம் என ஊகிப்பது கோசலையின் பண்புக்கு ஏற்றம் தருவதாக அமை கின்றது என்பதால் கம்பர் இங்ஙனம் மாற்றம் செய்கின்றார்.

3. கோசலை, இராமனிடம் காடு செல்ல வேண்டாம் என்று கூறித் தடுக்கின்றாள். தந்தையின் ஆணையை நிறைவேற்றுவதில் இராமன் உறுதியுடன் இருப்பதைக் கண்ட கோசலை தந்தை எப்படியோ அப்படியே தாயும். அதனால் நீ காடு செல்ல வேண் டாம், தாயாகிய என் சொல்லை மட்டும் நீ மறுத்துச் செல்ல லாமோ என்று கேட்பவளாக வான்மீகம் கூறும்.[7]

இவற்றால் கோசலைக்கு இராமன் மீது கொண்ட பேரன்பு புலப்படுகின்றதாயினும் தன் கணவன் கட்டளைக்கு மாறுபடு கின்றாள் என்ற மாசு தோன்றுகிறது. அதனை நீக்கும் வகையில், கோசலைக்கு இராமனிடத்து உள்ள அன்பும், கணவனிடத்து உள்ள மதிப்பும் குன்றாவண்ணம் நின்று நிகழ்வதாகக் கம்பர்,

**ஆகின், ஐய அரசன்தன் ஆணையால்**
**ஏகல் என்பது யானும் உரைக்கலேன்**
**சாகலா உயிர் தாங்க வல்லேனையும்,**
**போகின், நின்னொடும் கொண்டனை போகு என்றாள்**[8]

என்ற கோசலையின் பண்பு நலன் வெளிப்படும் வகையில் இம் மாற்றத்தினைச் செய்திருக்கின்றார்.

4. இராமன் காடேகுவதற்கு முன் தந்தையிடம் விடைபெறச் சென்றபோது தயரதன் தன்னை அடக்கிவிட்டு நாட்டை ஆளும்படி கூறுகின்றான். இராமன் தந்தையின் கூற்றை மறுத்து அறிவுரை கூறினான் என வான்மீகி படைத்துள்ளார்.[9]

நாட்டின் மன்னன் தன்னை அடக்கிவிட்டு நாடாளுமாறு கூறுவது தயரதன் பண்புக்கு மாசேற்றும் என்பதனாலும், மகன் நேரில் அறிவுரை கூறுவது பண்பாகாது என்பதாலும் இராமன் தன் தந்தையைச் சந்திக்கும் நிகழ்ச்சியையே நீக்கி விடுகின்றார் கம்பர். தயரதன், வசிட்டரிடம்,

**என்ற அம் முனிவன் தன்னை நினையா வினையேன் இனியான்**
**பொன்றும் அளவில், அவனைப் புனை மாமகுடன் புனைவித்து,**
**ஒன்றும் வனம் என்று உண்ணா வண்ணம் செய்து, என் உரையும்,**
**குன்றும் பழி பூணாமல் காவாய், கோவே என்றான்**[10]

என்று வேண்டுவதாக மாற்றம் செய்கின்றார்.

தந்தையின் உள்ளம் பாசத்தால் பிணைந்த உள்ளம். மகனைக் கண்டால் மேலும் துயர்பெறும் மாற்றுநிலை விளையும் என்றெண்ணவும் இடமுண்டு. எனவே, கம்பர் கட்டுப்பாடான உறுதியைக் காட்டச் செய்த மாற்றமாகக் கொள்ளலாம் என்பார் தகடூரான்,[11]

கைகேயி, பரதன் நாடாளவும் இராமன் காட்டில் தவம் மேற்கொள்ளவும் வேண்டும் என்ற வரங்களை தயரதனிடம் கேட்டபோது, அவன்

**மன்னே கொள் நீ மற்றையது ஒன்றும் மற**[12]

என்றும்,

**நின் மகன் ஆள்வான் நீ இனிது ஆள்வாய் நிலம் எல்லாம்**
**உன் வயம் ஆமே ஆகுதி தந்தேன் உரைகுன்றேன்**
**என் மகன், என் கண், என் உயிர், எல்லாம் உயிர்கட்கும்**
**நல் மகன், இந்த நாடு இறவாமை நய என்றான்**[13]

என அவளிடம் வேண்டுகின்றான். கைகேயியிடம் முன் வேண்டியதையே மீண்டும் வசிட்டரிடமும் வேண்டுகிறானே அன்றி, வான்மீகியின் தயரதன் போல் தன் பண்புக்கு மாசேற்றும் வகையில் கம்பர் கண்ட தயரதன் இராமனிடம் கூறவில்லை.

கம்பரின் இம்மாற்றத்தால் தயரதன் தம் வாய்மையைக் காப்பாற்றுவதில் கொண்ட உறுதிப்பாடும், இராமன் மேல் கொண்ட அன்பும் புலப்படுத்துவதாக அமைகிறது.

5. தயரதனுக்கு முன்னூற்றைம்பதின்மர் மனைவியர்கள் இருந்ததாக வான்மீகம் கூற[14] அறுபதினாயிரம் மனைவியர்கள் இருந்ததாக மாற்றம் செய்கிறார் கம்பர்.[15]

இது புனைந்துரையே ஆயினும் மகாசக்கரவர்த்திகளுக்கு, எல்லாம் பல்லாயிரமாக அமைந்திருக்க வேண்டும் என்பது பற்றிக் கூறியது என்பதை உளங்கொளல் வேண்டும். அமைச்சர் அறுபதினாயிரர், தயரதன் ஆட்சிபுரிந்தது அறுபதினாயிரம் ஆண்டு என்று கூறியதும் இம்மரபு பற்றியேயாம் என்கிறது அ.ப.பதிப்பு.[16]

பலதாரக் கொடுமையை உணர்த்த இதுவும் போதாதென்று எண்ணிய கம்பர், இவ்வாறு கற்பித்துக் கூறுவதாக ம.பொ. சிவஞானம் கூறுவார்.[17]

மன்னர்கள் அரசியல் காரணமாகவும், பிள்ளைப்பேறு கருதியும் பல பெண்களை மணம்புரிதல் வழக்கம் என்பது வரலாற்றால் புலனாகிறது. தயரதனும் கோசலை, சுமத்திரை, கைகேயி மூவரையும் ஒருவர் பின் ஒருவராக மணந்து கொண்டமைக்குப் பிள்ளைப்பேறு நீண்டகாலம் வாய்க்காமையே காரணமாகக் கொள்ளலாம். மேலும் மன்னர்கள் படையெடுத்துச் செல்லும் போது தோல்வியடைந்த மன்னர்கள் நாட்டிலிருந்து கொண்டு வந்த மகளிரை மனைவியராகவும், பணிப்பெண்களாகவும் வைத்துக் கொள்ளுதல் மரபாகக் கொண்டிருந்தனர். இந்த வழக்கத்தாலும், தயரதன் பகைமன்னரை வென்றவன் என்பதை உணர்த்தவுமே அறுபதினாயிரம் மனைவியர்களைப் பெற்றிருந்தான் எனக் கம்பர் ஏற்றிக் கூறியுள்ளார் என்பதும் புலனாகிறது.

6. இராமனும் இலக்குவனும் மட்டுமே மரவுரி உடுத்திச் சென்றதாகவும், உடன் சென்ற சீதை மரவுரி உடுத்திச் செல்லவில்லை எனவும் வான்மீகி கூறுகின்றார்.[18]

கம்பர், உடன் செல்லும் சீதையும், மரவுரி உடுத்தியதாகப் புனையும் சீரம் துணிந்து புதைந்தனள்[19] எனப் படைத்துள்ளார்.

கணவன் மரவுரி தரித்திருக்கும்போது மனைவியும் மரவுரி தரிப்பதுதான் கற்புடைமைக்கு அழகு என்ற கருத்தால் கூறியதாகக் கொள்ளவேண்டும் என்கிறது அ.ப.பதிப்பு.[20]

சீதையின் இருப்பிடம் சென்ற இராமன் காட்டிற்குச் சென்று வருவதாகக் கூறி, இங்கு நீ வருந்தாதிரு என்றான். இராமன் காட்டிற்குப் போகின்றான் என்பதைவிட நீ வருந்தாதிரு என்று கூறியதே சீதையை வருத்தியதாகக் கம்பர் படைக்கின்றார். மேலும் இராமன் காட்டின் வெம்மையை எடுத்துக்கூறி உடன் அழைத்துச் செல்ல மறுக்கின்றான். சீதை,

. . . . . . . . . . . . . . . . . . . நின்
பிரிவினும் சுடுமோ.பெருங்காடு[21]

என்று கூற, இராமன் செய்வதறியாது திகைத்தபோது சீதை தன் இறுதியான முடிவை அவனுக்கு உணர்த்தவேண்டி மரவுரியை உடுத்திவந்து அவனின் கைபற்றி நின்றாள் எனக் கம்பர் படைத்துள்ளார்.

அங்ஙனம் சீதை மரவுரியை உடுத்திவந்து தானும் உடன் வருவேன் என்பதை இராமனுக்கு உணர்த்தவில்லையாயின், இராமன் சிந்தித்து அவள் கருத்துக்கு மாறுபட்ட தன்முடிவைக் கூறியிருக்கலாம். எனவே கம்பர் படைத்த சீதை மரவுரியை உடுத்தி இராமனுடன் காடு செல்கின்றாள். மேலும் கணவன் இராமன் தவம் மேற்கொண்டு காடு செல்பவன். சீதையும் அவனைப் போன்றே தவக்கோலம் பூண்டு செல்வதே சிறப்பு என்பதால் மரவுரி உடுத்திச் சென்றாள் என்பதாக மாற்றிக் காட்டுகின்றார் கம்பர்.

7. கங்கைக் கரையில் தங்கியிருந்த இராமனைக் காணவந்த குகன் அன்னத்தால் ஆன பல்வேறு உணவுகளைக் காணிக்கையாகக் கொணர்ந்ததாக வான்மீகி கூறும்.[22] கம்பரோ, கங்கைக் கரையில்

முனிவர்களுடன் தங்கிருந்த இராமனைக் காணவந்த குகன் மீனையும், தேனையும் கொணர்ந்ததாக மாற்றம் செய்கின்றார்.[23]

கண்ணப்பர் செயலைப்பற்றிக் கவலைக் கொள்ளாமல் இறைவன் அவருடைய மனநிலை ஒன்றையே கண்டான் என்பது இந்நாட்டவர் அறிந்த ஒன்றாகும். இத்தகைய தமிழ்ப் பண்பாட்டைக் கம்பர் நன்கு அறிந்தவர் என்பதால்தான் முதனூல் கருத்திற்கு முரணாகக் குகன் மீனைக் கொணர்ந்ததாகப் படைக்கின்றார். மேலும் காட்டில் வாழும் வேடனாகிய குகன் பணியாரமும், பாயசமும் கொண்டு வந்தான் என்பதைக் காட்டிலும், மீனும், தேனும் கொண்டு வந்தான் என்பது சாலவும் பொருத்தம் உடையதே என்பார் அ.ச.ஞானசம்பந்தன்.[24]

தேனோ உயரமான இடத்தில் கிடைப்பது. தேனில் குகனுடைய பக்தியின் உயர்வும், மீனோ நீரின் ஆழத்தில் கிடைப்பது மீனில் குகனுடைய அன்பின் ஆழமும் தெரிவதாகக் கூறுவார் அ.அருணகிரி.[25]

இராமன் கங்கையைக் கடப்பதற்கு ஓடம் கொண்டு வருமாறு குகனிடம் கூறினான். அதனைக் கேட்ட குகன் வருத்த முற்றவனாய்த்,

**தேன் உள, தினை உண்டால், தேவரும் நுகர்தற்கு ஆம்**
**ஊன் உள, துணை நாயேம் உயிர்உள, விளையாடக்**
**கான் உள, புனலாடக் கங்கையும் உளது, அன்றோ**
**நான் உளதனையும் நீ இனிது இரு நடஎம்பால்**[26]

என தன் நாட்டில் தேவர்களும் விரும்பி உண்ணத்தக்க தேன், தினை, ஊன் முதலியன நிரம்பியுள்ளன. எனவே அங்குவந்து தங்க வேண்டும் என இராமனிடம் வேண்டினான் என்பதாகக் கம்பர் படைத்துள்ளார். குகன் வேடர்குலத் தலைவன். அவனது நாடு கங்கையின் கரையில் அமைந்திருப்பது. எனவே தேனும், தினையும், மீனும் உணவாகப் பயன்பட்டுள்ளன. ஆகவே இராமனைக் காணச் சென்றபோது காட்டில் கிடைக்கும் பொருள்களை எடுத்துச் செல்கிறான் என்று உள்ளவாறே படைத்துக்காட்டுகின்றார் கம்பர்.

8. இராமன் கங்கைக் கரைக்கு வந்திருக்கும் செய்தியை அறிந்த குகன் தன் சுற்றத்தாருடன் காணச் சென்றான். அவ்வாறு சென்றவனை இராம இலக்குவர் எதிர் சென்று சந்தித்ததாக வான்மீகி குகனைப் பழைய நண்பனாகவே படைத்துக் காட்டுகின்றார்.[27] கம்பர் இதனை மாற்றிப் புதிய நண்பர்களாகப் படைத்துள்ளார்.

இராமன் கங்கைக் கரைக்கு வந்தமையை அறிந்த குகன் கையுறைப் பொருள்களுடன் காணச்சென்றான். அவனை யார் என வினவிய இலக்குவனைக் கண்டு இராமன் எனப் பிறழ உணர்ந்த குகன்,

**தேவா கழல் சேவிக்க வந்தனென்**
**நாவாய் வேட்டுவன் நாய் அடியேன்**[28]

எனத் தான் வணங்க வந்தமையை கூறினான். அவன் தூய உள்ளத்தைக் கண்ட இலக்குவன் இராமனிடம் சென்று,

**கொற்றவ நின்னைக் காணக் குறுகினன், நிமிர்ந்த கூட்டச்**
**சுற்றமும் தானும், உள்ளம் தூயவன், தாயின் நல்லன்,**
**எற்று நீர்க் கங்கை நாவாய்க்கு இறை, குகன் ஒருவன்**
**என்றான்**[29]

எனத் தெரிவித்தான். பின் குகன் இராமனைக் கண்டு வணங்கி, தான் கையுறையாகக் கொண்டு வந்த மீனையும், தேனையும் ஏற்கும்படி வேண்டினான். அவன் அன்பினைக் கண்ட இராமன்,

**முன்பு உளெம், இனி நால்வேம், முடிவுஉளது என உன்னா**
**அன்பு உள, இனி நாம் ஓர் ஐயவர்கள் உளர் ஆனோம்**[30]

என்று உள்ளம் கலந்து உறவாடும் புதிய நட்பு கொண்டவர்களாகப் படைக்கின்றார் கம்பர்.

கம்பர் காட்டுவது உயிருடன் கலந்த தோழமை, இன வேறுபாடு காணாத உறவு முறையாகும் என்பார் தகடூரான்.[31]

குகனிடத்திலிருந்த அன்புள்ளந்தான், இராமனுடைய உள்ளத்தில் ஒருமைப் பாட்டுணர்ச்சியையும், சகோதர பாசத்தையும் வளர்த்ததாகவும், கங்கைக் கரையில் முளைத்த சகோதர

பாசம், கிட்கிந்தையில் தழைத்து இலங்கைவரை படர்ந்ததெனவும் அ.அருணகிரி கூறுகின்றார்.[32]

காட்டில் தவவாழ்க்கை மேற்கொள்ள வந்த இராமனை முதல் முதலில் கண்டு வணங்கியவன் வேடர் குலத்தலைவனாகிய குகனே. அவன் இராமன் மீதுகொண்ட அன்பும், பக்தியும் முழுமையும் வெளிப்பட வேண்டும் என்பதனாலும், வேறுபாடு இன்றி இராமன் எல்லோரிடத்தும் அருளுடையவனாக விளங்க வேண்டும் என்பதினாலுமே கம்பர் இங்ஙனம் மாற்றம் செய்கின்றார்.

மேலும் இராமனைக் காட்டிற்குக் காணவந்த பரதனைக் கண்டு ஐயுற்றான் குகன், பின் அவன் தோற்றம் கண்டு தெளிந்து

**ஆயிரம் இராமர் நின்கேழ் ஆவரோ**[33]

எனப் பரதனைப் போற்றினான். அயோத்தியில் பழித்துரைக்கப் பட்ட பரதன் கங்கைக்கரையில் குகனால் மாசற்றவனாக உயர்த் தப்படுகின்றான். குகன் இராமனை முன்பே அறிந்தவனாக இருந்திருந்தால் பரத னைப் பற்றியும் அறிந்திருப்பான். அங்ஙனம் அறிந்திருந்தால் பரதனை ஐயுறவும், பின் தெளிந்த அவனைப் புகழவும் வாய்ப்பு கிடைத்திருக்காது. இக்காரணம் பற்றியே இராமன், குகனை முன்பே அறிந்ததாகக் கம்பர் படைத்திலர் என்பது புலனாகிறது.

9. காடு செல்லும்போது யமுனை நதியைக் கடக்க இராமனும் இலக்குவனும் தெப்பம் அமைத்து அதில் சீதையை வீற்றிருக்கச் செய்து தாங்களும் சேர்ந்தே தெப்பத்தைச் செலுத்திய தாக வான்மீகம் கூறும்.[34]

கம்பர், இலக்குவன் மட்டுமே தெப்பம் அமைத்து அதில் இராமனையும், சீதையையும் வீற்றிருக்கச் செய்து தெப்பத்துடன் கைகளால் நீந்திச் செலுத்தியதாக மாற்றம் செய்கிறார்.[35]

இராமன் காடேகுவதற்குச் சுமித்திரையிடம் விடைபெறச் சென்றபோது, அவள் தன் மகன் இலக்குவனிடத்து,

**. . . . . . . . . . . . . . . இவன் பின் செல் தம்பி**

**என்னும்படி அன்று அடியாரினின் வெல்செய்தி**[36]

என்று கட்டளையிடுகிறாள். அன்று அன்னையிட்ட ஆணையைச் சிந்தையில் கொண்ட இலக்குவன், இராமன் காடு செல்லும்போது யமுனையை எவ்வாறு கடந்து செல்வது என்று கூறிய அளவில்,

**வாங்கு வேய்ங்கழை துணிந்தனன், மானையின் கொடியால்**
**ஓங்கு தெப்பம் ஒன்று அமைத்து, அதன், உம்பரின் உலம்போல்**
**வீங்கு தோள் அண்ணல் தேவியோடு இனிது வீற்றிருப்ப,**
**நீங்கினான், அந்த நெடுநதி, இரு கையால் நீந்தி[37]**

என்று தன்னை இராமனின் அடியவனாகவே தன் எண்ணத்திலும், சொல்லிலும், செயலிலும் மாற்றம் செய்துக்கொண்ட பண்பினை வெளிப்படுத்துவதாக அமைகிறது கம்பரின் இம்மாற்றம்.

*10.* இராமன், இலக்குவன் மற்றும் சீதை மூவரும் காடு சென்றபோது உணவு வேண்டி, இராமனும் இலக்குவனும் மான்களை வேட்டையாடி வந்தனர் என்று வால்மீகம் கூறும்.[38]

கம்பர், இராமனை உலக உயிர்கள் அனைத்தையும் ஒன்றெனக்கொண்டு ஒழுகும் அருள் உள்ளத்தவனாகப் படைத்துக் காட்டியுள்ளார். இதனை விலங்கினமாகிய குரங்கினத்தைச் சேர்ந்த அனுமனைத் தன் தம்பியாகக் கொண்டு,

**குகனொடும் ஐவர் ஆனேம் முன்பு பின் குன்று சூழ்வான்**
**மகனொடும், அறுவர்ஆனேம் எம்முழை அன்பின் வந்த**
**அகன் அமர் காதல் ஐய நின்னொடும் எழுவர் ஆனேனம்**
**புகல் அருங்கானம் தந்து,புதல்வரால் பொலிந்தான் நுந்தை[39]**

எனக் கூறியமையால் உணரமுடிகிறது. இத்தகைய பண்பாளனாகிய இராமன் காட்டில் தங்கி இருந்தபோது உணவிற்காக மான் வேட்டையாடி உண்டான் என்பது அவனது அருள் உள்ளத்திற்கு மாசேற்றம் என்பதால் கம்பர் இதனை மாற்றம் செய்கின்றார்.

**ஊறும் மென் கனி கிழங்கினோடு உண்டு, நீர் உண்டார்[40]**

எனக் காட்டில் தங்கியபோது கனிகளையும், கிழங்குகளையும் உண்டு வாழ்ந்தான் என்கிறார். மேலும் கம்பர் முன்னோர் மொழிந்த பொருள்களைப் பொன்னேபோல் போற்றியவர் என்பது அவர்தம் காப்பியத்தால் புலனாகிறது. அவ்வகையில்

திருவள்ளுவர் திருக்குறளில் படைத்து மொழிந்த புலால் மறுத்தல், கொல்லாமை[41] என்ற அதிகாரப் பொருள்களை வலியுறுத்தும் வகையில் அக்கருத்துக்களைக் கம்பர் தம் காப்பியத்தில் பொதிந் துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

**கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி**
**எல்லா உயிரும் தொழும்[42]**

என்ற திருவள்ளுவரின் வாய்மொழிக்கேற்ப விளங்குகின்றான், கம்பர் படைத்துக் காட்டும் இராமன்.

இராமன் கங்கைக் கரையில் தங்கியிருந்தபோது, அவனைக் காணவந்த குகன் கையுறையாக மீனும், தேனும் அன்புடன் அளித் தான். குகன் அன்பு வெளிப்படும்படி கொண்டு வந்த கையுறை என்பதால் இராமன்,

**அரிய, தாம் உவப்ப, உள்ளத்து அன்பினால் அமைந்த காதல்**
**தெரிதரக் கொணர்ந்த என்றால், அமுதினும் சீர்த்த அன்றோ**
**பரிவினில் தழிஇய என்னின் பவித்திரம் எம் அனோர்க்கும்**
**உரியன இனிதின் நாமும் உண்டனெம் அன்றோ?என்றான்[43]**

என்றான். என நாம் அனைவரும் குகன் வருமுன்பே உண்டு முடித்தோம் அல்லவா என்று முனிவர்களை நோக்கி வினவிய தாகப் படைத்துள்ளார் கம்பர்.

இங்ஙனம் கம்பரின் காப்பியத்தில் இராமன் ஊன் உண்ண நேருமாறு ஓர் இடம் உண்டேயன்றி ஊன் தின்றதாகவோ, அதுபெற வேட்டையாடியதாகவோ ஒரு சிறு குறிப்பும் இல்லை. தமிழ் மக்களிடையே ஊன் உண்ணும் வழக்கம் இருப்பினும், ஊன் உண்ணாது அருள் நெஞ்சுடையராய் வாழ்ந்தோரும் எண்ணிறந் தோர். அவர்களுள் சோழன் சிபியும் ஒருவன். அவன் தன்கண் வந்த புறாவினைக் கொன்று உண்பதற்கு வேறாகத் தன்னுயிரை மாற்றாக வழங்கியுள்ளான். புக்கடைந்த புறாவொன்றின் பொருட் டாகத் துலைபுக்க வான்வேந்தன் வழி வந்தான் இராமன் என்ப தால் அவனை ஊன் உண்ணாதவனாகவே படைக்கின்றார் கம்பர் என்பார் திருமேனி.[44]

*11.* இராமன் காடு சென்றமையை அறிந்த பரதன், கைகேயியிடம் காரணம் கேட்டான். இராமன் என்ன குற்றம் செய்

தான். குற்றமில்லாத எந்தத் தரித்திரனுக்காவது துன்பம் விளை வித்தானா. வேதங்களை அறிந்த அந்தணர்களைக் கொன்றவனைப் போல் இராமனைத் தண்டகாரண்யத்திற்கு ஏன் துரத்திவிட் டார்கள் என்று ஐயுற்று வினவினான். கைகேயி இக் குற்றங்களை மீண்டும் கூறி இக்காரணங்களால் இராமன் காடு செல்லவில்லை என்று கூறியதாக வான்மீகி அமைத்துள்ளார்.[45]

பரதன், இராமன் காடு சென்றது பற்றிக் கைகேயிடம், தீங்கு இழைத்ததாலோ, அல்லது தெய்வத்தின் சீற்றத்தாலோ, அல்லது ஊழினாலோ என்று வினவினான். பின் அவனே இராமன் தீயனவற்றைச் செய்யமாட்டான். செய்தானெனில் நாட்டு மக்களின் நன்மைக்காகவே செய்திருப்பான்,

**தீயன இராமனே செய்யுமேல், அவை**
**தாய் செயல் அல்லவோ, தவத்துளோர்க்கு எலாம்**[46]

என்று கூறுவதாகக் கம்பர் மாற்றம் செய்கின்றார். இராமன் இத்தகைய காரணங்களால் காட்டிற்குச் செல்லவில்லை என்று கூறி, பரதனின் ஐயத்தை நீக்கினாள் கைகேயி என வான்மீகி படைத்துள்ளமை பரதனது பண்பிற்கு ஏற்றதன்று என்பதனால் கம்பர் இங்ஙனம் மாற்றம் செய்துள்ளார்.

உடன் பிறப்புக்களுள் இருந்த ஒற்றுமையையும், இராமன் வீணாகத் தவறு செய்யவே மாட்டான் என்ற பரதனின் நம்பிக் கையையும் எடுத்துக் காட்டும் உயரிய சகோதரத்துவ மனப் பாங்கை வலியுறுத்தும் இம்மாற்றத்தைக் கம்பர் செய்திருப்பது போற்றத்தக்கதாகும் என்பார் ஆர்.டி.சீதாபதி.[47]

12. பரதனைக் கண்ட கோசலை அவனிடத்து அரசு பெற விருப்பப்பட்ட உனக்கு, உன் தாய், எளிதாக அரசாட்சியைப் பெற்று வைத்திருக்கின்றாள். இனிதே நீ ஆளலாம். மரவுரியுடன் காடாளச் சென்ற இராமனிடத்துக் கொண்டுபோய் எங்களைவிடு, இல்லையாயின் நானும் சுமித்திரையும் காடு செல்வோம் என்று கூறுவதாக வான்மீகம் கூறும்.[48]

கோசலைக்கு இத்தகைய பொறாமைச் சொற்கள் மாசேற்றும் என்பதால் கம்பர் இவற்றையெல்லாம் விடுத்து அவனின் பண்புக்கு ஏற்றம் தரும் வகையில்,

**கைகயர் கோமகள் இழைத்த கைதவம்**

**ஐய நீ அறிந்திலை போலும்**[49]

என்று மட்டும் கேட்பவளாக அமைத்துள்ளார். இக்கூற்றுக்கே பொறுத்துக் கொள்ளாத பரதன் சூளுரைகள் பல புகன்றதாகவும் படைக்கின்றார்.

13. பரதனைக் காண வந்த குகன் வரவை சுமந்திரர் தெரிவிக்க, பரதன் அவனைக் காண இசைந்ததாக மட்டுமே வான்மீகம் கூறும்.[50] கம்பர் தம் காப்பிய மாந்தரின் பண்பு நலன்களுக்கு ஏற்ப மாற்றி அமைத்துள்ளார்.

சுமந்திரன், பரதனிடத்து இராமனுக்கு உயிர்த்தோழன் குகன். அவன் உனைக்காணும் உள்ளத்தோடு எதிர்க்கரையில் நிற்கின்றான் என்று கூறியவுடன் பரதன்,

**தன் முன்னே, அவன் தன்னை தன் துணைவன் முந்து உரைத்த**
**சொல் முன்னே உவக்கின்றதுரிசு இலாத் திரு மனத்தான்**
**மன் முன்னே தழீஇக் கொண்ட மனக்குஇனிய துணைவனேல்**
**என் முன்னே அவற் காண்பென் யானேசென்று என எழுந்தான்**[51]

என்று குகனுக்கு மதிப்பளித்துப் பேசுவது, அவன் இராமன் மீது கொண்ட அன்பினைப் புலப்படுத்துவதாகவே அமைகிறது கம்பரின் மாற்றம்.

14. குகன், பரதனை வணங்கியதை மட்டும் வான்மீகம் கூறும்.[52] கம்பர் இருவரும் ஒருவரையொருவர் வணங்கியதை.

**வந்து எதிரே தொழுதானை வணங்கினான் மலர் இருந்த**
**அந்தணனும் தனைவணங்கும் அவனும் அவன் அடிவீழ்ந்தான்**
**தந்தையினும் களிகூரத் தழுவினான் தகவு உடையோர்**
**சிந்தையிலும் சென்னியினும் வீற்றிருக்கும் கீர்த்தியான்**[53]

என்று படைக்கின்றார். நாவாய் வேட்டுவனாகிய குகனின் தூய அன்பினைக் கண்ட இராமன்.

**முன்பு உளெம் இனி நால்வேம், முடிவு உளது என உன்னா**
**அன்பு உன இனி நாம் ஓர் ஐவர்கள் உளர் ஆனோம்**[54]

என்று தன் உடன்பிறந்தானாகவே ஏற்றுக்கொண்டான் என்கிறார் கம்பர். இங்கு பரதனை வணங்கச்செய்யாது குகனை மட்டும் வணங்கச்செய்வது ஏற்புடையதல்ல என்பதால் கம்பர் இருவரையும் ஒருவரையொருவர் வணங்கச்செய்து தம் காப்பிய மாந்தரின் பண்பினை உயர்த்துகின்றார்.

15. பரதன் பெரும் படைகளுடன் வருவதைக் கண்ட இலக்குவன் சினத்துடன் காணப்படுகின்றான். அதனைக் கண்ட இராமன், இலக்குவனிடத்து பரதனோ பெரும் படைகளுடன் வருகின்றான். சிறந்தவீரன் அவனே போருக்கு நேரில் வரும்போது நாம் என்ன செய்ய முடியும். நம் ஆயுதங்கள் பயனற்றதாகும் என்று சிந்தை செய்து பேசுவதாகவும், பின்பே பரதனின் சிறப்பை எடுத்தியம்புவதாகவும் வான்மீகி படைக்கின்றார்.[55]

இராமனின் இச்சிந்தனையோட்டம் தம் காப்பிய இராமனின் பண்புக்கு ஏலாது என்பதால் கம்பர்.

**பெருமகன் ஏவலின் பிறந்த காதலின்**
**வரும் என நினைகையும், மண்ணை என்வயில்**
**தரும் என நினைகையும் தவிரத் தானையால்**
**பொரும் என நினைகையும் புலமைப் பாலதோ?**[56]

என்று பாசத்தின் மேல் வைத்துப் பேசுவதாகப் படைக்கின்றான்.

16. காடு சென்ற பரதன், இராமனிடம், தயரதன் இறந்தமையைக் கூறினான். இராமன் தந்தைக்கு நீர்க்கடன் செலுத்த நீர்த்துறைக்குச் சென்ற போது உடன் சீதையும் சென்றதாக வான்மீகம் கூறும்.[57] கம்பர் இராமனும் சீதையும் தனித்தனியாக நீர்த்துறைக்குச் சென்றதாக மாற்றம் செய்கின்றார்.

பரதன் சித்திரகூடத்தை அடைந்தபோது இராமன் சீதைக்குச் சித்திரகூடத்தின் அழகையெல்லாம் காட்டி மகிழ்ந்தான் என வான்மீகி படைத்துள்ளார்.[58] எனவே பரதன் தந்தை இறந்தமையைக் கூறியபோது சீதையும் உடனிருந்தமையால் இராமனுடன் நீர்த்துறைக்குச் சென்றான் என்கிறார் வான்மீகி.

பரதன் சித்திரகூடத்தை அடைந்த செய்தியை இலக்குவன் கண்டு இராமனுக்குக் கூறினான். பின் பரதன் இராமன் இருக்கு

மிடம் சேர்ந்து தயரதன் இறந்தமையைக் கூறியபோது இராமன் இலக்குவன் மட்டுமே இருந்தனர். அப்போது சீதை பர்ணசாலை யில் இருந்ததாகக் கம்பர் கூறியுள்ளார். எனவே சீதை இராம னுடன் நீர்த்துறைக்குச் செல்லாமல்,

**ஆயவன் தன்னை நேர்ந்த அங்கை ஏந்தினர்**
**தாயரின், முனிவர் தம் தருமப் பள்ளியர்**
**தூய நீர் ஆட்டினர், துயரம் நீக்கினர்**
**நாயகற் சேர்ந்தினர், நவையுள் நீங்கினார்**[59]

என்ற முனிவர்களுடைய மனைவியர்களுடன் நீர்த்துறைக்குச் சென்றதாக மாற்றம் செய்கின்றார் கம்பர்.

**சூழ்நிலை மாற்றம்**

1. கதை நிகழ்ச்சிகளில் சூழ்நிலையைத் தம் காப்பியத்திற் கேற்ப மாற்றம் செய்கின்றார் கம்பர்.

தயரதன் பட்டம் சூட்டுவிழாவிற்கான ஏற்பாடுகளைச் செய்துவிட்டுக் கைகேயியின் மாளிகைக்குள் நுழைந்தபோது அங்குப் பறவைகள் இனிமையாக ஒலிப்பதாகவும், இசைக்கருவி களின் இசை முழக்கம் எங்கும் கேட்பதாகவும் பின்னணிச் சூழலைப்பற்றி வான்மீகி படைக்கின்றார்.[60] கம்பர், கைகேயியின் அலங்கோலமான நிலையையே தயரதன் முதலில் காண்பதாக மாற்றி அமைக்கின்றார்.[61]

பின் நடக்கப் போகும் அவலநாடகத்திற்கு வான்மீகி கூறும் பின்னணி பொருத்தமற்றதாக இருப்பதால் கம்பர் இதனை மாற்றி அமைக்கிறார் என்பார் அ.பாண்டுரங்கன்.[62]

தமிழ்க் காப்பிய ஆசிரியர்கள் பின் நடக்கப்போகும் துன்ப விளைவுகளை முன்பே குறிப்பால் உணர்த்துவார்கள். இது காப்பிய உத்திகளில் ஒன்றாகும். இங்ஙனமே பின் நிகழப்போகும் அவலத் திற்கேற்ப சூழ்நிலையை மாற்றம் செய்கின்றார் கம்பர்.

2. கைகேயி, தயரதன் முன்னிலையிலேயே இராமன் பதினான்கு ஆண்டுகள் காடாள வேண்டும், பரதன் நாடாள வேண்டும் என்ற ஆணையை இராமனிடத்துத் தெரிவிப்பதாக வான்மீகம் கூறும்.[63]

தசரதனை, இராமன் நேரில்காணும் வாய்ப்பு ஏற்படா வண்ணம் கைகேயி தானே முற்பட்டு வந்து இராமனிடம்.

**ஆழி சூழ் உலகம் எல்லாம் பரதனே ஆள, நீ போய்த்**
**தாழ் இரும் சடைகள் தாங்கித் தாங்கருந்தவம் மேற்கொண்டு,**
**பூழி வெம் கானம் நண்ணிப் புண்ணியத் துறைகள் ஆடி,**
**ஏழ் இரண்டு ஆண்டின் வா என்று இயம்பினன் அரசன்**

என்றாள்.[64] என்று கூற, இராமன் மகிழ்ந்து உடன் விடைபெற்றுப் புறப்பட்டதாக அமைத்துள்ளார் கம்பர்.

தந்தையையும் மகனையும் சந்திக்காது கம்பர் காட்டியுள்ளதில் மகனைக் கண்டும் பேசாமல் கிடந்த வான்மீகி தயரதனைவிடக், கம்பர் காட்டும் தயரதன் உயர்ந்தவனாக எண்ணமுடிகிறது. மேலும் தயரதனை ஒத்த ஓர் அன்புத் தந்தை இதனைக் கேட்டுக் கொண்டிருத்தல் உளவியலுக்குப் பொருந் தாமையை உணர்ந்த கம்பர், கைகேயி காடேகுமாறு இராமனிடம் கூறிய சூழலை மாற்றி அமைத்துள்ளார் என்பதும் புலப்படுகிறது. இக்கருத்தையே அ.பாண்டுரங்கனும், தகடூரானும் கொண் டுள்ளனர்.[65]

3. இராமன் தான் காடேகப் போகும் செய்தியைக் கோசலையிடம் உடன் தெரிவிப்பதாக வான்மீகி கூற,[66] கம்பர் தாய்க்கும் மகனுக்கும் இடையே நடக்கும் உரையாடல் சூழலை மாற்றியமைக்கின்றார்.

வான்மீகி இராமன், கோசலையிடம் உனக்கும், சீதைக்கும், இலக்குவனுக்கும் வேதனை தரக்கூடிய துன்பம் வந்திருப்ப தாகவும், அதனால் தண்டகாரண்யத்திற்குச் சென்று முனிவர்கள் பரப்பிய தருப்பையில் பதினான்கு ஆண்டுகள் தவம் செய்ய வேண்டியவனாக இருப்பதாகவும், பரதன் நாடாளப் போவதாக வும் கூறக் கேட்ட கோசலை வெட்டுண்ட மரத்தைப் போல வீழ்ந்தாள் எனப் படைத்துள்ளார்.

கம்பனில், இராமன் தோற்றத்தைக் கண்ட கோசலை நெடுமுடி சூட இடையூறு உண்டோ என்று வினவினாள். இராமன்,

. . . . . . . . . நின் காதல் திருமகன்,

பங்கம் இல் குணத்து எம்பி பரதனே

துங்க மாமுடி சூடுகின்றான் என்றான்[67]

என்று கூறக்கேட்ட கோசலை கலக்கம் இன்றி,

முறைமை அன்று என்பது ஒன்று உண்டு மும்மையின்

நிறை குணத்தவன் நின்னினும் நல்லனால்,[68]

எனவும்,

. . . . . . . . . . . . . . மன்னன் ஏவியது

அன்று எனாமை மகனே உனக்கு அறன்

நன்று நும்பிக்கு நானிலம் நீ கொடுத்து

ஒன்றி வாழுதி ஊழிபல[69]

எனவும் கூறி வாழ்த்துகின்றாள். கோசலை கூற்றால் பரதன் நாடாள இசைவு கிடைத்துவிட்டது என்பதை உணர்ந்த இராமன்,

நாயகன் எனை நல் நெறி உய்ப்பதற்கு

ஏயது உண்டு ஓர் பணி . . . . . . . . . .[70]

எனவும்,

ஆண்டு ஓர் ஏழினொடு ஏழ் அகன் கானிடை

மாண்ட மாதவரோடு உடன் வைகிப்பின்

மீண்டு நீவரல் வேண்டும் . . . . . . . . . .[71]

எனவும் கூறினன். இதனைக்கேட்ட கோசலை பலபடப் புலம்பு கின்றாள். இராமன் அவள் துயரத்தை நீக்க,

பொய்த் திறத்தினன் ஆக்குதியோ? - புகல்-

மெய்த்திறத்து நம் வேந்தனை, நீ? என்றான்[72]

என்று கூறி, கோசலை ஒன்றும் பேச இயலாதவளாய் இருக்கின் றாள். இங்ஙனம் பரதன் நாடாளுவதையும், தான் காடாளு வதையும் படிப்படியாக வாக்காலும், செயலாலும் கோசலையின் மனநிலை அறிந்து உணர்த்துவதாகக் கம்பர் அமைத்துள்ளார். இல்லையாயின் பேரதிர்ச்சியால் கோசலைக்குத் துன்பம் நேரிட

லாம் என்பதைக் கம்பர் தம் மனத்தில் கொண்டவராகவே இராமன் பேசும் சூழலைப் படைக்கின்றார்.

தாய்க்கும் மகனுக்கும் நடக்கும் உரையாடலின் சூழலை மாற்றியிருப்பது இராமனின் உலகியலறிவையும், நூலறிவையும், நுண் அறிவையும் புலப்படுத்துவதாகவும், கோசலையின் வேற்று மையற்ற அன்பையும், அரசியல் அறிவு, அறநூல் கொள்கை இவற்றை வெளிப்படுத்துவதாகவும் அமைகிறது இச்சூழ்நிலை மாற்றம். இதனையே அ.அ.பதிப்பும் கூறுகின்றது.[73]

4. பரதன் தன் தந்தையை அவர் மாளிகையில் காணாது, தன் தாய் கைகேயியின் அந்தப்புரத்தில் தங்கிருப்பார் என எண்ணித் தேடிச் சென்றதாக வான்மீகம் கூறுகிறது.[74] கம்பர், பரதன் தந்தையைத் தேடிக் கொண்டிருக்கும் வேளையில் கைகேயி, பரதனை அழைத்து வருமாறு தோழியை அனுப்பியதாக மாற்றி அமைக்கின்றார்.[75]

கைகேயி தான் வரத்தால் பெற்ற அரசை ஆளும் பொருட்டு பரதன் வருகையை விழைவுடன் எதிர்பார்த்துக் கொண் டிருந்தாள். அவளின் ஆர்வத்தைப் புலப்படுத்த வேண்டியே கம்பர் இம்மாற்றத்தை அமைத்துள்ளார் என்பது குறிப்பிடத்தக்கதாகும். இக்கருத்தையே அ.ப.பதிப்பும் கூறுகிறது.[76]

5. பரதன், இராமனைக் காணப் பெரும்படைசூழ கங்கைக் கரையை அடைந்தான். அதனை அறிந்த குகன் ஐயுற்றுத் தன் படைகளைத் தென்கரையில் இருக்குமாறு ஆணையிட்டு, தான் வடகரையை அடைந்தான். அப்போது சுமந்திரர் குகனை பரதனுக்கு அறிமுகப்படுத்தியதாக வான்மீகம் கூறும்.[77]

கம்பர் இதனை மாற்றி, குகன் எதிர்க்கரையில் நிற்கும் போதே சுமந்திரர் குகனைப் பற்றிப் பரதனுக்குக் கூறியதாகவும், பரதன் தவக்கோலத்தோடு எதிர்க்கரையில் நிற்பதைக் கண்ட குகன் தன் கையிலிருந்த வில் நழுவ செயலற்று,

**என் பெருமான் பின் பிறந்தார் இழைப்பாரோ பிழைப்பு**[78]

என்று கூறி, பரதனைக் காண வந்ததாகவும் படைத்துள்ளார். கம்பர் இவ்வாறு மாற்றி அமைத்ததால் இராமன் மீது குகனுக்கு உள்ள

பக்தி பரதன் மீதும் பாய்வதைக் காணலாம் என்பார் அ.அருணகிரி.[79]

6. இராமனை மீட்டுவரக் காடு சென்ற பரதனும் இராமனும் சந்திக்கின்றார். சந்தித்த உடனேயே பரதன் அரசாட்சி புரிவதாக எண்ணிய இராமன் அவனிடம் அரச நீதிகளை அறிவுறுத்துவதாக வான்மீகி படைக்கின்றார்.[80]

இச்சந்திப்பில் பொருத்தமின்மையைக் கண்ட கம்பர், பிரிந்த சகோதரர்கள் சந்தித்தால் அந்த சூழலில் என்ன நிகழுமோ அக்காட்சியைப் படைக்கின்றார்.

இராமனைச் சந்திக்க வரும் பரதன் தோற்றத்தைக் கண்டு அவன்மீது கொண்ட ஐயத்தை நினைத்து இலக்குவன்,

**எல் ஒடுங்கிய முகத்து இளவல் நின்றவன்**
**மல் ஒடுங்கிய புயத்தவனை வைது எழும்**
**சொல்லொடும் சினத்தொடும் உணர்வு சோர்தர,**
**வில்லொடும் கண்ணில் நீர்நிலத்து வீழவே**[81]

என வருத்தமுற்றுக் கண்ணீர் வடித்தான். பரதன், இராமனின் திருவடியில் வணங்க, அவன் தோற்றம் கண்ட இராமன் கண்ணீர் பெருகத் தழுவிக் கொண்டான். பின் தந்தை இறந்தமையை அறிந்த இராமன் மயங்கி வீழ்ந்து புலம்ப வசிட்டர் ஆறுதல் கூறினார். இவ்வாறு உடன் பிறப்புகளின் சந்திப்பைப் பாசத்தின் வெளிப்பாடாகத் துன்பச் சூழலாக மாற்றம் செய்கிறார் கம்பர்.[82]

உடன் பிறப்புக்களின் சந்திப்பை மனங்கசிந்து கண்ணீர் சிந்தும் காட்சியாகவே காட்டுகின்றார். இயல்பான போக்காக எந் நிலையில் எச்சந்திப்பு ஏற்பட்டால் என்ன நடக்குமோ அதனைத் தொட்டுக்காட்டி உள்ளத்தை ஈர்த்துவிடுகின்றார் கம்பர் என்பார் தகடூரான்.[83]

### காலமாற்றம்

வான்மீகத்தில் பின்னர் நடக்கும் நிகழ்ச்சியை முன்னர் நிகழ்வதாகவும், முன்னர் நடந்த நிகழ்ச்சியைப் பின்னர் நிகழ்வ தாகவும் கம்பர் மாற்றம் செய்தல் காலமாற்றம் ஆகும். இதனைப்

பின் நிகழ்ச்சியை முன்னே அமைத்தல், முன் நிகழ்ச்சியைப் பின்னே அமைத்தல் என இருவகைப்படுத்தலாம்.

**பின் நிகழ்ச்சியை முன்னே அமைத்தல்**

1. இராமனுடன் காடு சென்ற சுமந்திரன் திரும்பி வந்து இராமன் காடு புகுந்ததைத் தயரதனிடத்துக் கூறினான். அது கேட்ட தசரதன் துன்பமுற்றுக் கோசலையிடம் தாம் முன் செய்த தீவினையைக் கூறினான். யானை வேட்டைக்குச் சென்றபோது முனிவர் மகன் நீர் முகந்த ஓசையை யானை என நினைத்து அம்பெய்து கொன்றுவிட்டேன். மகன் இறந்ததைக் கேட்ட அவன் பெற்றோர்கள் எங்களைப் போன்று நீயும் புத்திர சோகத்தால் இறப்பாய் எனச் சாபமிட்டனர் என்று கூறியதாக வான்மீகி படைக்கின்றார்.[84]

கம்பர், இராமன் காடேகுவதற்கு முன்னரே தயரதன்,

**பொன் ஆர் வலயத் தோளான் கானோ புகுதல் தவிரான்**
**என் ஆருயிரோ அகலாது ஒழியாது இது, கோசலை கேள்**
**முன்னாள் ஒரு மாமுனிவர் மொழியிச் சாபம் உளது என்று**
**அந்நாள் உற்றது எல்லாம், அவளுக்கு அரசன் அறைவான்**[85]

என்று கோசலையிடத்துக் கூறியதாக மாற்றம் செய்கின்றார்.

இராமன் காடுபுகுந்த செய்தி கேட்ட பின்னும் தயரதன் உயிருடன் இருந்து இவ்வரலாற்றையெல்லாம் நினைவுகூர்ந்து கூறினான் என்பதைக்காட்டிலும், இவ்வரலாற்றைத் தயரதன் முன்னரே கூறினான் என்றும், சுமந்திரன் வந்து இராமன் காடு புகுந்ததைக் கூறிய போதே ஆவிபோனான் என்றும் கம்பர் மாற்றி அமைத்தது சிறப்புடையதாகும். தசரதனுடைய பிரிவாற்றாமையை நன்கு புலப்படுத்துவதாக அமைத்திருக்கின்றது இம்மாற்றம் என்கிறது அ.ப.பதிப்பு.[86]

2. இராமன் காடேகிச் சென்று, குகன் உதவியால் கங்கையைக் கடந்து சித்திரக்கூடம் நோக்கிப் புறப்பட்டபோது உடன் தேரோட்டி வந்த சுமந்திரனிடத்து அயோத்தி செல்லும்படி விடைகொடுத்தான். சுமந்திரன் சிருங்கிபேரத்தில் சிலநாள் தங்கிக்

குகன் தூதுவர்கள் மூலம் இராமன் சித்திரகூடம் சேர்ந்த செய்தியை அறிந்தபின்னே அயோத்திக்குத் திரும்பியதாக வான்மீகம் கூறும்.[87]

கம்பனில், இராமன் வனம் புறப்பட்ட அன்றிரவே சோலையில் தங்கியிருந்தபோது தம்மைத் தொடர்ந்து வரும் மக்களை மீண்டும் நாட்டுக்கு அனுப்ப வேண்டி, நள்ளிரவில் சுமந்திரனை அயோத்திக்குச் செல்லும்படி விடைகொடுத்தனுப்ப, அவனும் அன்றிரவே அயோத்தியை அடைந்ததாகக் காணப் படுகிறது.[88] வான்மீகியில், பின்னர் இராமனிடத்தில் சுமந்திரன் விடைபெற்றுத் திரும்பும் நிகழ்ச்சி, கம்பனில் முன்னர் நிகழ்வதாக மாற்றப்படுகிறது.

இராமன் காடு செல்ல, தயரதன் பிரிவாற்றாமையால் துன்புற்று வருந்தினான். நாட்டைவிட்டுப் பிரிந்த இராமன் தேரோட்டி வந்த சுமந்திரனுக்கு விடைகொடுத்தனுப்ப, அன்றி ரவே அயோத்தி அடைந்து, தயரதனிடம் இராமன் காடு சென்ற தைக் கூறக்கேட்ட உடன் தயரதன் உயிர் நீங்கியது.[89] உயிர் வாழாது உடன் தயரதன் இறக்குமாறு கம்பர் செய்யும் மாற்றம் தயரதன் இராமன் மேல் கொண்ட அன்பினை வெளிப்படுத்து வதாக அமைகிறது.

வான்மீகி இராமனுடன் காட்டிற்குச் சென்ற மக்கள், இராமனைக் காணாது துன்புற்று தயரதன், இறப்பதற்கு முன்பே அயோத்தியை அடைந்ததாகக் கூறுவார்.[90] கம்பர், சுமந்திரன் அன்று இரவே இராமனிடம் விடைபெற்று அயோத்திக்குச் செல்வதால் இராமன் மீண்டும் நாடு சென்றான் என்று மகிழ்வுடன் மக்கள் சென்றதாகவும், அயோத்தியை அடைந்த அவர்கள்,

**புக்கார் அரசன் பொன்னுலகம் போனால் என்னும்**
**பொருள் கேட்டார்**
**உக்கார் நெஞ்சம் உயிர் உகுத்தார் உற்றது எம்மால்**
**உரைப்பஅரிதால்**
**தக்கான் போனான் வனம் என்னும் தகையும்**
**உணர்ந்தார் மிகை ஆவி**
**அக்காலத்தே அகலுமோ? அவதி என்று ஒன்று உளதானால்**[91]

என்று அறிவதால்; அம் மக்கள் அடைந்த துன்ப உணர்ச்சியை மிகுதிப்படுத்துவதாக இம்மாற்றம் அமைகிறது.

3. பரதன் இராமனைக் காண வரும்போது, இராமன் சித்திரக்கூடத்தின் இயற்கை வளங்களைச் சீதைக்குக் காட்டுவதாக வான்மீகம் கூறும்.[92] கம்பர் இதனைமாற்றி, இராமன் முதலான வர்கள் சித்திரகூடத்திற்கு வந்தபோதே இயற்கை எழில்களைச் சீதைக்குக் காட்டி மகிழ்ந்ததாக அமைக்கின்றார்.[93]

கேகய நாட்டிலிருந்து அயோத்தி வந்த பரதன், தந்தை இறந்தமையையும், தன்னால் தமையன் காடு செல்ல நேரிட்ட தையும் நினைத்து கண்ணீர் வடித்து, தன்னால் நேர்ந்த பழியைப் போக்கும் பொருட்டு இராமனைக் காண அவல நிலையில் காடு நோக்கிச் சித்திரகூடத்திற்கு வரும்போது, இராமன் சித்திர கூடத்தின் இயற்கை வளங்களைக் கண்டு மகிழ்ந்து சீதைக்குக் காட்டும் நிகழ்ச்சியின் பொருத்தமின்மையை உணர்ந்த கம்பர், பின்னர் நிகழும் இந்நிகழ்ச்சியை முன்னர் நிகழ்ந்ததாக மாற்றம் செய்கின்றார் கம்பர்.

**முன் நிகழ்ச்சியை பின்னே அமைத்தல்**

1. தந்தையின் இறுதிக் கடன்களை முடித்த பரதன், இராமனை அழைத்துவரக் காடு செல்லும் வழியே திருத்தம் செய்யுமாறு கட்டளை இட்டதாக வான்மீகம் கூறும்.[94]

தயரதனுக்குச் செய்ய வேண்டிய சடங்குகளை முடித்த பின்னர் வசிட்டரும், அமைச்சர்களும் பரதனை நாடாளுமாறு வேண்ட, மறுத்த பரதன் தான் இராமனை அழைத்துவரக் காடு செல்ல இருப்பதைத் தெரிவித்தான். பின்னரே கம்பர் வழி யமைப்பைப் பற்றி,

> **பெருந்திரை நதிகளும், வயலும், பெட்புறு**
> **மரங்களும், மலைகளும், மண்ணும், கண உறத்**
> **திருந்தலில், அயோத்தி ஆம் தெய்வ மாநகர்**
> **அருந்தெடு ஒத்தது அப்படை செல் ஆறு அரோ**[95]

என்று திருந்தலில் என்று பேசுவதாக அமைக்கின்றார்.

வான்மீகத்தில் வசிட்டரும் அமைச்சர்களும் பரதனைச் சந்தித்து நாடாள வேண்டுவதற்கு முன்னால் இங்ஙனம் கூறுவது, பரதன் தன்னிச்சையாகச் செயல்படும் தன்மை உடையவன் என்பதனைக் காட்டும் என்பதால் பின் நிகழ்வதாக மாற்றம் செய்கிறார் கம்பர்.

2. பரதன் தந்தைக்கு இறுதிக்கடன் செய்து முடித்தபின், இராமன் காடு சென்றமையை நினைத்துத் துன்புற்றான். அப்போது, கூனி தன்னை ஒப்பனை செய்து கொண்டு சென்ற தனைக் கண்ட வாயில் காவலன் அவளைப் பிடித்து வந்து சத்துருக் கனிடத்துக் காட்ட, அவன் கூனியைக் கொல்ல முயன்றபோது பரதன் தடுப்பதாக வான்மீகம் கூறும்.[96]

பரதன் காடு செல்வதற்கு முன்னால் நிகழும் இந்நிகழ்ச்சி யைக் கம்பர் தம் காப்பியத்தில் பின்னால், பரதன் காடு செல்லும் போது நிகழ்வதாக,

**மந்தரைக் கூற்றமும், வழிச்செல்வாரொடும்**
**உந்தியே போதல் கண்டு, இளவல் ஓடிஆர்த்து,**
**அந்தரத்து ஏற்றுவான் அழன்று, பற்றலும்,**
**சுந்தரர் தோளவன் விலக்கிச் சொல்லுவான்**[97]

என்று மாற்றி அமைக்கின்றார்.

இராமன் காடு புகுவதற்குக் காரணமான கூனியே இராமனைக் காட்டிலிருந்து அழைத்து வரும் வஞ்சகச் செயலைச் செய்வதாகக் காட்டிச் சத்துருக்கனின் கோபம் மிகுவதற்கு வழி வகுத்துள்ளார் கம்பர். மேலும் முன் இராமனுடைய இளமை நிகழ்ச்சியை மனத்தில் கொண்டிருந்து கலகமூட்டிய கூனியும் அப்பகையை நீங்கி இராமனை அழைக்க உடன் வந்தாள் என்று காட்டவும் இந்நிகழ்ச்சியைக் கம்பர் இடமாற்றி அமைத்திருத்தல் வேண்டும் என்பதும் புலனாகிறது.

## இடமாற்றம்

1. வான்மீகியில் ஓர் இடத்தில் நிகழும் நிகழ்ச்சியை, கம்பர் தம் காப்பியத்தில் மற்றோர் இடத்தில் நிகழ்வதாக மாற்றம் செய்வது இடமாற்றம் ஆகும்.

இராமன் காடாளச் செல்வதற்கு முன் அந்தணர்களுக்குக் கோதானம் செய்வதாக வான்மீகி கூறியுள்ளார்.[98] கம்பர், இதனை இங்குக் கூறாது, சுந்தர காண்டத்தில் காட்சிப் படலத்தில் சீதை அசோக வனத்தில் சிறையிலிருந்தபோது இராமனைக் குறித்த பழைய நினைவுகளை நினைத்து வருந்தியபோது,

**பரித்த செல்வம் ஒழியப் படரும்நாள்,**
**அருத்தி வேதியர்க்கு ஆன்குலம் ஈந்தவன்**
**கருத்தின் ஆசை கரைஇன்மை கண்டுஇறை**
**சிரித்த செய்கை நினைந்து அழும் செய்கையாள்[99]**

என நினைத்து அழுததாக இடமாற்றம் செய்கின்றார். இராமன் காட்டிற்குச் செல்லப் போகின்றான் என்ற துயரம் அயோத்தி முழுதும் நிலவியபோது அந்தணர்களுக்குப் பொருள்களை வழங்கினான் என்பது சிறப்பாகாது. எனவே பின் சீதை நினைத்து வருந்தியதாக மாற்றி இராமன் செயலுக்கு ஏற்றம் தருகிறார் கம்பர்.

2. அயோத்தியிலிருந்து காடு நோக்கிச் சென்ற இராமன் இடையில் குறுக்கிட்ட தமசா நதிக்கரையில் தங்கியதாக வான்மீகி குறிப்பிடுகின்றார்.[100] கம்பர், முனிவர்கள் வசிக்கும் சோலையில் தங்கியதாக மாற்றம் செய்கின்றார்.[101]

இராமன் மேற்கொண்ட தவவாழ்க்கைக்கு ஏற்ப, அவன் காட்டில் தங்கிய இடங்களை எல்லாம் முனிவர்களின் இருப்பிடமாகவே படைத்துள்ளார் கம்பர். அவ்வகையிலேயே இவ்விடத்திலும் முனிவர்கள் இருப்பிடத்தில் தங்கியதாக இடமாற்றம் செய்துள்ளார்.

3. குகன் பரதனிடம், சடைதரித்து மரவுரியுடுத்த இராமன் தவக்கோலத்துடன் வனம் சென்றமையைக்கூற, அதுகேட்ட பரதன் தானும் அவ்வாறே தவக்கோலம் கொள்ள நிச்சயித்ததாக வான்மீகம் கூறும்.[102]

கங்கையில் நடக்கும் இந்நிகழ்ச்சியைக் கம்பர் அயோத்தியை விட்டுப் பரதன் புறப்பட்டபோது,

**இங்ஙனம் நெடும் படை ஏக, ஏந்தலும்**
**தன்னுடைத் திரு அரைச் சீரை சாத்தினான்[103]**

என்று அயோத்தியிலேயே தவக்கோலம் கொண்டதாக இடமாற்றம் செய்கின்றார்.

கம்பரின் இம்மாற்றத்தால் பரதன், இராமன் மேல் கொண்ட பக்தியினை அறியமுடிகிறது. மேலும் பரதன் கங்கைக் கரையில் நிற்கும்போது அவனது தவக்கோலத்தைக் கண்ட குகன், நம்பியும் என் நாயகனை ஒக்கின்றான்[104] என்று நினைப்பதற்கும் முன்பே வாய்ப்பளித்து குகனுடைய இராமபக்திக்கு பெருமை சேர்க்கும் வகையிலும் இம்மாற்றம் அமைகிறது.

4. பரதன் படைகளுடன் வர, வானில் தூசுப் படலம் எழுந்ததைக் கண்ட இராமன், இலக்குவனுக்குக் கூற அவன் உயரமான தேக்குமரத்தில் ஏறி, பரதன் வருவதைக் காண்பதாக வான்மீகி படைக்கின்றார்.[105]

இக்காட்சியினைக் கம்பர், இலக்குவன் நெடிய குன்றின் மேல் நின்று பார்ப்பதாக,

**எழுந்தவன் இளையவன், ஏறினான் நிலம்**
**கொழுந்து உயர்ந்து அனையது ஓர் நெடிய குன்றின்மேல்**
**செழும் திரைப் பரவையைச் சிறுமை செய்தஅக்**
**கழுந்து உடை வரி சிலைக் கடலை நோக்கினான்[106]**

என்று மாற்றம் செய்கின்றார். காட்டில் உயர்ந்துள்ள மரங்கள் மிகுதியாகும். அம்மரங்களில் ஏறிப் பார்ப்பதில் காட்சித் தெளிவு இருக்காது. மிகத் தொலைவில் வரும் படைகளைக் கண்டு கணக்கிடவும் இயலாது. அதைவிட நெடிய குன்றின் உச்சியிலிருந்து பார்க்கும்போது மறைப்புக்கு இடமின்றித் தெளிவாகக் காண முடியும். காட்சித் தெளிவிற்காகக் கம்பர் கண்ட மாற்றம் சிறப்பாக அமைவதாகும்.

மேலும், இராமன் முதலானோர் தங்கிய இடம் மரங்கள் அடர்ந்த காடு என்பதைவிட மலைவளம் நிறைந்த சோலைகளே என்பதால் அதனைக் கூறக் கம்பர் செய்த மாற்றமாகும்.

**கதை மாந்தர் மாற்றம்**

கம்பர் தம் காப்பியப் போக்கிற்கேற்ப, சில மாந்தர் கூற்றுக்களை வேறொரு மாந்தரின் கூற்றாகவும், சிலவிடங்களில்

கேட்போரையும், ஒருவரின் செயலை மற்றவரின் செயலாகவும் மாற்றி அமைக்கின்றார்.

**கூறுவோர் மாற்றம்**

1. தயரதன் அரசவையில் இராமனுக்கு பட்டம் சூட்டுவதைப் பற்றிக் கருத்துக் கேட்க, மக்கள் இராமனுடைய குணநலன்களைப் புகழ்ந்து பேசுவதாக வான்மீகம் கூறும்.[107] கம்பர் குலகுருவான வசிட்ட முனிவர் புகழ்ந்து கூறுவதாக மாற்றியுள்ளார்.[108]

சாதாரண மக்கள் புகழ்வதைக் காட்டிலும் குலகுருவான வசிட்ட முனிவர் புகழ்வது இராமனுடைய ஏற்றத்திற்குச் சிறப்பு சேர்க்கும் என்பதால் கம்பர் இங்ஙனம் மாற்றம் செய்துள்ளார் என்பது தெளிவாகிறது.

தவச் சான்றோராகிய வசிட்ட முனிவர் வாக்கால் இராமன் நல்லவன் என்று கூறக்கேட்டபொழுது தயரதன் அடைந்த மகிழ்ச்சிப் பெருக்கானது,

**ஈன்ற பொழுதிற் பெரிதுவக்கும் தன்மகனைச்**
**சான்றோன் எனக்கேட்ட தாய்**

என்ற வள்ளுவரின் குறளுக்குச் சான்றாகத் தயரதனின் பேருவகையை உயர்த்திக் காட்டுவதாக கம்பர் இம்மாற்றத்தினைச் செய்தார் என்கிறது அ.ப.பதிப்பு.[109]

2. தயரதன் தன் மகன் இராமனுக்கு அரச நீதிகளை உபதேசிப்பதாக வான்மீகம் கூற,[110] கம்பர், தயரதன் வேண்டுதலின்படி வசிட்டரே இராமனுக்கு அரச நீதிகளைக் கூறுவதாக மாற்றம் செய்துள்ளார்.[111]

அறம் கூறுவதற்குத் தயரதனைக் காட்டிலும் மறையோதுவித்த வசிட்டனே தக்கவன் என்பதால் கம்பர் செய்த மாற்றமாக கொள்ளலாம். இதனையே அ.ப.பதிப்புக் கூறுவது குறிப்பிடத் தக்கதாகும்.[112]

3. சுமந்திரன், தயரதனிடம் சென்று, அவர் உறங்குவதாக எண்ணிப் புகழ்மொழிகள் கூறி எழுப்ப, அவனோ வழக்கத்திற்கு மாறாகச் சினம் கொண்டான். அப்போது கைகேயி, இராமனை

அழைத்து வரச் சுமந்திரரைப் பணிப்பதாக வான்மீகம் கூறும்.[113] கம்பரில் கைகேயி சுமந்திரனிடம் கூறுவதாக அமையாமல் ஏவல் மகளிர் கூறுவதாக மாற்றம் செய்கின்றார்.[114]

சுமந்திரன் கைகேயியின் மாளிகைக்குச் சென்ற தயரதனைக் காண்பது பண்பற்ற செயல் என்பதாலும், முடிசூட்டு விழா தடைப்படுவதற்கானச் சூழலைத் தெளிவுற உணர்ந்துகொள்ள ஏதுவாக அமையும் என்பதாலும் கம்பர் தம் காப்பிய ஓட்டத்திற்கு ஏற்ப, கைகேயியின் ஏவல் மகளிர் கூற்றாக மாற்றம் செய்கின்றார்.

4. பரதன், இராமனை நாடாளுமாறு வற்புறுத்தி அழைத்தும் இராமன் தந்தையின் ஆணையை நிறைவேற்றுவதில் உறுதியாக இருந்தான். பரதன், தானும் காட்டில் தங்கப் போவதாக உறுதியாகக் கூற, இருவரின் நிலையையும் கேட்ட முனிவர்கள், இராமன் தந்தையின் கட்டளைப்படி பதினான்கு ஆண்டுகள் காடாளவும், பரதன் நாடாளவும் கூறியதாக வான்மீகம் கூறும்.[115] கம்பர் முனிவர்கள் கூற்றைத் தேவர்கள் கூறுவதாக மாற்றம் செய்கின்றார்.[116]

தேவர்கள் கூறுவது அவருடைய காப்பிய நோக்கிற்கு உறுதுணையாகின்றது என்பார் அ.பாண்டுரங்கன். அரக்கர்களால் தேவர்கள் படும் இன்னல்களை நீக்குவதற்குத் திருமாலே இராமனாகத் திருஅவதாரம் செய்தான் என்பது கம்பர் காப்பியத்தில் பொதித்த பொருள். தயரதன் மகப்பேறில்லாது வருந்தியபோது,

கொலைதொழில் அரக்கர்தம் கொடுமை தீர்ப்பென் என்று
உலைவுறும் அமரருக்கு உரைத்த வாய்மையை[117]

எனத் திருமால் தேவர்களுக்கு அளித்த உறுதியைச் சிந்தித்துத் தயரதனை, புதல்வரை அளிக்கும் வேள்வி செய்யத் தூண்டினான் என்று திருஅவதாரப் படலத்தில் கம்பர் கூறியுள்ளார். பரதன், இராமனை அயோத்திக்கு அழைத்துச் சென்றுவிட்டால் இராமனின் திருஅவதார நோக்கம் நிறைவேறாது என்றெண்ணியே தேவர்கள் ஒன்றுகூடி,

அவ்வழி இமையவர் அறிந்து கூடினார்,
இவ்வழி இராமனை இவன் கொண்டு ஏகுமேல்

**செவ்வழித்து அன்று நம் செயல் என்று எண்ணினார்,**
**கவ்வையர், விசும்பிடைச் சுழறல் மேயினார்**[118]

எனத் தயரதனின் கட்டளையை இராமன் நிறைவேற்ற வேண்டும் என்று தேவர்களே கூறியதாக அமைத்துள்ளார் கம்பர். முனிவர்கள் கூறுவதைவிடத் தேவர்கள் கூறுவதே சிறப்பு என்பதால் அங்ஙனம் மாற்றம் செய்துள்ளார்.

### கேட்போர் மாற்றம்

1. தயரதன், கைகேயியிடம் இராமனுக்கு இளவரசுப் பட்டம் சூட்டுவதைத் தடுத்து, காடாளக் காரணமான நீ எனக்கு உரிமை உடையவள் அல்லள் என்றும், உன் மகன் பரதன் எனக்கு இறுதிக் கடன்களைச் செய்ய உரிமை உடையவன் ஆகான் என்றும் கூறுவதாக வான்மீகம் கூறும்.[119] கம்பர் இதனை மாற்றி வசிட்டரிடம் தயரதன் கூறுவதாக அமைக்கின்றார்.[120]

இராமனுக்கு முடிசூட்ட வேண்டும் என்ற அரசவையின் முடிவையும், தயரதனின் விருப்பத்தையும் தன் வரத்தால் மாற்றியவள் கைகேயி. அத்தகையவளிடம் தான் இறந்த பிறகு தனக்குச் செய்ய வேண்டிய இறுதிக் கடன்களைப் பரதன் செய்வதற்கு உரிமையற்றவன் எனக் கூறுவதாக அமைப்பது ஏற்புடையதல்ல என்பதால் கேட்போரை மாற்றுகின்றார் கம்பர். வசிட்டர் குலகுரு என்பதாலும், தயரதனின் ஆணையை நிறைவேற்றும் வல்லமை மிக்கவர் என்பதாலும் தயரதன் வசிட்டரிடம் கூறுவதாக மாற்றுகின்றார் கம்பர்.

தயரதன் இறந்தபோது பரதனே இறுதிக்கடன் புரிவதாக வான்மீகி படைப்பதால் தயரதன் முன்பு கைகேயியிடம் கூறிய வாக்குறுதி காக்கப்படவில்லை என்பது தெளிவாகிறது. எனவே கம்பர் வசிட்ட முனிவரிடத்துக் கூறுவதாக மாற்றி அமைக்கின்றார். இவற்றால் தயரதன் இறந்தபோது இறுதிக்கடன் செய்யப் பரதனை அழைத்தபோது வசிட்டர்,

**என்னும் வேலையில், எழுந்த வீரனை,**
**அன்னை தீமையால் அரசன் நின்னையும்**
**துன்னு துன்பத்தால், துறந்து போயினான்,**
**முன்னரே என முனிவர் கூறினான்**[121]

என்று கூறி தடுத்து, சத்துருக்கனை இறுதிக்கடன் செய்யுமாறு கூறுகின்றார். கம்பரின் இக்கேட்போர் மாற்றம், காப்பிய முரண் பாட்டைப் போக்கவும், வசிட்டர் பண்பிற்கு ஏற்றம் அளிக்கவுமே யாகும் என்பது புலனாகிறது.

2. இராமன் சித்திரகூடத்திற்குச் செல்லும் வழியைப் பற்றி பரத்துவாச முனிவரிடம் கேட்டதாக வான்மீகம் கூறும்.[122] கம்பர் இதனைக் குகனிடம் கேட்டதாக மாற்றம் செய்கின்றார்.[123]

இராமன் குகனிடம் வழி கேட்டறிந்ததால்தான் வழியில் தான் செய்யும் சேவைச் சிறப்புகளை விவரித்துத் தன்னையும் உடன் அழைத்துச் செல்ல வேண்டினான். குகன், **பக்தியின் உயிர்ச்சயும் பரிவினன்** என்பதைக் காட்டுவதற்கு இந்த மாற்றம் பயன்பட்டது என்பார் அ.அருணகிரி.[124]

முனிவர்கள் தாங்கள் தவம் செய்வதற்கு ஏற்ற சூழல் வாய்ந்த இடங்களில் மட்டுமே வாழ்பவர்கள். அந்த இடங்களை மட்டுமே அறிந்து இருப்பார்கள். குகனோ வேடர்குலத் தலைவன், காட்டில் எல்லாப் பகுதிகளையும் அறிந்தவன், சீதையை அழைத்துச் செல்வதற்கேற்ற வழியைத் தெரிந்து கூறுவான் என்பதனால் கம்பர் கேட்போரை மாற்றியுள்ளார். மேலும் இராமனை விட்டுப் பிரியவிரும்பாத குகன் தானே கங்கையில் ஓடத்தைச் செலுத்தினான் எனப் படைத்துள்ளமையால் கங்கைக் கரையை அடைந்தவுடன் இராமன் குகனிடம் வினவியதாக மாற்றிப் படைத்துள்ளார் கம்பர் என்பதும் தெளிவாகிறது.

3. பரதன் கேகய நாட்டிலிருந்து அயோத்திக்கு மீண்டும் வரும்போது அந்நகரம் பொலிவிழந்து காணப்பட்டதைக் குறித்துத் தன் தேர்ப்பாகனிடம் கூறுவதாக வான்மீகம் கூறும்.[125] இதனைக் கம்பர் தன்னுடன் வந்த தம்பியாகிய சத்துருக்கனுக்குக் கூறியதாகக் கேட்போரை மாற்றி அமைக்கிறார் கம்பர்.[126]

பரதன் தேர்ப்பாகனுக்குக் கூறுவதினும், தன்னோடு ஒத்த சிறப்புடைய தன் தம்பிக்குக் கூறுவதே பொருத்தமாகும் எனக் கருதியும், சத்துருக்கன் பேச்சுக்கும் ஒரு வாய்ப்பாக அமைகிறது என்பதனாலும் கம்பர் மாற்றியுள்ளார். இதனையே அ.ப.பதிப்பும் கூறுகிறது.[127]

4. பரதன் பரத்துவாசரின் ஆசிரமத்துக்குச் சென்று வணங்கிப் புறப்படும்போது முனிவர் பரதனிடம் உடன் வந்த தேவியர்களைப் பற்றி வினவ, பரதன் தாயார் மூவரையும் அறிமுகப்படுத்துவதாக வான்மீகம் கூறும்.[128] கம்பர் இதனை, பரதன் தன் தாய்மார்களுடன் கங்கையைக் கடக்கும்போது, குகன் தாய்மார்களைப் பற்றி யார் என்று பரதனிடம் வினவுவதாக மாற்றுகின்றார்.[129]

முக்காலமும் உணர்ந்த முனிவராகிய பரத்துவாசர் பரதனிடம் தாய்மார்கள் பற்றி யார் என வினவுவது கைகேயியைத் தாழ்மைப்படுத்த வேண்டும் என்ற நோக்கத்திற்காக அமைகிறது. இது அவருடைய பெருமைக்கு இழுக்காகும் எனக் கருதியே கம்பர் அறியாமைமிக்க வேடனாகிய குகன் வினவுவதாக மாற்றம் செய்வது பொருத்தமாக அமைகிறது. இதனையே அ.பாண்டுரங்கனும் கூறுகிறார்.[130]

### செயல் மாற்றம்

1. கைகேயி தானே மரவுரிகளைக் கொண்டுவந்து கொடுப்பதாக வான்மீகம் கூற,[131] கம்பர் கைகேயியின் ஏவல் மகளிர் கொடுப்பதாக மாற்றம் செய்கின்றார்.[132]

இராமன் வனம் செல்லக் காரணமாயிருந்த கைகேயி கொடுமை உடையவளாயினும் மற்றவர்கள் முன்னிலையில் மரவுரிகளைக் கொடுப்பது பண்பாடற்ற செயலாகும் என்பதாலும் இராமன் கைகேயியிடம் முன்பே விடைபெற்றுச் சென்றதனால் மீண்டும் சந்திக்கும் வாய்ப்பு ஏற்படுவதை நீக்கவும், இராமனுடன் இலக்குவனும் உடன் இருப்பதால் மீண்டும் சினம் கொள்ள ஏதுவாகும் என்பதாலும் கம்பர் தம் காப்பியக் கட்டுக்கோப்பிற்கு ஏற்பக் கைகேயின் ஏவல் மகளிர் மரவுரியைக் கொண்டு வந்து கொடுப்பதாக மாற்றம் செய்கின்றார்.

2. வான்மீகத்தில் குகனுடைய பணியாட்கள் ஓடத்தினைச் செலுத்த இராமன் கங்கையைக் கடந்து சென்றதாகக் காணப்படுகிறது.[133] கம்பர், குகனை ஓடத்தினைச் செலுத்தியதாக மாற்றம் செய்கின்றார்.[134]

கம்பர் காட்டும் குகனிடம் நட்பின் இலக்கணத்தையும், காலமறிந்து செய்யும் உதவி மனப்பக்குவத்தையும் காணமுடி கின்றது என்பார் தகடூரான்.[135]

இராமனை மூலப்பரம்பொருளாக வடிக்கும் கம்பன் முதன் முறையாக அவன் அன்பர்கட்கு அருள் செய்யும் நிலையை விளக்கவே இம்மாற்றம் செய்கின்றார். ஓடம் செலுத்தும் போதே, குகன் தானும் இராமனுடன் உடன் உறைய வேண்டும் என்ற கருத்தை அறிவிக்கின்றான். முழு அன்பினில் விளைந்த அந்த வேண்டுதலை மறுக்கவும் முடியாமல், ஏற்றுக்கொள்ளவும் முடியாமல் இராமன் நிலை தடுமாறித் தன்னையே குகனுக்குத் தந்துவிடும் அற்புதத்தைக் கம்பர்,

**அன்னவன் உரை கேளா, அமலனும் உரைநேர்வான்,**
**என் உயிர் அனையாய் நீ இளவல் உன் இளையான் இந்**
**நல்நுதலவள் நின்கேள் நளிர்கடல் நிலமெல்லாம்**
**உன்னுடையது நான் உன் தொழில் உரிமையின் உள்ளேன்,**

**முன்பு உளெம் ஒரு நால்வேம், முடிவு உளது என உன்னா**
**அன்பு உள இனி நாம் ஓர் ஐவர்கள் உளர் ஆனோம்**

என்று நீயும் நானும் வேறில்லை என, குகனை இராமன் பேசுவ தாகப் படைக்கின்றார்.[136] எனவே குகனே ஓடத்தைச், செலுத்து வதாக மாற்றம் செய்கின்றார் கம்பர்.

### தொகுப்புரை

மேற்கூறப்பட்ட செய்திகளின் மூலம் கீழ்க்காணும் முடிவுகள் கிடைக்கப்பெறுகின்றன.

1. கம்பர், முன்னூலாகிய வான்மீகியில் கூறப்பட்ட கதைப் பகுதியிலிருந்து சிலவற்றைத் தம் காப்பிய நோக்கிற்கும், தம் காலச் சூழலுக்கும், தமிழ்ப் பண்பாட்டிற்கும் ஏற்ப மாற்றம் செய்துள் ளார். அயோத்தியா காண்டத்தில் கம்பர் செய்த மாற்றங்கள் எவையென வகைப்படுத்தப்பட்டுள்ளன.

2. கம்பர், கதை நிகழ்ச்சிகளில் சூழ்நிலையைத் தம் காப்பியத்திற்கேற்ப மாற்றம் செய்துள்ளார். அயோத்தியா காண்

டத்தில் அவர் செய்த சூழ்நிலை மாற்றங்கள் எவையெனவும், அதற்குரிய காரணங்களும் நிறுவப்பெற்றுள்ளன.

3. வான்மீகத்தில் பின்னர் நடக்கும் நிகழ்ச்சியை முன் நிகழ்வதாகவும், முன்னர் நடந்த நிகழ்ச்சியைப் பின்னர் நிகழ்வதாக வும் கம்பர் காலமாற்றம் செய்துள்ளார். அயோத்தியா காண் டத்தில் கம்பர் செய்த காலமாற்றங்களும் அதற்குரிய காரணங் களும் தெளிவாகக் கூறப்பட்டுள்ளன.

4. வான்மீகத்தில் ஓர் இடத்தில் நிகழும் நிகழ்ச்சியை, கம்பர் மற்றோர் இடத்தில் நிகழ்வதாகத் தம் காப்பியத்தில் மாற்றம் செய்துள்ளார். அயோத்தியா காண்டத்தில் செய்த் இடமாற்றங்களும் அதற்குரிய காரணங்களும் நுண்ணிதின் சுட்டப்பட்டுள்ளன.

5. கம்பர், தம் காப்பியப் போக்கிற்கேற்பச் சில மாந்தர் கூற்றுக்களை வேறொரு மாந்தரின் கூற்றாகவும், சிலவிடங்களில் கேட்போரையும், ஒருவரின் செயலை மற்றவரின் செயலாகவும் மாற்றி அமைக்கின்றார். இவ்வகையில் அயோத்தியா காண் டத்தில் கம்பர் செய்த மாற்றங்களும் அதற்குரிய காரணங்களும் எடுத்துக்காட்டி நிறுவப்பெற்றுள்ளன.

## குறிப்பு விளக்கம்

1. அ. பாண்டுரங்கன், காப்பிய நோக்கில் கம்பராமாயணம், ப.72.
2. வா. இராமா., அயோ. காண்., ச.1.
3. க. இராமா., க.க.ப., அயோ. காண்., மந்திரப் படலம், பா.30.
4. மேற்படி நூல்., பா.15, 16.
5. வா. இராமா., அயோ. காண்., ச.20, 26.
6. க. இராமா., க.க.ப., அயோ. காண்., நகர்நீங்குப் படலம், பா.2, வ.4.
7. வா. இராமா., அயோ. காண்., ச.21.
8. க. இராமா., க.க.ப., அயோ. காண்., நகர்நீங்குப்படலம், பா.18.

9. வா. இராமா., அயோ. காண்., ச.34.
10. க. இராமா., க.க.ப., அயோ. காண்., நகர்நீங்குப்படலம், பா.40.
11. தகடூரான்., கம்பன் ஓர் ஒப்பீடு., ப.150.
12. க. இராமா., க.க.ப., அயோ. காண்., கைகேயி சூழ்வினைப்படலம், பா.32, வரி.4-6.
13. மேற்படி நூல். பா.36.
14. வா. இராமா., அயோ. காண்., ச.34.
15. க. இராமா., க.க.ப., அயோ. காண்., நகர்நீங்குப்படலம், ப.174.
16. க. இராமா., அ.ப.ப., அயோ. காண்., முதற்பகுதி., ப.323.
17. ம.பொ.சிவஞானம், கம்பரும் காந்தியடிகளும், ப.26.
18. வா. இராமா., அயோ. காண்., ச.39.
19. க. இராமா., க.க.ப., அயோ. காண்., நகர்நீங்குப்படலம், பா.224, வரி.2.
20. மேற்படி நூல்., அ.ப.ப., அயோ. காண்., முதற்பகுதி, ப.323.
21. மேற்படி நூல்., க.க.ப., அயோ. காண். பா.222, வ.4.
22. வா. இராமா., அயோ. காண்., ச.50.
23. க. இராமா., க.க.ப., அயோ. காண்., குகப்படலம், பா.14.
24. அ.ச. ஞானசம்பந்தன், கம்பன் கலை, ப.192.
25. அ. அருணகிரி, கம்பன் காட்டும் தீராக்காதலன், ப.16.
26. க. இராமா., க.க.ப., அயோ. காண்., குகப்படலம், பா.29.
27. வா. இராமா., அயோ. காண்., ச.50.
28. க. இராமா., க.க.ப., அயோ. காண்., குகப்படலம், பா.11. வரி.3-4.
29. மேற்படிநூல். பா.12, வரி.2-4.
30. மேற்படி நூல். வனம்புகுபடலம், பா.43, வரி.3-4.
31. தகடூரான், கம்பன் ஓர் ஒப்பீடு., ப.153.

32. அ. அருணகிரி, கம்பன் காட்டும் இராக்காதலன், பக்.97-98.
33. க. இராமா., க.க.ப., அயோ. காண்., கங்கைகாண்படலம், பா.35, வ.4.
34. வா. இராமா., அயோ.காண்., ச.55
35. க. இராமா., க.க.ப., அயோ. காண்., வனம்புகுபடலம், பா.36.
36. மேற்படி நூல்., நகர்நீங்குபடலம், பா.147, வரி.1-2.
37. மேற்படி நூல்., வனம்புகுபடலம், பா.36
38. வா. இராமா., அயோ. காண். ச.52.
39. க. இராமா., க.க.ப., யுத்த. காண்., வீடணன் அடைக்கலப் படலம், பா.129.
40. மேற்படி நூல்., அயோ. காண்., வனம்புகுபடலம், பா.35., வ.3.
41. திருக்குறள், அதிகாரம் 26, 33.
42. மேற்படி நூல். 260.
43. க. இராமா., க.க.ப., அயோ. காண்., குகப்படலம், பா.15.
44. கு.திருமேனி., கம்பருக்குக் கதை கொடுத்தவர் வான்மீகரா? ப.109.
45. வா. இராமா., அயோ. காண். 4.72.
46. க. இராமா., க.க.ப., அயோ. காண்., பள்ளிபடைப்படலம், பா.61, 62, வரி.1-2.
47. ஆர்.டி.சீதாபதி, காரைக்குடி கம்பன் விழா மலர், ஒரு பானை சோற்றுக்கு ஒரு சோறு, ப.1.
48. வா. இராமா., அயோ. காண். ச.75.
49. க. இராமா., க.க.ப., அயோ. காண்., பள்ளிபடைப்படலம், பா.56, வரி.3-4.
50. வா. இராமா., அயோ. காண். ச.84.
51. க. இராமா., க.க.ப., அயோ. காண்., கங்கைகாண்படலம், பாட.25, 26, 27.

52. வா. இராமா., அயோ. காண். ச.85.

53. க. இராமா., க.க.ப., அயோ. காண்., கங்கைகாண்படலம், பா.32.

54. மேற்படி நூல்., வனம்புகுபடலம், பா.43, வரி.3-4.

55. வா. இராமா., அயோ. காண். ச.97.

56. க. இராமா., க.க.ப., அயோ. காண்., திருவடிசூட்டுபடலம், பா.45.

57. வா. இராமா., அயோ. காண். ச.102.

58. மேற்படி நூல்., சரு.94, 95.

59. க. இராமா.; க.க.ப., அயோ. காண்., திருவடிசூட்டுபடலம்.

60. வா. இராமா., அயோ. காண். ச.10.

61. க. இராமா., க.க.ப., அயோ. காண்., கைகேயி சூழ்வினைப்படலம், பாட.1-5.

62. அ. பாண்டுரங்கன்., காப்பிய நோக்கில் கம்பராமாயணம், ப.57.

63. வா. இராமா., அயோ. காண். ச.18.

64. க. இராமா., க.க.ப., அயோ. காண்., கைகேயி சூழ்வினைப்படலம், பா.111.

65. அ. பாண்டுரங்கன்., காப்பிய நோக்கில் கம்பராமாயணம், ப.58. தகடூரான்., கம்பன் ஓர் ஒப்பீடு, ப.148.

66. வா. இராமா., அயோ. காண். ச.20

67. க. இராமா., க.க.ப., அயோ. காண்., நகர்நீங்குபடலம், பா.3. வரி.2-4.

68. க. இராமா., க.க.ப., அயோ. காண்., நகர்நீங்கு படலம், பா.4, வரி.2-3.

69. மேற்படி நூல். பா.5

70. மேற்படி நூல். பா.6, வரி.3-4.

71. மேற்படி நூல். பா.7, வரி.2-4.

72. மேற்படி நூல். பா.14, வரி.3-4.

73. மேற்படி நூல். அ.ப.ப. அயோ. காண். முதற்பகுதி, பக்.325-326.
74. வா. இராமா., அயோ. காண். ச.72.
75. க. இராமா., க.க.ப., அயோ. காண்., பள்ளிபடைப்படலம், பாட.41-42.
76. மேற்படி நூல். அ.ப.ப. அயோ. காண்., இரண்டாம் பகுதி, ப.163.
77. வா. இராமா., அயோ. காண்., ச.84.
78. க. இராமா., க.க.ப., அயோ. காண்., கங்கைகாண்படலம், பா.30, வ.4.
79. அ. அருணகிரி., கம்பன் காட்டும் தீராக்காதலன், ப.95
80. வா. இராமா., அயோ. காண். ச.105.
81. க. இராமா., க.க.ப., அயோ. காண்., திருவடிசூட்டுப்படலம், பா.51.
82. மேற்படி நூல்., பாட.52-66.
83. தகடூரான்., கம்பன் ஓர் ஒப்பீடு, ப.157.
84. வா. இராமா., அயோ. காண்., ப.157.
85. க. இராமா., க.க.ப., அயோ. காண்., நகர்நீங்குபடலம், ப.72.
86. மேற்படி நூல். அ.ப.ப., அயோ. காண். முதற்பகுதி, ப.323.
87. வா. இராமா., அயோ.காண். ச.57.
88. க. இராமா., க.க.ப., அயோ. காண்., தைலம்ஆட்டுபடலம், பாட.17, 18, 54.
89. மேற்படி நூல். பா.59
90. வா. இராமா., அயோ.காண். ச.48.
91. க. இராமா., க.க.ப., அயோ. காண்., தைலம் ஆட்டு படலம், பா.84.
92. வா. இராமா., அயோ.காண். ச.94.
93. க. இராமா., க.க.ப., அயோ. காண்., சித்திரகூடபடலம், பாட.1-36.

94. வா. இராமா., அயோ.காண். ச.80.
95. க. இராமா., க.க.ப., அயோ. காண்., ஆறுசெல்படலம், பா.46.
96. வா. இராமா., அயோ.காண். ச.78.
97. க. இராமா., க.க.ப., அயோ. காண்., கங்கைகாண்படலம், பா.54.
98. வா. இராமா., அயோ.காண். ச.32.
99. க. இராமா., க.க.ப., அயோ. காண்., காட்சிப்படலம், பா.26.
100. வா. இராட ர., அயோ.காண். ச.45.
101. க. இராமா., க.க.ப., அயோ. காண்., பா.7.
102. வா. இராமா., அயோ.காண். ச.98.
103. க. இராமா., க.க.ப., அயோ. காண்., ஆறுசெல்படலம், பா.52, வரி.1-2.
104. மேற்படி நூல். கங்கைகாண்படலம், பா.30, வ.1.
105. வா. இராமா., அயோ.காண். ச.96.
106. க. இராமா., க.க.ப., அயோ. காண்., திருவடிசூட்டுபடலம், பா.26.
107. வா. இராமா., அயோ.காண். ச.2.
108. க. இராமா., க.க.ப., அயோ. காண்., மந்திரப்படலம், பாட.33-40.
109. மேற்படி நூல். அ.ப.ப. அயோ. காண்., முதற்பகுதி, ப.4.
110. வா. இராமா., அயோ.காண். ச.3.
111. க. இராமா., க.க.ப., அயோ. காண்., மந்தரைசூழ்ச்சிப் படலம், பாட.11, 14-29.
112. மேற்படி நூல்., அ.ப.ப. அயோ. காண்., முதற்பகுதி, ப.105.
113. வா. இராமா., அயோ.காண். ச.14.
114. க. இராமா., அயோ.காண்., கைகேயி சூழ்வினைப்படலம், பா.88.
115. வா. இராமா., அயோ.காண். ச.112.
116. க. இராமா., க.க.ப., அயோ. காண்., திருவடிசூட்டுபடலம், பாட.130-132.

117. மேற்படி நூல். திருஅவதாரப் படலம், பா.6. வரி.3-4.
118. மேற்படி நூல். திருவடிசூட்டுபடலம், பா.130.
119. வா. இராமா., அயோ.காண். ச.16, 42.
120. க. இராமா., க.க.ப., அயோ. காண்., நகர்நீங்குபடலம், பா.49.
121. மேற்படி நூல். பள்ளிபடைப்படலம், பா.130.
122. வா. இராமா., அயோ.காண். ச.55.
123. க. இராமா., க.க.ப., அயோ. காண்., குகப்படலம், பாட.37.
124. அ. அருணகிரி., கம்பன் காட்டும் திராக்காதலன், ப.94.
125. வா. இராமா., அயோ.காண். ச.71.
126. க. இராமா., க.க.ப., அயோ. காண்., பள்ளிபடைப்படலம், பாட.36-38.
127. மேற்படி நூல். அ.ப.ப. அயோ.காண். இரண்டாம் பகுதி.ப.163.
128. வா. இராமா., அயோ.காண். ச.92.
129. க. இராமா., க.க.ப., அயோ. காண்., கங்கைகாண்படலம், பா.64.
130. அ. பாண்டுரங்கன்., காப்பிய நோக்கில் கம்பராமாயணம், ப.56.
131. வா. இராமா., அயோ.காண். ச.37.
132. க. இராமா., க.க.ப., அயோ. காண்., நகர்நீங்கு படலம், பா.142.
133. வா. இராமா., அயோ.காண். ச.52.
134. க. இராமா., க.க.ப., அயோ. காண்., குகப்படலம், பா.34.
135. தகடூரான்., கம்பன் ஓர் ஒப்பீடு. ப.154.
136. க. இராமா., க.க.ப., அயோ. காண்., வனம்புகுபடலம், பாட.42, 43, வரி.3-4.

# அயோத்தியா காண்டத்தில் கம்பரின் படைப்பு

## தோற்றுவாய்

முன்னூலில் காணப்பெறாத புதிதாம் தன்மைகளைத் தம்நூலில் படைத்து மொழிதல் இலக்கியப் படைப்பாளிகளின் இயல்பு. இதனையே **படைத்தல்** (Creation) எனலாம். காப்பிய அமைப்புக்கிணங்க வான்மீகியில் காணப்பெறாத புதுமைகள் சிலவற்றைத் தம் காப்பியத்தில் படைத்துள்ளார். அவ்வகையில் அயோத்தியா காண்டத்தில் கம்பர் புதிதாகப் படைத்தவை எவையென கூறுவதாக அமைகிறது.

## அயோத்தியா காண்டத்தில் கம்பரின் படைப்பு

கம்பர் தம் காப்பிய நோக்கிற்கு ஏற்ப அயோத்தியா காண்டத்தில் கதை நிகழ்ச்சிகளையும், கூற்றுகளையும் புதிதாகப் படைக்கின்றார். இங்ஙனம் கம்பர் புதிதாகப் படைத்தவையை, கதைத்தலைவனின் புனிதத்தன்மையை விளக்கும் படைப்புகள், தமிழ் இலக்கிய மரபுகளை ஒட்டிய படைப்புக்கள், கட்டமைப்பு நிலையை விளக்கும் படைப்புக்கள் என மூவகைப்படுத்துவார் அ.பாண்டுரங்கன்.[1] இதனைக் கொண்டு இவ்வியலில் படைப்பு வகைப்படுத்தப்படுகிறது.



**கதைத்தலைவனின் புனிதத் தன்மையை விளக்கும் படைப்புகள்**

வான்மீகி தம் காப்பியத்தலைவனாகிய இராமனை மனிதருள் சிறந்தவனாகப் படைக்க, கம்பர் பரம்பொருளாகவே படைத்துக் காட்டுகின்றார். இவ்வாறு தாம் படைத்துக்கொண்ட காப்பிய நோக்கிற்கேற்பப் புதிதாம் தன்மைகளை அமைத்து, இராமனுடைய தெய்விகத்தன்மையை உயர்த்திக் காட்டுகின்றார் கம்பர்.

1. கைகேயி கேட்ட வரத்தால் தயரதன் துன்புற்று வருந்தினான். அதனைக் கேட்ட கைகேயி, சிபி என்பவன் சத்தியத்தைக் காப்பாற்றும் பொருட்டு, பருந்துக்கு அஞ்சித் தன்னிடம் அடைக்கலம் அடைந்த புறாவைக் காப்பாற்றுவதற்காக அப்புறாவின் எடைக்கு ஈடாகத் தானே தராசுத் தட்டில் அமர்ந்தான். அப்படிப் பட்ட மரபில் வந்த மன்னவன் நீ. முன்னர் வரத்தைக் கொடுத்து விட்டுப் பின்னர் வருந்துவது எங்ஙனம் என்று கேட்டதாகக் கம்பர் புதிதாக அமைத்துள்ளார்.

அரிந்தான் முன் ஓர் மன்னவன் அன்றே அருமேனி
வரிந்து ஆர் வில்லாய் வாய்மை வளர்ப்பான், வரம் நல்கிப்
பரிந்தால் என் ஆம் என்றாள். . . . . . . . .[2]

என்பது அப்பாடல் பகுதி. சிபி என்ற சோழன் மரபில் வந்தவன் தயரதன் எனக் கம்பர் படைத்துக் காட்டுவது, வாய்மையைக் காக்கும் பொருட்டு மன்னவன் தன்னையே ஈந்த செயலை வெளிப் படுத்துவதாக அமைகிறது. மேலும் காப்பியத் தலைவனாகிய இராமன் இத்தகைய மரபில் வந்தமையினால், வாய்மை தவறாதவனாக விளங்குவான் என்பதையும் இதன்மூலம் உணர்த்துகின்றார் கம்பர்.

2. இராமன், இலக்குவன், சீதை மூவரும் பரத்துவாச முனிவரிடம் விடைபெற்றுக் கொண்டு யமுனை நதியைக் கடந்து செல்கின்றனர். அவர்கள் செல்லும் வழியில் பாலை நிலம் இருந்ததெனக் கம்பர் புதிதாகப் படைத்து வருணித்துள்ளார்.[3]

இராமன் முதலானவர்கள் பாலை நிலத்தை அடைந்த போது அந்நிலத்தின் வெம்மையைச் சீதை தாங்கமாட்டாள் என

இராமன் நினைத்த அளவில், அவ்வெம்மை நீங்கிக் குளிர்ந்து காணப்பட்டதாகக் கம்பர் படைக்கின்றார்.

பாலகாண்டத்துள் விசுவாமித்திரர், இராம இலக்குவரை வேள்வியைக் காக்கும் பொருட்டு அழைத்துச் சென்றபோது பாலை நிலம் வந்துற்றது. இராம இலக்குவர் ஆற்றல் மிக்கவ ராயினும் சிறுவர்கள் ஆதலால் பாலையின் வெம்மையைத் தாங்க மாட்டார்கள் என்று நினைத்த முனிவர், அவர்கட்கு இரண்டு மந்திரங்களைக் கூறுமாறு கூறியவுடன் பாலைநிலம் குளிர்ந்ததாகக் கம்பர் படைத்துக்காட்டுவார்.[4]

மந்திரத்தால் பாலையைக் குளிர்வித்த விசுவாமித்திர முனிவருடைய தவநிலையிலும், நினைவால் குளிர்வித்த இராமனு டைய ஒழுக்கநிலை சிறந்தமையை வெளிப்படுத்தவே கம்பர் பாலைநில வருணனையைப் படைத்தாக அ.ப.பதிப்பு கூறும்.[5]

இராமன் காட்டிற்குச் செல்ல விடைகேட்டபோது சீதை தானும் உடன் வருவேன் என்றாள். இராமன் காட்டின் வெம்மையை எடுத்துக்கூற, **நின் பிரிவிலும் சுடுமோ பெருங் காடு** என்று உடன் சென்றாள், சீதை. இவற்றிற்கேற்பவும், பெருங் காட்டில் பாலைநிலம் இருத்தல் இயற்கையாதலினாலும் கம்பர் பாலைநிலத்தைப் படைத்துள்ளார். மேலும் படைத்தல், காத்தல் செய்கின்ற பரம்பொருளே இராமன் என்பதை உணர்த்த வேண்டிப் பாலை நிலத்தைப் படைத்து, இராமன் அதன் வெம்மையைக் குளிர்வித்ததாக அமைத்துள்ளமையும் எண்ணுதற்குரியதாகும்.

### தமிழ் இலக்கிய மரபுகளையொட்டிய படைப்புகள்

தமிழ் மக்களுடைய பண்பிற்கேற்பவும், தமிழ்நாட்டுச் சூழலுக்கேற்பவும் காப்பியத்தைப் படைத்து வழங்கியவர் கம்பர். எனவே தமிழ் இலக்கிய மரபுகளும் தம் காப்பியத்தில் அமைதல் வேண்டுமென்று கருதி அம்மரபுகளுக்கேற்ப முன்னூலில் கூறாதனவற்றைப் புதிதாகப் படைத்துக் கொண்டுள்ளார்.

1. இராமனுக்கு முடிசூட்டப் போகும் செய்தியை அறிந்த கூனி, கோபம் கொண்டு அவ்விழாவைத் தடுத்து இராமனைக் காட்டுக்கு அனுப்பச் சூழ்ச்சி செய்கின்றாள். தம் எண்ணத்தை

நிறைவேற்ற, கைகேயியை நாடுகின்றாள். இராமன்மீது கொண்ட கோபத்திற்குக் காரணங்கள் ஏதும் வான்மீகி கூறாதிருக்கக் கம்பர் தம் காப்பியத்தில்,

**பண்டை நாள் இராகவன் பாணி வில் உமிழ்**
**உண்டை உண்டதனைத் தன் உள்ளத்து உள்ளுவாள்**[6]

எனப் புதிதாக ஒரு காரணத்தைப் படைக்கின்றார். இராமன் இளமைக் காலத்தில் கையில் சிறு வில்லும் மண்ணுண்டையும் கொண்டு விளையாடிக் கொண்டு இருக்கையில், நீர்க்குடத்தோடு கூன்முதுகுடன் நடந்து சென்றவளின் முதுகில் இலக்கு வைத்து உண்டை எறிந்தான். கூனி கூன்நிமிர்ந்து குடத்தைக் கீழே விடுத் தமை கண்டு பிறர் நகைத்தனர். அவள் நாணி, எறிந்தவன் மன்னவன் மகனாதலின் யாதும் செய்யவியலாது காலம் கருதியிருந்தாள்.

உளஇயல் வழியில், சிறுவயதில் நமக்கு ஏதேனும் மனக் கசப்பு ஏற்பட்டால், அதை வாழ்நாள் முழுவதும் நம்மால் மறக்க முடிவதில்லை. நாளாக ஆக அந்தக் கசப்பு உணர்வு வெறுப்பாக வும் வளர்கிறது. அதுபோல் மண் உண்டை வீசிய அவமானமே கூனியின் நெஞ்சில் பகையாக அழுந்திவிட்டது. திருவரங்கத்தை வர்ணிக்கும்போது திருமழிசை ஆழ்வார்,

**கொண்டைகொண்ட கோதைமீது தேனுலாவு கூனிகூன்**
**உண்டைகொண் டரங்கவோட்டி உள்மகிழ்ந்த நாதனூர்**
**நண்டையுண்டு நாரைபேர வாளைபாய, நீலமே**
**அண்டைகொண்டு கெண்டைமேயும் அந்தணி ரரங்கமே**[7]

எனப் பாடுவார். கம்பருக்கு இந்தக் காரணம் உளவியல்படி பொருத்தமாகத் தோன்றியதால், இதைத் தக்க இடத்தில் பொதிந்துவிடுகிறார். இக்கருத்தையே பிரேமா நந்தகுமாரும் கூறுகின்றார்.[8]

இராமனும், கூனியின் பகைமையை அறிந்திருந்தான் என்பதைக் கம்பர் கிட்கிந்தா காண்டத்தில், இராமன் வாலியைக் கொன்று சுக்கிரீவனுக்கு அரசு கொடுத்து அறிவுரை கூறும் போது, கூனிக்குத் தான் இழைத்த கொடுமையால், அவள் தனக்கிழைத்த கொடுமையை,

சிறியர் என்று இகழ்ந்து நோவு செய்வன செய்யல்,மற்று, இந்
நெறி இகழ்ந்து. யானோர் தீமை இழைத்தலால், உணர்ச்சிநீண்டு
குறியதாம் மேனியா கூனியால், குவவுத் தோளாய்
வெறியன எய்தி, நொய்தின் வெந்துயர்க் கடலின் வீழ்ந்தேன்

எனக் கூறுவதாக அமைக்கின்றார். இவற்றின்மூலம் கூனிக்கு இராமன்மேல் தனிப்பட்ட பகைமை இருந்தமையை அறிய முடிகிறது.

மேலும், இராமனோடு போர் புரிந்து தோற்று வந்த இராவணன் மாலியவானிடம், இராமன் தன்னுடன் போரிட்ட போது மனைவியைக் கவர்ந்தவன் என்ற சினமின்றி மகிழ்வுடன் போரிட்டதை கூறினான். அப்போது,

எறிந்த போர் அரக்கர் ஆவி என் இலா வெள்ளம் எஞ்சப்
பறிந்த போது, என்னை அந்தப் பரிபவம் முதுகில் பற்றப்
பொறிந்த போது, அன்னான் அந்தக் கூனி கூன் போக உண்டை
தெறித்த போது ஒத்தது அன்றி, சினம் உண்மை தெரிந்ததுஇல்லை

என்று கூறுவதால், இராமன் உண்டைகொண்டு கூனியை அடித்த செய்தியை இராவணனும் அறிந்திருந்ததாகப் படைக்கின்றார் கம்பர். இராமன் தனக்கிழைத்த தீங்கிற்குத் தண்டனை அனுபவிக்க வேண்டும். அவன் பதினான்கு ஆண்டுகளுக்கு முன் தனக்கு ஊறு விளைத்தான். அப்பதினான்கு ஆண்டுகள் கூனி அத்துன்பம் போக்க வாய்ப்பற்று நொந்தாள். இப்போது இராமன் அப்பதினான்கு ஆண்டுகள் காட்டகத்து உழல வேண்டும் என்பது பகையாகப் பற்றிக்கொண்டது. ஆனால் பதினான்கு ஆண்டு என்பது எதற்கு என்று கைகேயி கேட்டால் அதற்கு விடை தனக் கிழைத்த தீங்கென்று கூறினால் அவள் அதனை ஏற்றுக்கொள்ள மாட்டாள். எனவேதான் இராமன் தாடகை என்ற பெண் கொலை புரிந்த பாவம் போக்கவே பதினான்கு ஆண்டுகள் என்று கூறுகின்றாள். இக்கூற்று வெளிப்படையானதன்று, கைகேயி உய்த்துணர்ந்தது என்பார் திருமேனி.[11]

பண்டையநாள் இராமன் பாணி வில்லுமிழ்
உண்டை உண்டதனைத் தன் உள்ளத்து உள்ளுவாள்[12]

என்று நினைத்து, கூனி தன் பழியைத் தீர்த்துக்கொள்வதாகக் கம்பர் படைக்கக் காரணம், கைகேயியைத் தூய சிந்தையுள்ள வளாக அவளின் பண்பை ஏற்றம் பெறச் செய்யவே ஆகும். கோசலை ஈன்றெடுத்த இராமனைக் கைகேயி தன் மகனாகவே வளர்க்கின்றாள். கூனி இராமனுக்கு முடிசூட்டப்போகும் செய்தியைக் கூறியபோது அவளுக்கு மணிமாலையைப் பரிசாக நல்குகின்றாள். மாறாகப் பரதன் முடிசூட வேண்டும் என்று நினைத்தாளில்லை. கூனி அவளிடம் முடிசூட்டலைப் பற்றிக் கருத்துக்கூறி நீ நல்லவள் அல்லள், என் மகன் பரதனுக்கும் நல்லவன் அல்லன் என்றும்,

**போதி என் எதிர்நின்று நின் புன் பொறிநாவைச்**
**சேதியாது இது பொறுத்தனென் புறம் சிலர் அறியின்,**
**நீதி அல்லவும் நெறிமுறை அல்லவும் நினைந்தாய்**
**ஆதி ஆதலின், அறிவிலி அடங்குதி என்றாள்[13]**

என்றும் கூறுகின்ற தூய சிந்தை உடையவளாகப் படைக்கிறார் கம்பர். இவற்றால் இராமன் காடாள இவளே முழுமுதற்காரணம் என்று கூறாது, தமிழ் இலக்கிய மரபையொட்டி, ஆழ்வார் அருளிய கூனி கூன் நிமிர்ந்த நிகழ்ச்சியைக் காரணமாகக் கொண்டு தக்க இடத்தில் பொதிந்துவிடுகின்றார் கம்பர்.

காப்பியத்தில் நடைபெறும் செயல்கள் அனைத்திற்கும், காரணத்தையும் படைத்து மொழிதல் என்பது இலக்கிய மரபாக ஆசிரியர்கள் கையாண்டுள்ளனர். கோவலன் கண்ணகியுடன் மதுரைக்குச் சென்று புறஞ்சேரியில் தங்கிருந்தபோது, அங்கு வந்தான் மாடலன் என்னும் மறையவன். அவன் கோவலனை முன்பே அறிந்திருந்தவன் என்பதால், அவன் நிலை கண்டு வருந்தி,

**இம்மை செய்தன யானறி நல்வினை**
**உம்மைப் பயன்கொல் ஒருதனி யுழந்தித்**
**திருத்தரு மாமணிக் கொழுந்துடன் போந்தது**
**விருத்தகோ பாலநீயென வினவ[14]**

என இப்பிறப்பில் செய்தவையெல்லாம் நல்வினைகளே. முற்பிறப்பில் செய்த தீவினைகளே நீயுறும் துயரங்களுக்கெல்லாம்

காரணம் என மாடலன் கூறுவதாக அமைத்து, ஊழ்வினையின் பயனே கோவலன் துன்புறுவது எனச் சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் படைத்தமைக்கேற்ப, கம்பரும் தம் காப்பியத்தில் புதுவதாகக் காரணத்தைப் படைத்துக் காட்டியுள்ளார் என்பது இதனால் புலனாகிறது.

2. தயரதன், கைகேயி கேட்ட வரத்தினைக் கொடுத்து மயங்கிவிழ, தன் எண்ணம் நிறைவேறியது என்ற மகிழ்ச்சியோடு கைகேயி உறங்கினாள். அன்று இரவு புலரும் காட்சிகளை வான்மீகி பாடாது இருக்க, கம்பர் இயற்கையாக நடைபெறுகின்ற நிகழ்ச்சிகளைத் தம் காப்பியத்திற்கு ஏற்பக் கற்பனையாகப் படைத்திருக்கின்றார்.

இரவு நீங்கியதைக் கம்பர், கைகேயின் கொடுமையான செயலைக் கண்ட இரவு என்னும் பெண் முன் நிற்கவும் நாணப்பட்டு,

**நாணினாள் என ஏகினாள் நளிர் கங்குல் ஆகிய நங்கையே**[15]

என, சென்றதாகப் படைக்கின்றார். கோழிகள் வைகறைப் பொழுதினில் கூவுகின்றன. அவைகள் தயரதனின் துன்பநிலை கண்டே தம் இறக்கையாகிய கைகளால் தம் வயிற்றின்மேல் அடித்துக்கொண்டு அழுவதாகப் படைக்கின்றார்.[16]

பறவைகளின் ஒலியானது, கைகேயியின் செயலை எண்ணி உளம் புழுங்கித் தம் வேதனைகளை வெளிப்படுத்துவதாகவும், யானைகள் இனி இராமனுடன் நாமும் வனம் செல்வோம் என்று எழுந்ததாகவும், விண்மீன்கள் மறைந்தது, முத்துப்பந்தலைப் பிரித்துவிட்டது போலவும், குமுதம் குவிந்தமை, கைகேயின் செயலைக் கண்டு ஒழுக்கமுடைய பெண்டிரின் வாய்கள் குவிந்தன போலவும், காலை இசைப்பாடல்கள் துன்பப்படுத்தியதாகவும், விளக்குகள் ஒளிமங்கியதாகவும், தன் குலத்துப் பிறந்த தயரதன் உயிர் தேயுமாறு கைகேயியின் கொடுமையான செயலை நினைத்துக் கோபத்துடன் சூரியன் தோன்றியதாகவும் அமைப்பது கம்பனின் படைப்பாற்றலை வெளிப்படுத்துவதாக அமைகிறது.[17]

மேலும் பொழுது புலரும் காட்சிகளைக் கற்பனை ஏற்றிப் படைத்தல் தமிழ்க் காப்பிய மரபு என்பதாலும் கம்பர் இங்ஙனம் படைத்துள்ளார்.

பொழுது புலர்ந்தமையை உணர்த்தப் புகுந்து, இந் நிகழ்ச்சிகளைக் கதைத் தொடர்புடையனவாகத் தற்குறிப்பேற் றத்தால் கம்பர் கூறும் கற்பனைகள் நயமிகவுடையன என்கிறது அ.ப.பதிப்பு.[18]

3. இராமன் காடேக வேண்டிய சூழல் ஏற்படும்போது உயிரும் உடலுமாக ஒன்றிய வாழ்க்கை வாழ்ந்தவர்களின் காதல் வழி அன்பினை வெளிப்படுத்தும் முகமாகக் கம்பர் பிரிவுத்துயர நிகழ்சியைத் தமிழ் இலக்கிய மரபினை ஒட்டிப் புதிதாகப் படைத்துள்ளார்.

குழைக்கின்ற கவரியின்றி, கொற்ற வெண்குடையுமின்றி மரவுரி தரித்துக் கொண்டு தன்மனை நோக்கி வருகின்றான் இராமன். அவன் தோற்றம் கண்டு நாடே துயருகின்றது. ஆனால் சீதை மட்டும் அவன் தோற்றத்தில் எந்த மாறுதலையும் கண்டதாகத் தெரியவில்லை.

பொன்னை உற்ற பொலன் சுழலோய் புகழ
மண்ணை உற்றது உண்டோ? மற்று இவ்வன்துயர்
என்னை உற்றது? இயம்பு என்று இயம்பினாள்,
மின்னை உற்ற நடக்கத்து மேனியாள்[19]

என அவள் தயரதனுக்கு ஏதேனும் இன்னல் நேர்ந்துவிட்டதோ என்றே கேட்கிறாள்.

கற்பணங்கு சீதைக்கு அவன் எந்த நிலையிலும் பட்டாபி இராமனாகவே, மன்னாதி மன்னனாகவே காட்சி தருகின்றான். அவன் குறை அவள் கண்ணில் படவேயில்லை என்பார் கமலா சங்கரன்.[20]

இராமன், பரதன் அரசு புரிவான். நான் தந்தையின் ஆணையை நிறைவேற்றக் காட்டில் தங்கி மீள்வேன். அதுவரை நீ வருந்தாதிரு என்று கூறக்கேட்ட சீதையின் வருத்தமெல்லாம்,

**நாயகன் வனம் நண்ணல் உற்றான் என்றும்**
**மேய மண் இழந்தான் என்றும் விம்மலள்**
**நீ வருந்தலை நீங்குவென் யான் என்ற**
**தீய வெம் சொல் செவி சுடத் தேம்புவாள்**[21]

என்பதேயாகும்.

எனவேதான் சீதை,

**என்னை என்னை யிருத்தி என்றாய்**[22]

என்று கேட்கிறாள். இராமன் வழிச்செல்லும் காட்டின் துன்பத்தினைக்கூறி உந்தன் கால்கள் வெம்மையைத் தாங்கா என்கிறான். அதுகேட்ட சீதை துன்புற்று,

**பரிவு இகந்த மனத்து ஒரு பற்று இலாது**
**ஒருவுகின்றவை ஊழி அருக்கனும்**
**எரியும் என்பது யாண்டையது? ஈண்டு, நின்**
**பிரிவினும் சுடுமோ பெருங்காடு? என்றாள்**[23]

என்று கேட்பவளாகப் படைக்கின்றார் கம்பர்.

குறுந்தொகையுள், தலைவன், தலைவியைப் பிரிந்து செல்ல வேண்டிய பாலைநிலத்தின் கொடுமையை இவள் தாங்கமாட்டாள் என்றுகூற,

**இனியவோ பெரும தமியோர்க்கு மனையே**[24]

என்று தோழி கூறுகின்றாள். இதனை உளங்கொண்டே கம்பர் தமிழிலக்கிய மரபினை வெளிப்படுத்தும் முகமாக **நின்பிரிவினும் சுடுமோ பெருங்காடு** எனப் படைப்பது புலனாகிறது.

கம்பர் தமிழர் மரபையொட்டி இராமன் சீதை திருமண வாழ்க்கையில் களவு மணத்தைப் படைக்கின்றார். கைக்கிளைப்படலம் அமைக்கின்றார். **நின்பிரிவினும் சுடுமோ பெருங்காடு** எனச் சீதை தமிழ் மரபையொட்டிப் பேசுமாறு படைக்கின்றார் என்கிறார் அ.பாண்டுரங்கன்.[25]

சீதை வாழ்ந்த பெருவாழ்வும் கணவனைப் பிரிந்து வாழ்வது கற்புடைய பெண்ணுக்கு அழகல்லவென்பதும் அவள் கூற்றால் அறிவதாகும் என்பார் தகடூரான்.[26] இதனையே

திருமேனியும், சீதையின் வாயிலாகக் கூறிக் காட்டுகின்றார் கம்பர் என்பார்.[27]

இங்ஙனம் கம்பர் தமிழ் இலக்கிய மரபுக்கேற்பக் காப்பி யத்தைப் படைத்தல் வேண்டிப் புதிதாம் நிகழ்ச்சிகளைப் படைத்து மொழிந்துள்ளார்.

4. வான்மீகி, தயரதன் இறந்தான் எனக் கூறுகின்றார். இறந்த தயரதன் வீடுபேறு அடைந்தமையைக் கம்பர்,

**இந்திரன் முதல்வராய கடவுளர் யாரும் ஈண்டிச்**
**சந்திரன் அனையது ஆங்கு ஓர் மானத்தில் தலையில் தாங்கி**
**வந்தனன் எந்தை தந்தை என் மனம் களித்து, வள்ளல்**
**உந்தியான் உலகில் உம்பர் மீள்கிலா உலகத்து உய்த்தார்[28]**

எனப் படைக்கின்றார். அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கினையும் அடிப்படையாகக் கொண்டு தமிழ்க் காப்பியங்கள் விளங்குகின்றன. இம்மரபினைக் கொண்ட கம்பர் தம் காப்பியத் திலும் வீடுபேற்றைப் படைத்துள்ளார் என்பது புலனாகிறது.

**கட்டமைப்பு நிலையை விளக்கும் படைப்புகள்**

காப்பிய நிகழ்ச்சிகள் அனைத்தும் மையக் கதையோடு இணைந்து, காப்பியத்தைக் கட்டமைப்புடையதாக விளங்கச் செய்கிறது. அவ்வகையில் இராவண வதத்தையே காப்பியத்தின் மையப்பொருளாகக் கொண்டுள்ள கம்பர், இதற்கேற்பப் புதுவதாக நிகழ்ச்சிகளை அமைத்துக் கொண்டுள்ளார்.

1. இராமன் முடிசூடப் போகின்றான் என்பதனைக் கூனி கூறக்கேட்ட கைகேயி,

**ஆய பேர் அன்பு எனும் அளக்கர் ஆர்த்து எழத்**
**தேய்வு இலா முக மதி விளக்கித் தேசு உறத்**
**தூயவள் உவகை போய் மிகச், சுடர்க்கு எலாம்**
**நாயகம் அனையது ஓர் மாலை நல்கினாள்[29]**

என மிகவும் மகிழ்ந்து மணிமாலையை அவளுக்குக் கொடுத்தாள். இத்தகைய தூய உள்ளத்தாளாகிய கைகேயி, பின் கொடியவளாக மாறியமைக்குரிய காரணத்தை,

**தீய மந்தரை இவ்வுரை செப்பலும், தேவி**
**தூய சிந்தனையும் திரிந்தது சூழ்ச்சியின் இமையோர்**
**மாயையும், அவர் பெற்ற நல் வரம் உண்மையாலும்**
**ஆய அந்தணர் இயற்றிய அருந்தவத்தாலும்**[30]

*எனத் தேவர்கள் செய்த மாயத்தால் எனப் புதியதாகக் காரணத்தைப் படைத்து மொழிகின்றார் கம்பர்,*

*இராமனை அயோத்திக்கு அழைத்துவரக் காட்டிற்குச் சென்றான் பரதன். பதினான்கு ஆண்டுகள் கழித்து வருவேன் என்ற இராமனிடம். தானும் காட்டில் தங்கப்போவதாகக் கூறினான். அதனைக் கேட்ட தேவர்கள், இராமன் அயோத்தி மீண்டால் தங்கள் எண்ணம் நிறைவேறாது என்றெண்ணி அசரீரியாக,*

**அவ்வழி இமையவர் அறிந்து கூடினார்,**
**இவ்வழி இராமனை இவன் கொண்டு ஏகுமேல்,**
**செவ்வழித்து அன்று நம் செயல் என்று எண்ணினார்**
**கவ்வையர், விசும்பிடைக் கழறல் மேயினார்**[31]

*எனத் தந்தையின் ஆணைப்படி பதினான்கு ஆண்டுகள் காட்டில் இருத்தல் இராமன் கடமை. அக்காலம் முழுவதும் நாட்டை ஆளுதல் பரதன் கடமை எனக் கூறியதாகக் கம்பர் படைத் துள்ளார்.*

*திருமாலாகிய இராமன் தயரதனுக்கு மகனாகத் தோன்றியமைக்குக் காரணம், தேவர்களுக்கு அரக்கர்களால் உண்டாகிய இன்னல்களை நீக்குவதற்கே எனத் திருஅவதாரப்படலத்தில் காப்பிய நோக்கத்தைப் படைத்துள்ளார் கம்பர். அக்காப்பிய நோக்கினை ஒட்டியே கைகேயி தூய சிந்தை திரிந்தது, தேவர்கள் மாயத்தால் என்கிறார். மேலும் இராமன் காடாளுவதும், பரதன் நாடாளுவதும், அவரவர்கள் கடமை எனத் தேவர்கள் உணர்த்தியதாகவும் படைத்துக் காட்டுகின்றார்.*

*இளங்கோவடிகள் சிலப்பதிகாரம் படைத்தமைக்குரிய காரணத்தைக் கூறுமிடத்து,*

**அரசியல் பிழைத்தோர்க்கு அறங்கூற்றாவதூஉம்**
**உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலும்**
**ஊழ்வினை உருத்து வந்தூட்டும்**[32]

என மூன்று காரணங்களைப் படைத்து மொழிகின்றார். அம்மரபினை ஒட்டியே கம்பரும் தன் காப்பிய நோக்கத்துக்குரிய காரணத்தைப் புதிதாகக் காட்டியுள்ளமை புலனாகிறது.

## தொகுப்புரை

மேற்கூறப்பட்ட செய்திகளின் மூலம் கீழ்க்காணும் முடிவுகள் கிடைக்கப்பெறுகின்றன.

1. கம்பர் தம் காப்பிய நோக்கிற்கேற்ப முன்னூலாகிய வான்மீகியில் கூறப்படாத புதிதாம் தன்மைகளைப் படைத்து வழங்கியுள்ளார். அவை எவையென வகைப்படுத்தப்பட்டுள்ளன.

2. காப்பியத் தலைவனாகிய இராமனை மனிதருள் சிறந்தவனாக வான்மீகி படைத்துக்காட்ட, கம்பர், திருமாலே இராமனாக அவதரித்தான் என்பதாகப் படைத்து அதற்கேற்பத் தம் காப்பிய நிகழ்ச்சிகளையும், கூற்றுக்களையும் அமைத்துக் கொண்டமை சுட்டப்பட்டுள்ளன.

3. தமிழ்ப் பண்பாட்டிற்கேற்பக் காப்பியத்தைப் படைத்த கம்பர் தமிழ் இலக்கிய மரபுகளையும் மறந்துவிடவில்லை என்பதைத் தம் காப்பியத்தில் உணர்த்தியுள்ளமை ஆய்ந்து நிறுவப்பெற்றுள்ளன.

4. காப்பிய நோக்கத்திற்கேற்ப நிகழ்ச்சிகளை அமைத்துக் கட்டமைப்புடைய காப்பியமாக அமைத்துள்ளார் என்பது தெளிவுறுத்தப் பெற்றுள்ளன.

## குறிப்பு விளக்கம்

1. அ. பாண்டுரங்கன், காப்பிய நோக்கில் கம்பராமாயணம், ப.77.
2. க. இராமா., க.க.ப. அயோ. காண்., கைகேயி சூழ்வினைப் படலம், பா.47., வரி.1-3.
3. மேற்படி நூல். வ்னம்புகுபடலம், பாட.38-46.
4. மேற்படி நூல். பால காண். தாடகை வதைப்படலம், பாட. 17-20.
5. மேற்படி நூல். அ.ப.ப. அயோ. காண். இரண்டாம் பகுதி, ப.76.
6. மேற்படி நூல். க.க.ப. மந்தரை சூழ்ச்சிப்படலம், பா.49, வரி.3-4.
7. நாலாயிரத்திவ்விய பிரபந்தம், திருச்சந்தவிருத்தம், திருமழிசை ஆழ்வார், பாசு.49.

8. பிரேமா நந்தகுமார், கோவை கம்பன் கழக விழா மலர், வான்மீகி, கம்பர், ப.20.
9. க. இராமா., க.க.ப. கிட். காண்., அரசியற்படலம், பா.12.
10. மேற்படி நூல். பாட.58-75.
11. கு. திருமேனி, தூய சிந்தையாள் கைகேயி, ப.169.
12. க. இராமா., க.க.ப. அயோ. காண்., மந்தரை சூழ்ச்சிப் படலம், பா.49, வரி.3-4.
13. மேற்படி நூல். பாட.58-75.
14. சிலம்., காண்.2, கா.15., வரி.91-92.
15. க. இராமா., க.க.ப. அயோ. காண்., கைகேயிசூழ்வினைப் படலம், பா.50, வ.4.
16. மேற்படி நூல். பா.51.
17. மேற்படி நூல். பாட.52-65.
18. மேற்படி நூல். அ.ப.ப. அயோ. காண். முதற்பகுதி, ப.195.
19. மேற்படி நூல். க.க.ப. அயோ.காண்., நகர்நீங்குபடலம், பா.216.
20. கமலாசங்கரன், கம்பன் கைவண்ணம், ப.22.
21. க. இராமா., க.க.ப. அயோ.காண்., நகர்நீங்குபடலம், பா.218.
22. மேற்படி நூல். பா.220, வ.3.
23. மேற்படி நூல். பா.222.
24. குறுந். பா.124., வ.4.
25. அ. பாண்டுரங்கன், காப்பிய நோக்கில் கம்பராமாயணம், ப.76.
26. தகடூரான்., கம்பன் ஓர் ஒப்பீடு., ப.263.
27. கு.திருமேனி, கம்பருக்கு கதை கொடுத்தவர் வான்மீகரா? ப.113.
28. க. இராமா., க.க.ப. அயோ. காண்., தைலம் ஆட்டு படலம், பா.60.
29. மேற்படி நூல். மந்தரை சூழ்ச்சிப்படலம், பா.60.
30. மேற்படி நூல். கைகேயி சூழ்வினைப்படலம், பா.85.
31. மேற்படி நூல். திருவடிசூட்டுபடலம், பா.130.
32. சிலம்., காண். 2., கா.13, வரி.55-57.

# முடிவுரை

இதுவரை கண்டறிந்த முடிவுகள் இப்பகுதியில் தொகுத்து காட்டப்படுகின்றது.

இராமனது வரலாற்றைக் கூறுவதினால் இராமாயணம் எனவும், மற்ற இராமாயணத்திலிருந்து வேறுபடுத்திக் காட்ட ஆசிரியர் பெயரை முன்கொண்டு வான்மீகி இராமாயணம் எனவும் வழங்கப்பெற்று வருகிறது.

வான்மீயின் வரலாறு, மற்ற இராமாயணங்கள் கூறும் வரலாறுகளிலிருந்து மாறுபட்டுத் திகழ்கிறது. இம்மாறுபாடு களினால் வான்மீகியின் காலமும் வேறுபடுகிறது. வான்மீகி கபாடபுரம் பற்றிய செய்திகளை இராமாயணத்தில் பொதிந் துள்ளமையால் பாண்டிய நாட்டில் கபாடபுரம் சிறப்புற்று விளங்கிய காலத்தவர் என்பது தெளிவாகிறது.

இராமாவதாரம் என்பதே கம்பர் தம் நூலுக்கு இட்டு வழங்கிய பெயர். இன்று வழங்கும் கம்பராமாயணம் என்பது முந்நூல் கருதி வழங்கப்பெறுவது.

கம்பருடைய வரலாற்றை அறிந்து கொள்வதற்குத் தக்க சான்றுகள் இன்மையால் இன்று வழங்கப்படும் வரலாறுகள் உண்மை வரலாறுகள் அல்ல என்பதை அறியமுடிகிறது.

தமிழ் மக்களிடையே கம்பருக்கு முன் மிகப் பழங்காலந் தோட்டே இராமாயணக் கதை வழங்கி வந்துள்ளமையை இராமா யணம் பற்றி அமைந்த பாடல்களும், நூல்களும் உணர்த்துகின்றது.

காப்பியக் கதையோட்டத்திற்குத் தடையாகவும், முரணாகவும் அமைந்த கூற்றுக்களையும், நிகழ்ச்சிகளையும், கம்பர் நீக்கம் செய்துள்ளார்.

காப்பிய மாந்தர்களின் பண்புகளுக்கு ஏற்றம் தராத முறையில் அமைந்த கூற்றுக்களையும், நிகழ்ச்சிகளையும் நீக்கி

உயர்ந்த பண்பட்ட பாத்திரங்களாக உயர்த்திக் காட்டியுள்ளார் கம்பர்.

கம்பர், கதை நிகழ்ச்சிகளில் சூழ்நிலையைக் காப்பியத்திற் கேற்ப மாற்றம் செய்துள்ளார்.

வான்மீகத்தில் பின்னர் நடக்கும் நிகழ்ச்சியை முன் நிகழ்வ தாகவும், முன்னர் நடந்த நிகழ்ச்சியைப் பின்னர் நிகழ்வதாகவும் கம்பர் காலமாற்றம் செய்துள்ளார்.

வான்மீகத்தில் ஓர் இடத்தில் நிகழும் நிகழ்ச்சியை மற்றோர் இடத்தில் நிகழ்வதாக மாற்றம் செய்துள்ளார்.

கம்பர், தம் காப்பியப் போக்கிற்கேற்ப, சில மாந்தர் கூற்றுக் களை வேறொரு மாந்தரின் கூற்றாகவும், சிலவிடங்களில் கேட்போரையும், ஒருவரின் செயலை மற்றொருவர் செயலாகவும் மாற்றி அமைக்கின்றார்.

காப்பியத் தலைவனாகிய இராமனை மனிதருள் சிறந்த வனாக வான்மீகி படைத்துள்ளார். கம்பர் திருமாலே இராமனாக அவதரித்தான் என்பதாகப் படைத்து அதற்கேற்ப, காப்பிய நிகழ்ச்சிகளையும் கூற்றுக்களையும் புதிதாகப் படைத்துள்ளார்.

தமிழ்ப் பண்பாட்டிற்கேற்ப காப்பியத்தைப் படைத்த கம்பர் தமிழ் இலக்கிய மரபுகளையும் மறந்துவிடவில்லை என்பதைக் காப்பியத்தில், படைத்துள்ள இலக்கிய மரபுகள் உணர்த்து கின்றன.

# துணைநூற் பட்டியல்


அருணகிரி. அ., கம்பன் காட்டும் தீராக்காதலன், வானதி பதிப்பகம், சென்னை-17. முதல் பதிப்பு, 1984.

அருணாசலம். மு., தமிழ் இலக்கிய வரலாறு - ஒன்பதாம் நூற்றாண்டு, 1, காந்தி வித்தியாலயம், திருச்சிற்றம்பலம், முதல் பதிப்பு, 1975.

இராகவையங்கார். ரா., தமிழ் வரலாறு, அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பதிப்பு, அண்ணாமலை நகர் சிதம்பரம், இரண்டா ம் பதிப்பு, 1952.

இராசமாணிக்கனார். மா., தமிழ் இலக்கண இலக்கியக்கால ஆராய்ச்சி, பாரி நிலையம், சென்னை-1. முதல் பதிப்பு 1957.

இராமசாமிப்புலவர். சு.அ., கம்பராமாயண வசனம் முதற்பகுதி, கழக வெளியீடு, மூன்றாம் பதிப்பு, 1976.

இராமன். ப., தமிழ் இலக்கிய வரலாறு, சேகர் பதிப்பகம், சென்னை-1. முதல் பதிப்பு, 1961.

ஔவை துரைசாமிப்பிள்ளை. சு., தமிழ் நாவலர் சரிதை, கழக வெளியீடு, சென்னை. முதல் பதிப்பு, 1972.

கமலக்கண்ணன். இரா.வ., உலகப் பெருங்கவிஞர் கம்பர், மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், முதல் பதிப்பு, 1984.

கமலாசங்கரன்., கம்பன் கைவண்ணம், பூரம் பப்ளிகேஷன்ஸ், சென்னை-34. முதல் பதிப்பு, 1978.

கோதண்டராமன். ப., உலகப் பெருங்கவிஞர்கள், மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், இரண்டாம் பதிப்பு, 1972

கோபாலகிருஷ்ணமாசாரியர். வை.மு., கம்பராமாயணம் - அயோத்தியா காண்டம், வை.மு.கோபாலகிருஷ்ண மாசாரியர் கம்பெனி, சென்னை-5. ஐந்தாம் பதிப்பு, 1958.

கோவிந்தசாமி. மு., இலக்கியக் காலம், பாரி நிலையம், சென்னை-1. முதல் பதிப்பு, 1956.

சக்திதாசன் சுப்பிரமணியன், ஜலஜா சக்திதாசன், கம்பன் கவித்திரட்டு, பாலகாண்டம், நித்தியானந்த ஜோதி நிலையம், சென்னை-28, முதல் பதிப்பு, 1986.

சதாசிவப் பண்டாரத்தார். தி.வை., இலக்கிய ஆராய்ச்சியும், கல்வெட்டுக்களும், தொல்காப்பியர் நூலகம், சென்னை-14. முதல் பதிப்பு, 1961.

சாமிநாத ஐயர்.உ.வே., ஸ்ரீமத் கம்ப ராமாயணம், அயோத்தியா காண்டம், உ.வே.சா. நூல்நிலையம், சென்னை, முதல் பதிப்பு, 1972.

செகவீரபாண்டியனார், கம்பன் கலைநிலை, முதல் பாகம், சி. வரதராஜலு நாயுடு பதிப்பு, மதுரை, முதல் பதிப்பு, 1941.

செல்வகேசவராய முதலியார், கம்பநாடர், கழக வெளியீடு, சென்னை, முதல் பதிப்பு, 1974.

சிவஞானம், ம.பொ., கம்பரும் காந்தியடிகளும், சேகர் பதிப்பகம், சென்னை-78, முதல் பதிப்பு, 1981.

சுந்தரமூர்த்தி. கு., திருக்குறள் உரைத்திறன், ஹோமியோபதி அச்சகம், கும்பகோணம், முதல் பதிப்பு, 1981.

சுப்பிரமணியபிள்ளை. கா., இலக்கிய வரலாறு, முதல்பாகம், ஆசிரியர் நூற்பதிப்புக் கழகம், சென்னை-1. ஆறாம் பதிப்பு, 1968.

ஞானசம்பந்தன். அ.ச., கம்பன் புதிய பார்வை, கம்பர் கழக வெளியீடு, சென்னை, முதல் பதிப்பு, 1984.

................ கம்பன் கலை, கழக வெளியீடு, சென்னை-18. முதல் பதிப்பு, 1988.

தகடூரான், கம்பன் ஓர் ஒப்பீடு, தேன் தமிழ்ப் பதிப்பகம், சேலம்-1. முதல் பதிப்பு, 1980.

திருமேனி. கு., கம்பருக்குக் கதை கொடுத்தவர் வான்மீகரா? இலக்கிய நிலையம், திருச்சி-2. முதல் பதிப்பு, 1966.

................ தூய சிந்தையாள் கைகேயி, கோவல நிலையம், திருச்சி-8. முதல் பதிப்பு, 1979.

நச்சினார்க்கினியர், தொல்காப்பியம், பொருளதிகாரம், சி.கணேசையர் பதிப்புஅச்சகம், முதல் பதிப்பு, 1948.

நாயுடு. அ.கி., கவிச்சக்கரவர்த்தி கம்பர் வரலாறு, முப்பால் நிலையம், கோவை-4, முதல் பதிப்பு, 1963.

பாண்டுரங்கன். அ., காப்பிய நோக்கில் கம்பராமாயணம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை-98. முதல் பதிப்பு, 1989.

வையாபுரிப்பிள்ளை. எஸ்., தமிழ்ச் சுடர்மணிகள், பாரி நிலையம், சென்னை, முதல் பதிப்பு, 1968.

யாழ்ப்பாணம் சதாசிவம்பிள்ளை., தமிழ் இலக்கியத் திரட்டு, இராதாகிருஷ்ணையர் சீனிவாச வரதாசாரி அண்டு கோ, சென்னை, முதல் பதிப்பு, 1985.

................ அகநானூறு, கழக வெளியீடு, சென்னை, மூன்றாம் பதிப்பு, 1954.

................ கம்பராமாயணம், அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிப்பு, முதல் பதிப்பு, 1959.

................ கம்ப ராமாயணம், கம்பன் கழகம், சென்னை, நான்காம் பதிப்பு, 1984.

................ கலித்தொகை, நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை, இரண்டாம் பதிப்பு, 1981.

................ கலைக்களஞ்சியம், தொகுதி இரண்டு, தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை, 1955.

................ சிலப்பதிகாரம், கழக வெளியீடு, சென்னை, இரண்டாம் பதப்பு, 1973.

................ சீவகசிந்தாமணி, சைவ சித்தாந்த மகாசமாஜம், சென்னை, 1941.

................ நாலாயிரத்திவ்வியப் பிரபந்தம், மயிலை மாதவதாணி பதிப்பு, சென்னை, 1962.

................ நாலாந்திருமுறை, தருமையாதீன வெளியீடு, தருமபுரம், 1957.

................ புறத்திரட்டு, கழக வெளியீடு, சென்னை, முதல்பதிப்பு, 1972.

................ புறநானூறு, அருணா பப்ளிகேஷன்ஸ், சென்னை-17. முதல் பதிப்பு, 1958.

................ பெருங்கதை, கேசரி அச்சுக் கூடப்பதிப்பு, சென்னை, 1935.

................ மணிமேகலை, கழக வெளியீடு, சென்னை, முதல் பதிப்பு, 1985.

................ வீரசோழியம், கழக வெளியீடு, சென்னை, இரண்டாம் பதிப்பு, 1970.

................ ஸ்ரீமத் வான்மீகி ராமாயணம், தி லிட்டில் பிளவர் கம்பெனி, சென்னை-17. ஆறாம் பதிப்பு, 1990.

## மலர்கள்

ஆய்வுக்கோவை, மூன்றாவது கருத்தரங்கு மலர், இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், அண்ணாலை நகர், 1971.

ஆய்வுக்கோவை, நான்காவது கருத்தரங்கு மலர், இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம், அண்ணாமலை நகர், 1972.

கம்பன் மணிமலர், கம்பன் கழகம், காரைக்குடி, 1985.

கம்பன் விழாமலர், கம்பன் கழகம், புதுக்கோட்டை, 1989.

கம்பன் மலர், கம்பன் கழகம், கோவை, 1992.

செந்தமிழ், தொகுதி மூன்று, 1904, 1905.



கதையமைப்பில்

# வான்மீகியும் கம்பனும்



இ. மார்ட்டின் ஆரோக்கியராஜ்

காருண்யா